# சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள்

திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழக
முனைவர் (Ph.D) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**மா. சத்யா**
பதிவு எண்.45247/Ph.D.K6/Tamil/Part Time/January 2014

நெறியாளர்

முனைவர் **இரா. திராவிடராணி**
துறைத்தலைவர்



**தமிழ்த்துறை**
**குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர்**
**கலைக்கல்லூரி (தன்னாட்சி)**
**தஞ்சாவூர்-613007.**

**டிசம்பர், 2019**

முனைவர் **இரா. திராவிடராணி**,
துறைத்தலைவர், ஆய்வு நெறியாளர்,
தமிழ்த்துறை உயராய்வு மையம்,
குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),
தஞ்சாவூர்-613 007.

---

நாள் :

# கருத்துக் களவின்மைச் சான்றிதழ்
## (Plagiarism-free Certificate)

என் மேற்பார்வையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட மா. சத்யா (பதிவு எண். 45247/Ph.D.K6/Tamil/Part Time/January 2014) அவர்கள் தம் ஆய்வேட்டில் சான்றுகளுக்கு மட்டுமே அறிஞர்கள், வல்லுனர்கள், போன்றோர் கருத்துக்களைப் பயன்படுத்தியுள்ளார். அச்சான்றுகள் மிக இன்றியமையா இடங்களில் மட்டும் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. பல்கலைக்கழக விதிமுறை 10.3இன்படி Urkund (Analysis Result) மென்பொருள் சோதனைக்குட்பட்டு பெறப்பட்ட அறிக்கை இவ்வாய்வேட்டின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது என்று சான்றளிக்கிறேன்.

இரா. திராவிடராணி

மா.சத்யா,
பதிவு எண். 45247/Ph.D.K6/Tamil/Part Time/January 2014,
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த் துறை,
குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி),
தஞ்சாவூர்-613 007.

## ஆய்வாளர் உறுதிமொழி

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழக பகுதிநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்ஆய்வேடு என்னுடைய சொந்த முயற்சியினால் உருவாக்கப்பெற்றது என்றும், இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : தஞ்சாவூர் (மா.சத்யா)

நாள் : ஆய்வாளர்

# நன்றியுரை

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி அளித்த திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பதிவாளர், ஆட்சிக்குழுவினர் உள்ளிட்ட அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர், குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி), முதல்வர், முனைவர் அ. திருவள்ளுவர் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்கிக்கொள்கிறேன்.

என் ஆய்வுப் பணி செம்மையாக அமைவதற்கு பல வகையிலும் ஆக்கமும் ஊக்கமும் தந்து நெறிப்படுத்தி என் வாழ்விற்கு வழிகாட்டியாக விளங்கிய தஞ்சாவூர் குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் இரா. திராவிடராணி அவர்கட்கு என் மனம் நிறைந்த நன்றி என்றென்றும் உரியது.

என் ஆய்வுக்கு, ஆய்வறிஞர் குழு உறுப்பினர்களாக அமைந்து, நல்ல பல அறிவுரைகளும் ஆலோசனைகளும் வழங்கிய கும்பகோணம், அரசினர் கலைக் கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறை, இணைப் பேராசிரியர் முனைவர் செ. காளிமுத்து அவர்களுக்கும், தஞ்சாவூர், குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி), தமிழ்த்துறை, உதவிப் பேராசிரியர் முனைவர் சா. பெரியநாயகி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வு சிறப்புற வேண்டி அறிவுரை வழங்கிய முனைவர் லில்லிநேசம், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, குந்தவை நாச்சியார் அரசினர் மகளிர் கலைக் கல்லூரி (தன்னாட்சி), தஞ்சாவூர் அவர்களுக்கும், முனைவர் சு. மாதவன், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, மாட்சிமை தாங்கிய மன்னர் கல்லூரி (தன்னாட்சி), புதுக்கோட்டை அவர்களுக்கும்,

முனைவர் ப. லெனின்குமார், உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, டி.எம்.ஜி கலை மற்றும் அறிவியல் கல்லூரி, சென்னை அவர்களுக்கும், எனது கல்லூரி பேராசிரியர்களுக்கும், என் ஆய்வு சிறப்புற வேண்டி நூல்கள் கொடுத்து உதவிய துறை நூலகர், கல்லூரி நூலகர், பொது நூலகர் ஆகிய அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் துணைநின்று நற்கருத்துக்களைக் கூறி வழிகாட்டிக் கல்வி சார்ந்த ஊக்கத்தை ஏற்படுத்தி ஆய்வு செய்யத் தேவையான உதவிகளைச் செய்த எனது அன்பிற்கினிய தந்தை ப. மாரிமுத்து மற்றும் தந்தைக்கு நிகராக எனது சுமைகளைத் தனதாக்கிக் கொண்ட என் அன்பிற்கினிய கணவர் செ. சந்திரசேகர், எனது தாய் மா. செல்லம்மாள், உடன் பிறந்தோர் மா. சிவக்குமார், மா. மகேஸ்வரி ஆகியோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டினை நன்முறையில் கணினி அச்சு செய்த கிரியா கிராபிக்ஸ் நிறுவனர் திரு.வெ. கருணாநிதி அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

மா. சத்யா

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழ் இலக்கியம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்களின் பண்பாட்டு மரபினைக் கூறும் சிறந்த இலக்கியமாகப் போற்றப்படுகிறது. உலகில் சிறப்போடு விளங்கிய உயர்தனிச் செம்மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்றேயாகும். அத்தகையப் பழமையும் வளமையும் கொண்ட தமிழ் மொழியில் தோன்றிய இலக்கியங்கள் உலகச் சிறப்புடையனவாகும். இதனை உலக வரலாற்று ஆசிரியர்கள் ஒருமனதாக ஏற்றுக்கொள்கின்றனர். இவர்கள் இந்தியப் பண்பாட்டு வளர்ச்சிக்கு வழங்கியுள்ள கொடையை அளவிடமுடியாது.

சங்க அக இலக்கியங்களில் ஒவ்வொரு பாடலும்-வரியும்-சொல்லும் தமிழரின் பண்பாட்டு மரபினை பறைசாற்றும் பாடங்களாகப் பாங்குறும் வகையில் மிளிருகின்றன. வந்தாரை வாழவைக்கும் தமிழ்நாடு பண்பாட்டு மரபில் சிறப்புற்று விளங்கி வருகின்றது. சங்க அக இலக்கியத்தில் பெரும்பகுதி வாழ்க்கை நிலையினை அப்படியே படம் பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடியாகத் திகழ்கின்றது. இதனடிப்படையில் சங்க அக இலக்கியத்தில் பண்பாட்டு மரபுகளை ஆராய்வதாக இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

மனிதனை மற்ற உயிர்களிடமிருந்து வேறுபடுத்தி, பண்படுத்திக் காட்டக் கூடியது பண்பாடு. முன்னோர் ஒரு பொருளுக்கு வழங்கிய சொல்லாலே பின்னோரும் வழங்குவது மரபாகும். இவற்றினை சங்க அக இலக்கியப் பாடல்களோடு எடுத்து இயம்பும் நோக்கில் 'சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள்' என்னும் தலைப்பில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பெற்றுள்ளது.

## ஆய்வு நோக்கம்

பண்பாட்டு மரபு என்பது காலப்போக்கில் அழிந்துக் கொண்டு வருகின்றது. அதனை நினைவுப்படுத்தும் விதமாகவும் தமிழர்களின் அடையாளங்களை வெளிப்படுத்தும் விதமாகவும் சித்தரிக்கப்படுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு கருதுகோள்

சங்க அக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள விவரங்களையும், செய்திகளையும் திரட்டி பண்பாட்டு மரபோடு ஆராய்வதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு அணுகுமுறை

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் எனும் இவ்வாய்வு பகுப்பாய்வு முறை, தொகுப்பாய்வு முறை,

விளக்கமுறை, ஒப்பீட்டு முறை ஆகிய அணுகுமுறைகள் இயல்களின் பொருண்மைக்கேற்பப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு எல்லை

எட்டுத்தொகை நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய அகநூல்களும், பத்துப்பாட்டு நூல்களான முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு முதலிய அகநூல்களும் ஆய்வுக்குரிய எல்லையாகக் கருதப்படுகின்றன.

## முன்னாய்வுகள்

ஆ.முருகேசனின் 'பத்துப்பாட்டில் பழந்தமிழரின் பண்பாட்டு மரபுகள்' என்ற ஆய்வும், க. ஞானசங்கரியின் 'சங்க இலக்கியம் காட்டும் இல்லற நெறி', த. தவமணியின் 'சங்க இலக்கியத்தில் உணவு வகைகளும் விருந்தோம்பல் முறைகளும்' என்ற ஆய்வும், ஜெ. ஜெயபிரியாவின் 'எட்டுத்தொகையில் மக்கள் வாழ்வியல்', க. லெனினின் 'எட்டுத்தொகை அக இலக்கியங்கள் காட்டும் சமூகம்' போன்றவை இவ்வாய்வுக்கு ஆய்வு முன்னோடியாகும்.

மேலும், சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகளைப் பற்றி அறிவதற்கு சாமி. சிதம்பரனாரின் 'தமிழர் வாழ்வும் பண்பாடும்', 'எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்', பக்தவச்சல பாரதியின் 'பண்பாட்டு மானிடவியல்', அ. கிருட்டிணனின் 'தமிழர் பண்பாட்டியல்',

அ. தட்சிணாமூர்த்தியின் 'தமிழர் நாகரிகமும் பண்பாடும்', கு. இராசரெத்தினத்தின் 'சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்' முதலியன இவ்வாய்விற்கு முன்னாய்வுகளாக எடுத்துக் கொள்ளப்பெற்றன.

### ஆய்வு மூலங்கள்

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் தலைப்பிலான இவ்வாய்விற்கு மூலங்களாகக் கொள்ளப்பெற்ற நூல்கள் முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள் என இருவகையாக அமைக்கப் பெற்றுள்ளன.

### முதன்மைச் சான்று

சங்க அக இலக்கிய நூல்கள் முதன்மைச் சான்றுகளாக எடுத்துக் கொள்ளப்பட்டன.

### துணைமைச் சான்று

சங்க அக இலக்கியம் பற்றிய நூல்களும், பண்பாட்டு மரபுகள் தொடர்பான நூல்களும், திறனாய்வு நூல்களும், ஆய்வேடுகளும், கட்டுரைகளும், சமூகம் பற்றிய நூல்களும், இல்லறம் பற்றிய நூல்களும், சமயம் பற்றிய நூல்களும், கலைகள் பற்றிய நூல்களும் இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

## ஆய்வுப் பயன்

சங்க அக இலக்கியங்களில் மக்களின் வாழ்க்கை முறைகளை பண்பாட்டு மரபோடு எடுத்துக்கூறுவதே இவ்வாய்வின் பயனாக அமைந்துள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை, நீங்கலாக ஐந்து இயல்களைத் தன்னகத்தே கொண்டமைகிறது. அவை,

1. சங்க அக இலக்கியமும் பண்பாட்டு மரபும்
2. இல்லறப் பண்பாட்டு மரபு
3. கலைப் பண்பாட்டு மரபு
4. சமயப் பண்பாட்டு மரபு
5. சமூகப் பண்பாட்டு மரபு

என்பனவாம்.

'சங்க அக இலக்கியமும் பண்பாட்டு மரபும்' என்னும் முதல் இயலில் சங்கம், சங்கம் எனும் சொல் தோன்றக் காரணம், சங்க காலம், செப்பேடு ஆதாரம், இலக்கியம், அகம், அக இலக்கிய வகைமை, அகத்திணைகள், அக நூல்கள் வரிசைப்படுத்துதல், அதன் விளக்கம், பண்பு, பண்பாடு விளக்கம், பண்பாடு சொல்லாட்சிப் பயன்பாடு, மரபு, மரபு சொல்லும் பொருளும், மரபு பற்றி இலக்கியங்கள், மரபுகள், மரபுத்

தொடர்ச்சிக்கான காரணங்களும் பயன்களும், மரபு மாற்றத்திற்கான காரணங்களும் விளைவுகளும், பண்பாட்டு மரபுகளின் இன்றைய நிலை போன்ற செய்திகள் விளக்கப்பெற்றுள்ளன.

'இல்லறப் பண்பாட்டு மரபு' எனும் இரண்டாம் இயலில், இல்லறம் விளக்கம், ஆடவர் மகளிர் அறம், இல்லறமும் பெண்களும், இல்லறமும் இனிமையும், பெண்களின் இயல்பு, இல்லற வாழ்வின் தனித்தன்மைகள், ஒப்புமை, இறைவழிபாடு, திருமணம், சங்க இலக்கியத்தில் காதல் களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை, திருமணம் - நேரம் பார்த்தல், திருமணச் சடங்குகள், பூவணியும் உரிமை, நிச்சயம் செய்தல், மணமுறை, திருமண வகைகள், விருந்தோம்பல், விருந்தோம்பும் வளமனை, விருந்தோம்பலின் திண்ணை, விருந்தோம்பலுக்குரியவர்கள், துறவிகள், வறுமையில் விருந்தோம்பல், விருந்தினரைப் பேணுதல், மக்கட்பேறு, மழலை மொழி, மக்கட்பேற்றின் இனிமை, குடிப்பெருமை, நன்மக்கள் அருமை, ஈதல், ஈகையறம், ஈதலும் வாழ்வும் என்பன சுருக்கமாகச் சுட்டப்பெறுகின்றன.

'கலைப் பண்பாட்டு மரபு' எனும் மூன்றாம் இயலில், கலை, கலைத் தோற்றம், கலை பற்றி அறிஞர்களின் விளக்கம், கலையின் வகைகள், கட்டடக்கலை, ஓவியக்கலை, சங்ககால ஓவியக்கலை, இசைக்கலை, சங்க இலக்கியத்தில் இசை, இசைக்கருவிகள், சிற்பக்கலை, ஆடற்கலை, கூத்தின் வகைகள் என்பன இவ்வியலில் விளக்கப்படுகின்றன.

‘சமயப் பண்பாட்டு மரபு’ எனும் நான்காம் இயலில், சமயம் விளக்கம், சமயம் பற்றி அறிஞர்களின் கருத்து, மதம், சமயம் தோற்றம், வழிபாடு, வழிபாட்டின் தோற்றமும் வரலாறும், இறை வழிபாடு, ஐவகை நில வழிபாடு, வழிபாட்டின் வளர்ச்சிக்கான மூலங்கள், திருவிழாக்கள் என்பன சுருக்கமாகச் சுட்டப்பெறுகின்றன.

‘சமூகப் பண்பாட்டு மரபு’ எனும் ஐந்தாம் இயலில், சமூகம், உணவு, உணவுமுறை, உணவு வகைகள், ஐவகை நிலத்தில் உணவு, ஆடை, அணிகலன், குடியிருப்புகள், விளையாட்டுகள், நம்பிக்கைகள், சகுனங்கள், தொழில்கள், பழக்கவழக்கங்கள், இவை அனைத்தும் பற்றிய பிற விளக்கங்களும் இவ்வியலில் ஆய்வு மேற்கொள்ளப் பெற்றன.

## முடிவுரை

ஒவ்வொரு இயலிலும் கண்ட செய்திகளைத் தொகுக்கப்பெற்று அவை இவ்வாய்வின் முடிவுகளாகத் தரப்பெற்றுள்ளன. இவ்வாய்வுத் தொடர்பாக பல்வேறு அறிஞர்கள் ஆராய்ந்துள்ளர். தற்போது ஆராய்ந்தும் வருகின்றனர். எதிர்கால ஆய்வாளருக்கு ஆய்வு செய்வதற்குக் களங்கள் சொல்லப் பெறுகின்றன.

# இயல் 1

## சங்க அக இலக்கியமும் பண்பாட்டு மரபும்

### முன்னுரை

சங்கம் வைத்து தமிழ்மொழியை வளர்த்த காலத்தைச் சங்க காலம் என்று குறிப்பிடுவர். அச்சங்க காலத்தில் எழுந்த இலக்கியமே சங்க இலக்கியங்களாகும். அவை பழந்தமிழரின் வரலாற்றினை அறிய உதவும் வரலாற்றுச் சாதனங்களாகவும் திகழ்கின்றன. சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் அக இலக்கியம், பண்பாடு, மரபு பற்றியச் செய்திகளை ஆராய்வதாக இவ்வியல் அமைக்கப்பட்டுள்ளது.

### சங்கம்

தமிழ்மொழியின் கட்டமைப்பான இலக்கியங்களையும், இலக்கணத்தையும் வளர்ப்பதற்கும், ஆராய்வதற்கும் உண்டான அமைப்பே சங்கம் ஆகும். தென் மதுரையில் முதல் சங்கமும், தென் மதுரை கடலில் மூழ்கி அழிந்ததனால் அதனையடுத்து உள்ள கபாடபுரத்தில் இரண்டாம் தமிழ்ச்சங்கமும், அப்பகுதியும் கடல்கோளில் மூழ்கிய பிறகு தற்போதைய மதுரையில் மூன்றாம் தமிழ்ச்சங்கத்தையும் நிறுவியுள்ளனர். இதன்மூலம் சங்கம் என்ற அமைப்பு இருந்ததை நம்மால் அறியமுடிகிறது.

சேர, சோழ, பாண்டியர் மூவேந்தருள் பாண்டியர்கள் தமிழ்ச்சங்கத்திற்காக அதிகம் பாடுபட்டும், பல உதவிகள் செய்தும், புலவர்களைப் போற்றியும் வந்துள்ளதை,

***"வீயாத் தமிழுடையான் பல்வேற் கடற்றானைப் பாண்டியன்"***[1]

***"சோமன் வழி வந்த பாண்டிய நின்நாடுடைத்து நல்ல தமிழ்"***[2]

***"தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்***

***மகிழ்நனை மறுகின் மதுரை"***[3]

என்பன போன்ற இலக்கிய அடிகள் சங்கம் இருந்து செயல்பட்டதை உறுதிபடுத்துகின்றன.

பிற்கால இலக்கியங்களான காப்பியங்கள் சைவத்திருமுறைகள், வைணவ பாசுரங்கள் போன்றவற்றில் இடம்பெற்றுள்ளதை,

***"தென் தமிழ் மதுரை"***[4]

***"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி***

***நற்கனக கிழிதருமிக்கு அருளினோன் காண்"***[5]

***"உயர்மதி கூடலின் ஆய்ந்த வொன் தீந்தமிழ்"***[6]

***"சங்கத் தமிழ்"***[7]

என்ற பாடலடிகளும் சங்கம் இயங்கி வந்தது என்பதை உறுதிப்படுத்துகின்றன.

## சங்க காலம்

மூன்று தமிழ்ச் சங்கங்கள் இருந்தபோதும் இறுதியில் செயல்பட்ட மூன்றாம் தமிழ்ச்சங்கத்தில் தோன்றியவையே இன்று சங்க இலக்கியங்களாக இருந்து வருகின்றன. இவை கி.பி 2ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்டவை என்று இந்த அடிப்படையில் இறுதியில் செயல்பட்டுவந்த மூன்றாம் தமிழ்ச் சங்கத்தின் காலம் கி.மு 500 கி.பி.200 என்றளவில் முடிவு செய்யப்பட்டுள்ளது என்பதனால் இலக்கியங்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள் போன்றனவற்றை ஆதாரமாகக்

கொண்டு கி.மு.500 கி.பி.200 வரையிலான காலகட்டத்தில் தமிழ்ச்சங்கம் திறம்பட இயங்கி வந்துள்ளதென்பதை அறியமுடிகின்றது.

சங்கம் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள் பண்டைய இலக்கியங்கள், காப்பியங்களில் இடம் பெற்றுள்ள தொன்மையான கருத்துக்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், இலக்கண, இலக்கிய உரைகளில் உரையாசிரியர்களால் சுட்டப்பட்டுள்ள மிகமிக முக்கியமானக் கருத்துக்கள் போன்றவைகளை ஆதாரமாகக் கொண்டனவாக அமைந்துள்ளன. அறிஞர்களின் முடிவுகள் பலரால் ஏற்கக் கூடியதாகவும், சிலரால் மறுக்கக் கூடியதாகவும் இருந்துவருவதைத் தமிழிலக்கிய வரலாறுகள் சுட்டிக் காட்டியுள்ளன.

“பாண்டியர்கள் மூன்று சங்கங்கள் அமைத்து தமிழ் வளர்த்தது உண்மையே என்ற கருத்தை டாக்டர். உ.வே. சாமிநாதய்யர், கா.சு. பிள்ளை, கா.அப்பாத்துரையார், தேவநேயப்பாவாணர் போன்றோர் வலியுறுத்திக் கூறியுள்ளனர்.”[8] என சி.கி. இலட்சுமணன் குறிப்பிட்டுள்ளார். மதுரையைத் தலைநகரமாகக் கொண்டது பாண்டிய நாடு என்பதனாலும், சேர நாட்டிற்கும், சோழ நாட்டிற்கும் இடையில் நடுநாயகமாக பாண்டியநாடு அமைந்திருந்ததனாலும் புலவர்கள் வரவும், செல்லவும், தங்கவும் கூடியதாகையால் இங்கு சங்கம் இருந்தமையை இதன் அறிய முடிகின்றது.

## செப்பேடு ஆதாரம்

சங்கம் இருந்ததைத் தெளிவுப்படுத்தும் ஆவணங்களில் தளவாய்புரம் செப்பேடு மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. இதில் ஆறாம் ஏட்டில்

***“தென் மதுரா புரம் செய்தும் அங்கதனில்***
***அருந்தமிழ்ச் சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்”[9]***

என எழுதப்பட்டுள்ளது. இதன்படி தமிழ்ச்சங்கம் முதன்முதலில் தென்மதுரையில் இயங்கி வந்துள்ளதென்பதை அறிய முடிகின்றது.

## சின்னமனூர்ப் பெரிய செப்பேடு

மதுரை மாவட்டத்திலுள்ள சின்னமனூரில் கிடைத்துள்ள மிகவும் நீண்டதும், அகலமான செப்புத் தகடுகளிலும்,

***"மஹாபாரதம் தமிழ்ப் படுத்தும்***
***மதுராபுரிச் சங்கம் வைத்தும்"***[10]

என்ற குறிப்பு எழுதப்பட்டுள்ளது. இதனால் தமிழ்ச்சங்கம் இருந்ததையும், அங்கு மகாபாரதம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதையும் அறிய முடிகின்றது. நக்கீரர் உரை எழுதியுள்ள இறையனார் அகப்பொருள் உரையிலேயே "மூன்று சங்கங்கள் இருந்தன என்பதை உறுதிப்படுத்தும்படியான முதல் செய்திகள் இடம்பெற்றுள்ளன."[11] இதில் இடம் பெற்றுள்ள கருத்துக்களை ஏற்போரும் மறுப்போரும் உண்டு.

"முதல் ஊழியின் இறுதிக்கண் தென் மதுரையகத்து தலைச்சங்கம் இருந்தது."[12] என்ற கருத்தைச் சிலப்பதிகாரம் அடியார்க்கு நல்லார் உரையை மேற்கோள் காட்டி உ.வே. சாமிநாதய்யர் விளக்கியுள்ளார். இவ்வுரை சிலப்பதிகாரம் வேனில் காதையில் இடம் பெற்றுள்ளது.

சிலப்பதிகாரம் - பாயிரத்திற்கு அடியார்க்கு நல்லார் எழுதியுள்ள உரையை ஆதாரமாகக் கொண்டு "இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தில் இடைச் சங்கம் அமைந்திருந்தது."[13] என்ற கருத்தை உ.வே.சா குறிப்பிட்டுள்ளார்.

## இலக்கியம்

மொழியின் வளர்ச்சியே இலக்கியம் ஆகும். இலக்கியம் மனித வாழ்வியல் உணர்வுகளை விளக்குவனவாக அமைகின்றது. இதனைப் பின்வரும் சான்றுகளின் மூலம் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது

“மொழி என்பது மனிதனின் சிந்தனைக்கோ, கற்பனைக்கோ விருந்தாக அமைவதாய், ஒரு குறிப்பிட்ட வடிவம் கொண்டதாய் உள்ளது எதுவோ அது இலக்கியமாகும்”[14] என சு. பாலசந்திரன் அவர்கள் கூறுகிறார்.

“இலக்கியம் மனிதனின் பரந்துப்பட்ட உணர்வுகளின் பிரதிபலிப்பு. மனிதன் முதன்முதலில் இலக்கியத்தைப் புரிந்துகொள்ளவே மொழியின் அமைப்புக்கும் இலக்கியத்தின் அமைப்புக்கும் இலக்கணம் எழுதினான்.”[15] என்று சண்முகம் அவர்கள் கூறுகிறார்.

இலக்கியம் என்பது சமுதாயப் படைப்புகளில் ஒன்றாக எண்ணப் பெறுவது சமுதாய உணர்வுகள், நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், நீதிகள், பண்பாடுகள், நாகரீகம் முதலானவற்றைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்கிறது. “இலக்கியம் என்பது விழுமிய சிந்தனைகளின் கருவூலம், வாழ்க்கைக்கு வழிகாட்டி, உள்ளத்தைப் பண்படுத்தும் உயர்படைப்பு, உணர்வுகளைத் தூய்மைப்படுத்தும் எழுத்தோவியம், மனித நேயத்தைப் புகட்டும் நல்லாசான் சிறந்த கலைப்படைப்பாகும்.”[16] என்று சோ.ந. கந்தசாமி கூறுகிறார்.

மேற்கண்ட கருத்துக்களைக் கொண்டு காணும்போது இலக்கியமானது மனித சமுதாயத்தோடு தொடர்புடையக் கருவியாகக் காணப்படுவதை இதன்வழி அறிய முடிகின்றது.

## அகம்

அகம் என்பது மனம் (அல்லது) உள்ளத்தைக் குறிக்கும். ஆணும், பெண்ணும் இணைந்து ஒற்றுமையாக வாழக்கூடிய மனித குலமானது சிறப்பாக நீடித்து வாழ ஆண், பெண்ணை மதிப்பதும், ஒருவர் மற்றவரின் உள்ளுணர்வு (அல்லது) மனதினைப் புரிந்துகொள்வதும் முக்கியமெனச் சங்ககாலத் தமிழர்கள் பெரிதும் உணர்ந்து இருந்தார்கள். அவர்கள் போற்றிய அகவாழ்க்கை முறையானது அகநூல்களில் பரந்து காணக்கிடக்கிறது.

மானுட வாழ்வியலானது அகம், புறம் என்ற இரு கூறுகளைக் கொண்டதாக அமைகிறது. அகமாவது இல்லறவாழ்வில் ஒருவனும், ஒருத்தியும் துய்க்கும் அன்பு தொடர்பான காதல் வாழ்க்கை பற்றியதாகும். காதல் என்பது உள்ளத்தால் உணரப்படுவதும், பிறர் அறிய எடுத்துரைக்க இயலாததுமாகும்.

அகம் என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் கூறுப்படுகின்றன. உள்ளத்தே எழுந்த அவா, உடற்வழிப் படர்ந்து உள்ளத்தைக் குளிர்விப்பது, உள்ளத்தோடு தொடர்புடையது எனச் சங்கப்புலவர்கள் கருதுகின்றனர்.

“அகத்திணை கற்ற கணவனும் மனைவியும் பிறந்த உலகை மதிப்பர். எடுத்த உடம்பை மதிப்பர். கொண்ட மனத்தை மதிப்பர். ஒருவருக்கொருவர் காமநாடிகளைப் புரிவர். காமக்குறைவு கடமைக்குறைவாம் என்று உணர்வர், வித்தில்லாக் காமப்பழத்தை உண்பர். மெய்யின்பத்தை உயிரின்பமாகப் போற்றி ஒழுகுவர். அகத்திணை வாழ்க்கையாகக் காண்பர்.”[17] என்கிறார் வ.சுப. மாணிக்கம்.

“அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்பது பண்டை அரசியல் நெறியாகும். தமிழ் மக்களெல்லாம் அகவுணர்ச்சியாக வாழ்ந்தனர் என்பதற்கு

வேறு சான்று வேண்டாம்”[18] என்று டாக்டர் வ.சுப. மாணிக்கனார் தன் தமிழ்க்காதல் என்னும் நூலில் அகத்தின் சிறப்பை விளக்குகிறார்.

## அக இலக்கிய வகைமை

தமிழ் இலக்கியங்களுள் சங்க இலக்கியங்களான எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் மிகவும் பழமைமிக்கன. சங்கப்பாடல்கள் பல்வேறு காலங்களில் பல்வேறு புலவர்களால் பாடப்பட்டவை. இவற்றுள் அகம், புறம், அகப்புறம் பற்றிய பாடல்கள் உள்ளன.

நச்சினார்க்கினியர் “ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப்புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார்”[19] என நச்சினார்க்கினியர் குறிப்பிடுவதை கி. இராசா தன்னுடைய இலக்கிய மரபியல் நூலில் குறிப்பிடுகிறார்.

இவற்றால் அகம் என்பது உள்ளத்து உணர்வே நுகர்ந்து துய்க்கக் கூடிய அளவில் இருப்பது என்பது குறிப்பிடுகிறது.

## அகத்திணைகள்

அகத்திணை என்பது அன்பின் ஐந்திணைகள் என்றும் தொல்காப்பியமும் உரையாசிரியர்களும் குறிப்பிட்டுள்ளனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பனவாகும். இவற்றுடன் கைக்கிளையும் பெருந்திணையும் இடம்பெற்றுள்ளன என்பதை,

***“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்***
***முற்படக்கிளந்த எழுதிணை என்ப”[20]***

அவற்றுள்,

> ***“நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்***
> ***படுதிரை வையம் பாத்திய பண்பே”[21]***
> ***“முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச்***
> ***சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”[22]***

என்பன போன்ற தொல்காப்பிய நூற்பாக்களும் அகத்திணைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளன.

## அக நூல்கள்

சங்க இலக்கியங்களில் ஏழு நூல்கள் அக நூல்கள் என்று அழைக்கப்படுகிறது. இவற்றினைப் பற்றி ஆய்வதே இவ்ஆய்வின் நோக்கமாகும். அவை,

நற்றிணை

குறுந்தொகை

ஐங்குறுநூறு

அகநானூறு

கலித்தொகை

முல்லைப்பாட்டு

குறிஞ்சிப்பாட்டு

என்பனவாகும்.

## நற்றிணை

நற்றிணை நானூறு என அழைக்கப்படுகின்றது. ஒன்பது அடிமுதல் பன்னிரண்டு அடிவரை உள்ள இந்நூல். பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதியால் தொகுக்கப்பெற்றது. இப்பாடல்களில் அகத்திணைச் சார்ந்தப் பாடுபொருள் மிகுதியான அளவில் பாடப்பட்டுள்ளது. நற்றிணைப் பற்றிய மரபுக் குறிப்பு என்று குறிப்பிடும்போது வௌவால்களும், கனவு காணும் என்னும் உயிரியல் உண்மைகளும், இளமை நிலையாது; அன்பு நிலைக்கும் என்பன பற்றியும், மன்னர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பும் இடம் பெற்றுள்ளன.

அன்பு நிலையாக இருக்க வேண்டும் என்பன பற்றி தோழி தலைவனிடம்,

***“அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்***

***பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த***

***நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்***

***நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர”[23]***

என்று நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. மேலும் சான்றோரை நாம் நாடிச் செல்ல வேண்டும் என்பனவற்றை,

***“நாடி நட்பின் அல்லது***

***நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே”[24]***

என்றும் சான்றோர் கூறும் நன்மையை ஆராய்ந்து உணர வேண்டும் என்ற அரசியல் நுட்பத்தினைக் கபிலர் குறிப்பிடுகிறார்.

## குறுந்தொகை

நல்ல குறுந்தொகை என்று அடைமொழியுடன் அழைக்கப்படுகின்றது. நான்கு அடி முதல் எட்டு அடி வரையுடையுடைய 400 பாடல்களைக் கொண்டது.

இந்நூலைத் தொகுத்தவன் பூரிக்கோ. தமிழர்களின் வாழ்வு, அன்பு, அரசியல், ஊர்கள், நகரங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியன பற்றி கூறும் முறையில் குறுந்தொகை அமைந்துள்ளது. இதற்கேற்ப அகப்பொருள் இடம்பெற்றுள்ளது. அன்பின் ஐந்திணையில் முதல், கரு, உரிப்பொருட்களைப் பற்றிய பாடுபொருள் மிகவும் நிறைவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

உரிப்பொருளின் நிமித்தத்திற்கு ஏற்றவாறு தலைவியின் மனநிலை செயல்பாடுகள் தோழிக்குரிய மறுமொழிகள் பரத்தை வெறுப்பு, பரத்தைப் பழக்கமுடைய தலைவனுக்கு வாயில் மறுத்தல், அவன் மீது வெறுப்பு அவன் செய்யும் தவறைச் சுட்டிக் காட்டுதல், கூடா ஒழுக்கத்தின் தீமைகளை உணர்த்திக் குலப்பெருமையைக் காத்தல் எனத் தலைவி சார்ந்த அகத்திணை மரபுகள் இடம்பெற்றுள்ளன.

## மாண்புகள்

அக வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமானதாக வேண்டப்படுவது தலைவன், தலைவி உள்ளம் ஒத்த அன்பேயாகும் என்பதை,

*“செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாங் கலந்தனவே”*[25]

எனும் குறுந்தொகைப் பாடல் உவமையால் உணர்த்துகின்றது. பெண்கள் தம் கணவன்மீது கொண்டுள்ள அன்பு எத்தகையது என்பதைக் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள,

*“நீயாகியர் என் கணவனை*
*யானா கியர் நின் நெஞ்சு நேர் பவளே”*[26]

என்னும் பாடலடிகள் உணர்த்துகிறது.

## ஐங்குறுநூறு

ஒரு திணைக்கு நூறு பாடல்கள் வீதமாக ஐந்து திணைக்கும் ஐந்நூறு பாடல்களையுடையதாகவும், மூன்று அடிமுதல் ஆறு அடிகளையுடைய பாடல்களையுடையதால் ஐங்குறுநூறு எனவும் அழைக்கப்படுகின்றது. சிறிய பாடல்கள் எனினும் இவற்றில் நிறைவான அகத்திணைப் பாடுபொருட்கள் இடம் பெற்றுள்ளன.

## சிறப்புக்கள்

ஐங்குறுநூற்றில் கிள்ளி, கொற்கைக்கோமான், கடுமான், குட்டுவன், மத்தி, விராஅன், ஆதன், அவினி போன்ற அரசர்கள் குறிப்பிட்டுள்ளனர். ஆமூர், தொண்டி, தேனூர், கழார், கொற்கை போன்ற ஊர்களும் இடம்பெற்றுள்ளன. அக வாழ்க்கையில் மன உணர்வுகள் நுட்பமாய் வெளிப்படுவதை பின்வரும் பாடல் விளக்குகிறது.

***"அன்னாய் வாழிவேன் டன்னைநம் படப்பைத்***

***தேன்மயங்கு பாலினும் இனிய"***[27]

என்று குறிப்பிடுகிறது. திருமணமாகி சென்று விட்ட தலைவியிடம் தோழி கேட்கிறாள் தலைவன் நாட்டில் உண்ண நீர்கூட இல்லை அப்படி இருக்க நீ எப்படி மனமகிழ்வோடு இருக்கிறாய்? என்றாள் தலைவி தலைவனின் வறுமையைப் பொருள்படுத்தாது இன்பத்திற்கும் துன்பத்திற்கும் மனம்தான் காரணம் என்று பதில் கூறுவது பண்பாடு மரபாகவும் கருதப்படுகிறது.

பத்துப் பத்து என்னும் வகையில் பாடல்கள் உள்ளன. இதில் அரச வாழ்த்தே முதற்பத்தாக அமைந்திருப்பது இந்நூலுக்குப் சிறப்பளிக்கின்றது. இதனை,

*“வாழி ஆதன் வாழி அவினி*

*பகைவர் புல்ஆர்க; பார்ப்பார் ஓதுக*

*என வேட்டோளே யாயே”*[28]

என்கிறது ஐங்குறுநூறு ஆதன் அவினி எனப்படுவோன் செல்வக்கடுங்கோ வாழியாதனைக் குறிப்பிடுகிறது. ‘பகைவர் புல் ஆர்க’ என்னும் தொடர் போரில் தோற்ற பகைவர் தம் தோல்வியை ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாக புல் மேய்வது போலக் குப்புற விழச் செய்யப்பட்டனர் என்றுற வரலாற்றுக் குறிப்பினைத் தருகின்றது.

## அகநானூறு

நெடுந்தொகை, நெடும்பாட்டு என அழைக்கப்படும் நூலாக அகநானூறு விளங்குகின்றது. இதில் அகத்திணைச் சார்ந்த பாடுபொருள் நிறைவாகவும், நீண்ட அளவிலும் பாடப்பட்டுள்ளதால் நெடுந்தொகை என அழைக்கப்படுகின்றன.

இந்நூல் 13 அடிச் சிற்றெல்லையும், 31 அடி பேரெல்லையையும் உடைய பாடல்களை 145 புலவர்களால் பாடப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

## உட்பிரிவு

இந்நூல் மூன்று உட்பிரிவுகளுடையதாகவும் அமைந்துள்ளது. இந்த வகையில் இது புதுமையானதாகவும், சிறந்த உள் உவமையுடைய அக நூலாகவும் அமைந்துள்ளது. இம்மூன்று உட்பிரிவுகளுடன் தொகுத்திருப்பது போல் மற்ற எந்த நூலும் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பாடல் தொகையளவில்,

- களிற்றியானை நிரை, 1 முதல் 120 பாடல்களுடனும்,
- மணிமிடை பவளம் 121 முதல் 300, பாடல்களுடனும்,
- நித்திலக்கோவை 301 முதல் 400 பாடல்களுடனும் தொகுக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியங்களில் உள்ள எந்த நூலிலும் இப்படிப்பட்ட வகைப்பாட்டைக் காண முடியவில்லை. இந்த அடிப்படையில் புதிய உட்பிரிவுகளை கொண்ட சிறப்புமிக்க நூலாக அகநானூறு விளக்குகின்றது.

## வரிசை எண்ணிக்கையும், வகைமையும்

பாடல் எண்களை வரிசையாகக் கொண்டு ஒவ்வொரு திணைகளை வகைப்படுத்தியறியும் மிக நுட்பமான ஒரு வகைமையையும் அகநானூற்றில் காணமுடிகின்றது. இந்த வகையிலான அமைப்பு

2, 8, 12, 18 என்ற வரிசை எண்ணுடைய பாடல்கள் குறிஞ்சித்திணை-யினைக் குறிக்கின்றன. முல்லைத்திணைப் பாடல்கள் 4, 14, 24.... என்ற வரிசையில் அமைந்துள்ளன.

மருதத்திணை 6, 16, 26.... என்ற வரிசையுடைய பாடல்கள், மருதத்திணை பாடல்கள். இத்திணை வயலும், வயல் சார்ந்த இடத்தைக் குறிக்கின்றது. இங்கு வாழும் மக்களின் வாழிடம், நாடு, நகரம், குக்கிராமம் போன்ற பகுதிகள் நிறைந்திருப்பதனால் மக்களின் அன்றாட வாழ்க்கையானது, உழவு சார்ந்த வேளாண்மைத் தொழில், வாணிபம், கலைகள், கலாச்சாரம், பண்பாட்டை உணர்த்தும் கருத்துக்களும் மருதத்திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

நெய்தல் திணை 10, 20, 30 என்ற எண்ணுடைய பாடல்கள் கடலும், கடல் சார்ந்த பகுதியை இத்திணை உணர்த்துகின்றது. இதன் அடிப்படையில் பரதவர் எனப்படும் மீனவ மக்களின் அகவாழ்க்கையைப் பற்றியப் பாடல்கள் இப்பகுதியில் முழுவதும் இடம் பெற்றுள்ளன. தலைவன், தலைவி என்ற பொதுச்சொல் ஐந்து திணையிலும் பொதுவாக வழங்கப்படுவதனால் நெய்தல் நிலத் தலைவன் தலைவியின் அக வாழ்க்கையையும் உப்பு, மீன், உயிர் மீன், உலர் மீன் (கருவாடு) இவற்றினை வாணிபம் செய்யும் கருத்துக்களையுமுடைய பாடல்களும் இத்திணையில் இடம்பெற்றுள்ளன.

பாலைத்திணை 1, 3, 5, 7 என்ற ஒற்றை எண்ணுடைய பாடல்களாகப் பாடப்பட்டுள்ளன. அகநானூற்றில் மரபுகளின் அடிப்படையில் ார்த்தால்“ தமிழர்களின் திருமண முறைப் பற்றி குறிப்பிடுகின்றன.

## கலித்தொகை

கலி என்ற சொல்லுக்கு மகிழ்ச்சி, ஆனந்தம் என்ற பொருளைக் குறிக்கின்றது. கலியாணம் என்றால் மகிழ்ச்சியூட்டும் நிகழ்வைக் குறிக்கின்றது. கலியுகம் என்றால் தீமைகளை அழித்து மக்களுக்கு நன்மைகளையும், மகிழ்ச்சியையும் தரும் யுகம் என்று பொருள் வழங்கப்படுகின்றது. இந்த அடிப்படையில் கலித்தொகை என்பது மகிழ்வைத் தரும் இலக்கியமாகக் கொள்ளப்படுகிறது.

அகப்பொருளின் இன்பம் பற்றி பாடப்பட்டப் பாடல்களைக் கொண்ட இலக்கியம் என்று வழங்கப்படுகின்றது. ஐந்து திணைக்குமான அகப்பாடல்களைக் கொண்ட இந்நூலின் பெருமையை கற்றறிந்தார் ஏத்தும் கலி, கல்வி வளார் கண்ட கலி என்று உரையாசிரியர் அழைத்துள்ளனர்.

கலித்தொகையில் இடம் பெற்றுள்ள 150 பாடல்களும், ஐந்து திணைகளை அடிப்படையாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன. இதில் கடவுள் வாழ்த்து நீங்களாக ஏனைய திணை வரிசை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என உள்ளது. கலித்தொகையின் பாடல்கள் பல ஓரங்க நாடகம் அமைப்பைக் கொண்டதும், கலிப்பா வகையால் இயற்றப்பட்ட ஒரே எட்டுத்தொகை இலக்கியம் என்ற சிறப்பும் இவற்றிற்கு உண்டு.

கடவுள் வாழ்த்து - 1

1. பாலைக்கலி 35 பாடல்கள்
2. குறிஞ்சிக்கலி 30 பாடல்கள்
3. மருதக்கலி 34 பாடல்கள்
4. முல்லைக்கலி 17 பாடல்கள்
5. நெய்தற்கலி 33 பாடல்கள்

என்ற எண்ணிக்கையின் அடிப்படையில் 150 பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

## முல்லைப்பாட்டு

பத்துப்பாட்டுக்களிலும் மிகச்சிறிய பாட்டாகிய முல்லைப்பாட்டும் மிகப்பெரிய பாட்டாகிய மதுரைக்காஞ்சியும் அடுத்தடுத்து இடையில் வைக்கப்பட்டுள்ளன. முன்னது 103 அடிகளாலாகிய ஆசிரியப்பாட்டு; பின்னது 782 அடிகளாலாகிய, இடையிடையே வஞ்சியடி விரவிய ஆசிரியப்பாட்டு. நப்பூதனார் பாடியது. இப்பாட்டு முல்லைத் திணைக்குரிய இருத்தல் ஒழுக்கத்தைச் சிறப்பித்துக் கூறுகிறது. முல்லைத் திணையைப் பாடியதால் முல்லைப் பாட்டு எனப்பட்டது.

பிரிந்து சென்ற தலைவனை நினைத்துத் தலைவி புலம்புவதும் உடனே தன் மனத்தை நிலைப்படுத்திக் கொள்ள முயல்வதுமான காட்சியை முல்லைப்பாட்டு அழகாக காட்டுகிறது. இதனை,

*“நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு*
*நீடுநினைந்து ஆற்றியும் ஒடுவளை திருத்தியும்”*[29]

என்று கூறப்படுகிறது. இதில் ‘நெஞ்சாற்றுப்படுத்த நிறை’ என வரும் தொடரின் மூலம் முல்லைப்பாட்டு ‘நெஞ்சாற்றுப்படை’ என்றும் வழங்கப்படுகின்றது எனலாம். திருமால் வாமனனாய் அவதாரம் எடுத்த கதை இதில் உவமையாக கூறப்பட்டுள்ளது. இதனை,

*“நீர்செல நிமிர்ந்த மாஅல் போல”*[30]

என்று முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது. மேலும் நல்லது கெட்டது எது என்று அறிய விரிச்சி கேட்கும் பழக்கமும் கொண்டனர். தலைவன் வினை முடித்து வருவது உறுதி ஆகயால் உன் கவலை நீங்குக எனத் தலைவியிடம் கூறுகின்றார்கள். அதேப் போன்று தலைவன் வருகையைக் கண்டு தலைவி மகிழ்வது இது இப்பாட்டில் காட்டப்பெறும் அகக்காட்சி. பாசறையில் மன்னன் ஒரு கையைப் படுக்கையில் ஊன்றியும் மற்றொரு கையைத் தலையில் வைத்தும் நெடிது நினைந்து வருந்துகின்றான்.

*“ஒரு கை பள்ளி ஒற்றி ஒருகை*
*முடியொடு கடகம் சேர்த்தி நெடிது நினைந்து”*[31]

இது புறக்காட்சி, முல்லைப் பாட்டின் அமைப்பு திணை மரபுக்குள் நின்று கொண்டு அகத்தையும், புறத்தையும் எதிர்நிலைப்படவைக்கும் ஒரு முயற்சியேயாகும் என்பார் கார்த்திகேசு சிவத்தம்பி.

## குறிஞ்சிப்பாட்டு

பூக்களை முதன்மையாகக் கொண்டு எழுதப்பட்டது, ஐவகை நிலத்தில் முதலாவதாக அமைவது, இக்குறிஞ்சிப் பூவானது பன்னிரண்டு வருடங்களுக்கு ஒருமுறை பூக்கும் பூ ஆகும். புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சித் திணையின் ஒழுக்கமாகும்.

ஆரிய அரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் பாடிய இவ்வாசிரிய நெடும்பாட்டு 261 அடிகள் கொண்டது. இங்கு தமிழ் அறிவித்தல் என்பது தமிழர்க்கேயுரிய அகத்திணைப் பண்பாட்டு மரபை உணர்த்துவதாகிறது. முழுக்க முழுக்கக் குறிஞ்சிக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களைக் கொண்ட இப்பாட்டு ‘அறத்தொடுநிலை’ எனும் துறை சார்ந்தது. இதன்கண் தோழி செவிலியிடம் அறத்தோடு நிற்கும் திறம் வியக்கத்தக்கது. சுனையில் நீராடல், 99 மலர்களைக் குவித்து மகிழ்தல், தலைவனது அழகைப் புனைதல், தலைவி தலைவனின் காதலுறவு, மாலைக்கால வருணனை, தலைவன் வரும் வழியின் அருமை இவை அனைத்தும் காப்பியத் தன்மையுடன் இல் விரிவாக கூறப்பட்டுள்ளதால் இதனைக் காப்பியப் பாட்டு எனலாம். தோழி சாதுரியமாகப் பேசுந்திறனை வைத்து பார்த்தால் இஃது ஓர் உளவியல் பாட்டுமாகும். நச்சினார்க்கினியார் இதனைப் பெருங்குறிஞ்சி என்று சிறப்பிப்பார். இதன்கண் 99 மலர்கள் தொகுத்துக் கூறப்படும் இடம் தனிச்சிறப்புடையதாகும். இதனை,

> ***“ஒண்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்***
> ***தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி***
> ***செங்கொடுவேரி, தேமா, மணிச்சிகை”***
> ***குருநிலை, மருதம், விரிபூங் கோங்கம்***
> ***போங்கம் திலகம் தேங்கமழ் பாதிரி***
> ***செருந்தி, அதிரல், பெருந்தண் சண்பகம்”***[32]

என்று குறிப்பிடுகிறது.

## பண்பு

பண்பாடு என்னும் சொல் சங்க அக இலக்கியங்களில் இடம்பெறவில்லை. எனவே இச்சொல்லானது அதற்கு பின்னரே தோன்றியிருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளரால் அறியப்படுகின்றது. ஆனால், பண்பு என்ற சொல் சங்க இலக்கியங்களில் இடம் பெற்று வந்துள்ளது. நமது இலக்கணமான தொல்காப்பியத்தில் நூற்பாக்கள் பலவற்றுள் பண்பு என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

***"இசையினும் குறிப்பினும் பண்பினுந் தோன்றி"[33]***

என்ற நூற்பா உரியியலின் முதற் நூற்பாவாகும்.

பண்பு என்னும் சொல் சங்க அக இலக்கியங்களிலும் பல இடங்களில் காணப்படுகின்றது. கலித்தொகையில் பண்பு என்னும் சொல்லுக்கு இலக்கணம் கூறப்படுகின்றது. இதனை,

***"பண்பெனப்படுவது பாடறிந் தொழுகுதல்"[34]***

என்கிறது. இவ்வடியில் 'பண்பு' என்னும் சொல்லுக்கு மக்கட் பண்பாகிய உலக ஒழுக்கத்தைஅறிந்து ஒழுகுதல் என்ற பொருளில் கூறப்படுகிறது. இதேபோன்று திருவள்ளுவர் 'பண்புடைமை' என்னும் அதிகாரத்தில் பண்பு என்பதற்கு நல்ல ஒழுக்கங்கள் ஆகும் என்றும் பொருள் தருகின்றது. அவற்றைக் கடைப்பிடித்து வாழ்வர் உயர் நிலைக்கும் மற்றவர் இழிவு நிலைக்கும் தள்ளப்படுவர் என்றும் கூறுகிறார்.

## பண்பாடு விளக்கம்

அன்று முதல் இன்று வரை பண்பாடு என்பது இன்ன தன்மைத்து என்று துல்லியமாக வரையறுத்துக் காண இயலாவிடினும் பண்பாடு என்ற ஒன்று இருந்தமையால் தான் இந்த உலகம் நிலைத்து நிற்கிறது என்பதை உணர முடிகிறது. தனி மனிதன் சமூகத்துடன் ஒன்றியிருப்பதும் சமூகம்

தனி மனிதனுக்கு உணர்த்துவதும் பண்பாட்டின் அடிப்படையிலேயே ஆகும். அத்தகைய பண்பாடு ஒன்று இல்லையெனில் உலகம் இல்லை, உயிர்கள் கூட இல்லை; உற்றதொடு செயல்; ஒன்றுமே கிடையாது என்று தான் கூறமுடியும்.

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்கள் மிகச் சிறந்த பண்பாட்டையும் நாகரிகத்தையும் உடையவர்களாக திகழ்கின்றன என்பதை இலக்கியங்கள் வழியாக அறியமுடிகிறது. இதனை உலக வரலாற்று ஆசிரியர்கள் ஒரு மனதாக ஏற்றுக்கொள்கின்றனர். இவர்கள் இந்தியப் பண்பாட்டு வளர்ச்சிக்கு வழங்கியுள்ள கொடையை அளவிட முடியாது.

“பண்பாடு என்பது மனித சமுதாயத்தின் ஓர் உறுப்பு என்ற நிலையில் அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், பழக்கம், ஆற்றல் முதலியவை அடங்கப் பெற்ற ஒரு வாழ்க்கை முறையின் முழுமைத் தொகுதியாகும்”[35] என்று கிருட்டிணன் கூறிப்பிடுகிறார்.

பண்பாடு பற்றிய குரோபரும் குளுக்கானும் தொகுத்த வரையறைகள் அனைத்தையும் ஆழ்ந்து பார்க்கும்போது அவை இரு வகைகளில் பண்பாட்டை விளக்க முற்படுகின்றன என்பதை காண முடிகிறது. முதல்வகை வரையறைகள் உண்மையியல் வகை என்றும் இரண்டாம் வகை வரையறைகள் கருத்தியல் வகை என்றும் வகைப்படுத்தலாம்.

“உண்மையியல் வகையைச் சேர்ந்த வரையறைகளை வகுத்தவர்கள், நேரடியாக உற்று நோக்குதல் மூலம் அறியப்பெறும் நடத்தை முறைகளையும் நடத்தை முறையால் விளைந்த மற்ற வகைகளையும் கொண்டு விளக்க முற்படுகின்றனர். இவர்கள் பண்பாட்டை உற்றுநோக்குதல் மூலம் அறிய முடியும் என்ற கருத்துடையவர்கள்”[36] என்று மெர்விம் குறிப்பிடுகின்றார்.

“இரண்டாவது கருத்தியல் வகையிலான வரையறைகளை வகுத்தவர்கள் மக்கள் அவரவர் பண்பாட்டைப் பற்றி ஏற்படுத்திக் கொண்டுள்ள விழுமியங்களையும் நெறிமுறைகளையும் பிற கருத்துக்களையும் புரிந்துகொண்டு பண்பாட்டை விளக்க முற்படுகின்றனர். இவர்கள் பண்பாட்டை மனதளவில் மட்டும் புரிந்துகொள்ள முடியும் என்ற கருத்துடையவர்கள்.”[37] என்று மெர்விம் குறிப்பிடுகின்றார்.

சுருக்கமாகக் கூற வேண்டுமானால் உண்மையில் அணுகுமுறையானது பண்பாட்டை உற்றுநோக்கக் கூடியது. கருத்தியல் அணுகுமுறையானது பண்பாட்டை உய்த்துணரக் கூடியது என்று குறிப்பிடுகிறது.

பண்பாட்டை இயந்திரத்திற்கு ஒப்பிடலாம். இயந்திரமானது அதன் எல்லா உறுப்புகளும் இல்லையேல் அது சரியான முறையில் இயங்குவது கிடையாது. இன்று காணும் மனிதனை மனிதனாக உருவாக்குவதில் இயற்கையைவிடக் கலாச்சாரம் (பண்பாடு) தான் அதிக சக்தி வாய்ந்ததாக உள்ளது என்பதற்கு ஐயமில்லை.

## பண்பாடு சொல்லாட்சிப் பயன்பாடு

தமிழில் பண்பாடு என்ற சொல்லை 1973 இல் டி.கே. சிதம்பரநாத முதலியார் Culture என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு ஏற்பத் தமிழில் பண்பாடு என்கிற சொல்லாட்சியை உருவாக்கினார் என்பார் பேராசிரியர் ச. வையாபுரிப்பிள்ளை.

“Culture என்பது எண்ணங்கள், உணர்வுகள், மதிப்பீடுகள், குறிக்கோள்கள், செயல்முறைகள், இயல்புகள் முதலான பல்வேறு எண்ணற்ற தன்மைகளை உள்ளடக்கியது”[38] என்பார் முத்துலக்குமி.

“ஒரு சமுதாயத்திலுள்ள மக்கள், வாழ்க்கையை நடத்தும் முறையே பண்பாடாகும். இதுதான் மானிடவியல் (அ) சமூகவியல் பண்பாட்டுக்குக் கூறும் இலக்கணமாகும். பண்பாடு என்றவுடன் எதோ ஓர் உயர்ந்த பண்புடைமை என்ற எண்ணம் தோன்றுவதுண்டு மேற்கூறிய இலக்கணத்தில் இந்த எண்ணத்துக்கு இடம் கிடையாது. பண்பாடில்லாத சமூகங்கள் கிடையாது. ஒவ்வொரு சமூகமும் ஏதேனும் ஒரு வகையான பண்பாடு உடையதாகவே இருக்கும்.”[39] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது.

ஒவ்வொரு மனிதனுடைய நடத்தையையும் இரண்டு விதமான நிலைகளில் இருந்து பெறப்பட்டதாக காணலாம். ஒன்று பாரம்பரிய வாயிலாகப் பெறப் பெற்றது. மற்றொன்று சமூகத்தின் வாயிலாகவும் கல்வி வாயிலாகவுப் பெறப் பெற்றது.

“பண்பாடு என்பது ஒரு சந்ததியர் முந்திய சந்ததியரிடமிருந்து பெற்ற நடத்தையாகும். சமூகம் வாயிலாகக் கற்றுக் கொள்வது விலங்கினத்திடமும் காணப்படும். ஆனால் அவை பேச முடியாதிருப்பதால் அவை கற்றுக் கொள்வதும் மிகச் சிறிய அளவாகும். மனிதனிடந்தான் அத்தகைய பண்பாட்டுப் பேறு பேரளவில் ஏற்படுகிறது.”[40] என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.

சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி, “பிறர் இயல்பையறிந்து நடக்கும் நற்குணம்”[41] என்று பொருள் கூறியுள்ளதை முத்துலக்குமி குறிப்பிடுகிறார்.

“பண்பாடு உயர்ந்த நோக்கங்களைப் போற்றக் கூடியது அகவயமானது; உயிர்போல் இயக்கவல்லது; முடிவானது. இசைவிணக்கமான நிறைவை, பொதுவான நிறைவை ஒன்றை அடைய விழையாமல் நன்றாக ஆகின்ற நிறைவை, சுற்றுச்சூழலின் வெளிப்பகுதியேயன்றி, மனம் ஆன்மா ஆகியவற்றின்

அக நிலையைத் தருகின்ற நிறைவைப் பற்றிப் படிப்பதுதான் பண்பாடு"[42] என்றார் மாத்யூ அர்னால்டு.

இவ்வாறு ஆங்கிலம் மற்றும் தமிழ் அகராதிகளும், அறிஞர்கள் பலரும் பண்பாடு என்னும் சொல்லிற்குரிய விளக்கங்களை பலரும் அளித்திருக்கின்றனர். இவற்றால் பண்பாடு என்னும் சொல் ஆழ்ந்த நுண்ணிய பொருண்மையை உணர்த்தும் ஒரு சொல்லாக இருந்திருக்கிறது என்பதை அறியமுடிகின்றது.

## நாகரிகம்

நாகரிகமும் பண்பாடும் ஒரே பொருளைக் குறிக்கிறது. நண்பரிடத்தில் அருளைக் காட்டுதல் நாகரிகம் எனவும் தமிழ் மக்கள் கருதினர். தம் நண்பர் கொடுப்பது நஞ்சு என்று அறிந்தும், அவர்கள் மனம் நோவாது இருக்க, அதனை அருந்தியவர்களை நாகரிகம் உடையவர்களாகக் அன்று கருதினர் என்பதை,

***"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்***
***நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்"[43]***

என்று நற்றிணையும்

***"பெயக்கண்டும் நஞ்சுண் டமையவர் நயத்தக்க***
***நாகரிகம் வேண்டு பவர்"[44]***

என்று வள்ளுவரும் குறிப்பிடுகின்றார்.

தம்மோடு நன்கு பழகிய நண்பர்கள் விருப்பத்திற்கேற்ப நடந்து கொள்வது நாகரிகமாக கருதப்பட்டது என்பதை மேற்கண்ட நற்றிணைப் பாடல் மற்றும் வள்ளுவரின் குறள் ஆகியவற்றின் மூலம் உணரலாம்.

## மரபு

அகராதிகளின் வழியாக மரபு என்பதற்கு நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் முதலியன ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்குக் கொண்டு செல்வது என்பதனை நன்னூல்,

*"எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்*
*செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே"*[45]

என்ற கருத்து பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்தது. வழக்கம் என்பது சமுதாயத்தால் பின்பற்றப்படுவது. மரபு என்பது முன்னோர் கூறியுள்ளதை மாறாமல் அப்படியே கூறுவது. இவை அனைத்தும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. இவை எளிதில் மாற்ற முடியாதவை என்றும் அறியலாம். முன்னோர் ஒரு பொருளுக்கு வழங்கிய சொல்லாலே பின்னோரும் வழங்குவது மரபாகும் என்று விளக்கம் தந்துள்ளார். பவணந்தியார். இதனை,

*"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்"*[46]
*"மரபு வழிபட்ட சொல்லினான"*[47]

எனத் தொல்காப்பியர் கூறுவதால், மரபு மாற்றுவதற்கு அரிய சிறப்பினது, பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு சொற்கள் திரிபின்றி வழங்குவது, மரபு வழியாக வந்த சொல்லினது என்று மரபு என்ற சொல்லின் விளக்கங்களை தெளிவாக எடுத்துக் கூறுகிறார். நன்னூல், தொல்காப்பியம் கூற்றுகளினால் உயர்ந்தோர் ஒரு பொருளுக்கு வழங்கிய சொல்லாலே மற்றையோரும் கூறுவது உரைப்பது மரபாகும் என்பது பெறப்படுகிறது.

நம் முன்னோர்கள் எப்பொருளை எச்சொல்லால் எவ்வாறு வழங்கினார்களோ அப்பொருளை அச்சொல்லால் அவ்வாறே வழங்குவது மரபு.

## மரபு சொல்லும் பொருளும்

பழந்தமிழரின் வாழ்க்கை நெறிமுறைகளை பின்பற்றியும் அவர்கள் விட்டு சென்ற பண்பாட்டையும் மரபோடுப் போற்றிப் பாதுகாத்து வருகிறோம் என்பதில் பெரும் மகிழ்ச்சியடையலாம்.

“மரபு என்பதற்கு முறைமை, சான்றோர் சொல், வழக்குமுறை”[48] எனத் தமிழ்ச் சொல்லகராதி கூறுகிறது.

“மரபு என்பது பழமை, முறைமை, வம்சம்”[49] என்று தமிழ்மொழி அகராதி கூறுகிறது.

“மரபு என்பது ஒருவரால் எடுத்தாளப்பட்டு பின்னர் பலராலும் பின்பற்றப் படுவதொன்றாகும். ஒரு மரபைத் தனியொருவர் தொடங்கி வைக்கலாம். ஆனால் தோற்றுவிக்க முடியாது. தனியொருவரால் தொடங்கி வைக்கப்படுகிற ஒன்று, பரவலாக எல்லோராலும் ஏற்றுகொள்ளப்படுகிறது. அது மரபு என்னும் குறியீட்டைப் பெறுகிறது.”[50] என்று மருதூர் அரங்கராசன் குறிப்பிடுகிறார்.

“மரபு என்பது முந்தையத் தலைமுறைகள் சேர்த்து வைத்திருக்கும் அனுபவம், அறிவு, முடிவு ஆகிய அனைத்தும் சேர்ந்து வருங்காலத்திற்கென்று இலக்கியமாக, சமயமாக, அறநெறியாக பிற அறிவுத் துறைகளாக முந்தையத் தலைமுறை விட்டுச் சென்ற அனுபவத்திரட்டுத்தான் மரபாகும்.”[51] என்று பாலா கூறுகிறார்.

“மரபு என்பது யாதொரு பொருளை யாதொரு சொல்லால் யாதொரு நெறியால் அறிவுடையார் சொன்னார்களோ அப்படிச் சொல்லுதல் மரபாகும்”[52] என்று ஆ. சிங்காரவேலு முதலியார் குறிப்பிடுகிறார்.

“மரபு இறந்த காலத்தின் பழசுகளை மட்டுமல்ல, நிகழ்காலத்தின் புதுசுகளையும் கொண்டிருப்பது. வருங்காலத்தின் கனவுகளையும், தனது கருவிலே கொண்டிருப்பது மரபு உள் முரண்பாடுகள் கொண்டது. மரபு உடையக் கூடியது. உடைந்தும் சிதைந்தும் புதிதாய் உருவாகக் கூடியது.”[53] என்று தி.சு நடராஜன் கூறுகிறார்.

“ஏதேனும் ஒருமுறை உருவாகிய பின் வழக்கத்தில் நிலைத்து விடுகிறது. அவ்வாறு வழங்கி நிலைப்பெற்றுவிடுகின்ற ஒன்றைத் தான் மரபு என்று கூறுகின்றோம்”[54] என்று மு. வரதராசன் அவர்கள் அவர்கள் கூறுவதிலிருந்து மரபு ஏற்பட்ட தன்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது.

மரபு என்பது ஒரு சமூகம் தொடர்ந்து அமைவுறுவதையும் அதனுடைய மரபுரிமையை இனி வரும் தலைமுறையினருக்குச் செல்வதையும் பொறுத்திருக்கிறது.

“மனிதன் ஒரு ஊரிலிருந்தேனும் ஒரு நாட்டிலிருந்தேனும் வேறோர் ஊருக்கும் வேறோரு நாட்டிற்கும் சென்று வாழ நேர்ந்தால் பழைய ஊர்த்தொடர்பையும் நாட்டுத்தொடர்பையும் மறப்பதில்லை. அந்த நினைவுகளுடனே புதிய இடத்தில் வாழ்வை நடத்துகின்றனர். மனிதன் படைக்கும் இலக்கியமும் காலத்திற்கு ஏற்பப் புதிய வடிவங்களைப் பெற்றபோதிலும் பழைய இலக்கியங்களின் தொடர்பையும் அடிப்படையாகவும் விடுவதில்லை. அவற்றையே இலக்கிய மரபு என்று கூறுதல் வழக்கம். இலக்கியத்தின் வரலாற்றை ஆராய்ந்தால் பழைய இலக்கியத்தின் செல்வாக்கு மரபு என்ற பெயரால் இருந்து வருதலைக் காணலாம்”[55] என்று டாக்டர் மு. வரதராசன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

“மரபு என்பது வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படுவது என பொருள்படும். ஒவ்வொரு சமுதாயமும் தனக்கெனச் சில தனித்த மரபுகளைக் கொண்டிருக்கக் காண்கிறோம். ஒரு சமுதாயத்தின்

மரபினைப் பிறிதொரு சமுதாயத்தின் மரபு கட்டுப்படுத்துவதில்லை. மரபுகள் சமுதாயம் தோறும் மாறுபடினும் சுவை அச்சமுதாயத்தின் சிறப்பியல்புகளைக் காக்கக் கூடியவையாக இருப்பதால் மானுட சமுதாயம் இன்றும் அவைகளைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றது."[56] என்று காந்தி கூறுகிறார்.

மரபுகள் காலங்காலமாகக் கடைபிடிக்கப்பட்டு வரும் சூழ்நிலையிலும் சில மரபுகள் கால ஓட்டத்திற்கு ஏற்ப தன்னைப் புதுமைப்படுத்திக் கொள்ளும் செயலே மாற்றமாகக் கருதலாம்.

## மரபு பற்றி இலக்கியங்கள்

"மரபு என்ற சொல்லிற்கு இலக்கியங்கள் பல்வேறு பொருள்களைக் குறித்துள்ளன. அவை,

1. வரலாற்று முறைமை
2. முறைமை
3. பழமை, தொன்மை
4. பாரம்பரியம்
5. சான்றோரின் சொல்வழக்கு முறை
6. இயல்பு, தன்மை
7. இலக்கணம்
8. வம்சம்
9. பெருமை
10. பயிற்சி
11. மேம்பாடு

12. ஒழுக்கம்

13. பருவம்

14. வழிபாடு

15. நியாயம்

16. நீதி

17. தழுவுகை

18. சார்ந்து வருகை

19. பண்பு

20. தொன்னெறி

21. ஒழுகலாறு

22. நயன்மை

23. தோற்ற வழிமுறை"[57] போன்ற பொருள்களில் மரபு என்னும் சொல் வருகின்றது.

சங்க அக இலக்கியத்தில் முறைமை என்னும் பொருளே மிகுதியாக இடம்பெறுகிறது.

***"தெறித்து நடை மரபிற்றன் மறிக்கு நிழலாகி"[58]***

***"தொன்றியல் மரபின் மன்றல் அயர"[59]***

***"தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே"[60]***

எனவே மரபு என்ற சொல் சங்க அக இலக்கியத்தில் கையாளப்பட்டது வரவேற்கத்தக்கது.

## மரபுகள்

மரபுகள் எப்போதும் பண்பாட்டோடு தொடர்புடையதாக உள்ளடக்கியதாக இருக்கும். மரபின் அடிப்படைக்கூறு முன்னோர் கண்ட பக்குவ அறிவை செயலைப் போற்றுவதும் கடைப்பிடித்தலும் ஆகும். நன்மைகளின் விளிம்பில் நின்று நம் முன்னோர்கள் கண்ட பக்குவத்தன்மையை, செயல்களை, சிந்தனைகளை நாம் ஏற்றுக்கொண்டு செயலாற்றும் தன்மையை மரபு என்று அழைக்கிறோம்.

மரபுகள் என்பது அடிப்படையில் மக்களின் மனச்செயல்பாடுகளைக் குறிப்பதாகும். ஒரு தனி மனிதனோ அல்லது சமூகமோ தம் முன்னோர்களின் செயல் வடிவங்களை அப்படியே கடைப்பிடிப்பதும் அல்லது மாற்றிக் கொள்வதும் நடைமுறையில் உள்ள ஒன்றுதான். அதனால்தான் மரபுகளில் மரபுத்தொடர்ச்சி, மரபு மாற்றம் என்ற இருநிலைகள் உள்ளன.




மேற்கண்ட மக்களின் மனங்களில் இரண்டு விதமான தூண்டுதலை உருவாக்குகின்றன. இவற்றிற்குச் சந்தர்ப்பமும், சூழலும் முக்கியக் காரணியாக அமைகின்றன.

## மரபுத் தொடர்ச்சிக்கான காரணங்களும் பயன்களும்

நம் முன்னோர்களின் சமூக கட்டமைப்பில் ஏற்பட்ட பக்குவ அறிவை, செயல்முறையை ஏற்று நடக்கும்போது அது மரபுத் தொடர்ச்சியாக நம் தலைமுறை, நமக்கு அடுத்த வரும் தலைமுறை என காலம் காலமாகக் சமூகத்தில் பயணிக்கின்றன. இத்தகைய தொடர்ச்சிப் போக்கைத்தான் நாம் மரபுத் தொடர்ச்சி என்கிறோம்.

மரபுத் தொடர்ச்சிக்கான காரணம் பழமையின் நல்ல கூறுகளைக் கண்டு தெளிந்ததின் விளைவால் மக்களின் மனங்களில் தோன்றும் தூண்டுதல் முயற்சி ஆகும். காலம் காலமாகச் சொல்லி கொடுப்பதும், நடைமுறைப்படுத்திக் காட்டுவதும் கூட மரபுத் தொடர்ச்சியில் பல பயன்கள் அடங்கியுள்ளன. ஒரு குறிப்பிட்ட பண்பாட்டை மரபாகப் பின்பற்றும் போது சமூகம் என்ற நதியில் சங்கமிக்கிறோம். அனைவரும் ஏற்று நடக்கின்ற ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைப் பின்பற்றுவதின் விளைவால் மனிதம் என்ற சங்கிலியில் இறுக்கமாக பிணைக்கப்படுகிறோம்.

மரபுத் தொடர்ச்சியில் நாம் பெரும்பான்மையாக உணர்வது நன்மை என்ற தன்மையைத்தான் நம் முன்னோர்கள் ஏற்படுத்திய சிந்தனைகள், செயல்கள், கலைகள் ஆகியவற்றில் உள்ள நன்மையை நுகர்வதே மரபுத் தொடர்ச்சியின் பயனாகும்.

மரபை ஏற்றுகொள்ளுதலும், அதை அடுத்த தலைமுறையினருக்கு கொண்டு செல்வதும் நம் கடமையாகும். நவீனம் நிறைந்துள்ள இன்றைய செயற்கை உலகில் இயற்கையை அடிப்படையாகக் கொண்ட மரபைப் பேணுதல் கட்டாயமாகும். மரபுத் தொடர்ச்சி என்ற மரபைப் பேணும் நிலை சமூகத்தில் வளர வேண்டும்.

## மரபு மாற்றத்திற்கான காரணங்களும் விளைவுகளும்

நம் முன்னோர்கள் ஏற்படுத்தி கொடுத்துள்ள இயற்கைச் சார்ந்த வழிமுறைகளை உள்ளடக்கிய மரபை, நவீனம் அதை கருதி பின்பற்றாமல் கைவிட்டு, செயற்கை என்ற வழிமுறையில் நாம் பயணிக்கின்ற தன்மையைத்தான் மரபு மாற்றம் என்கிறோம். மரபுமாற்றத்திற்குச் சமூகமாற்றம் முக்கிய காரணியாக அமைகிறது. இத்தகைய சமூகமாற்றத்தைப் பற்றி அண்ணாமலைப்

பல்கலைக்கழக சமூகவியல் துறைப் பேராசிரியர்கள் தம் நூலில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்.

"எல்லா சமூகங்களும் பழங்குடி, ஊரக மற்றும் நகர மாற்றமடைகின்றன. மாற்றம், இயற்கையின் நியதி, மாறுதல் இன்றி எதுவும் இருக்க முடியாது. ஆனால் சில சமூகங்கள் மெதுவாகவும், சில விரைவாகவும் மாற்றமடைகின்றன. நிலநடுக்கம், புதியன கண்டுபிடிப்புகள், புதுக்கருத்துக்கள் போன்ற இயற்கைச் சக்திகளாலும் சமூகம் மாற்றம் அடையும்போது புதிய சிந்தனைகள், கருத்துக்கள், கொள்கைகள் தோன்றுகின்றன. புதிய பழக்க வழக்கங்கள் உண்டாகின்றன. சமூகக் குழுக்கள் தோன்றுகின்றன. ஆனால் சமூகத்தின் எல்லாப் பகுதிகளும் ஒரே அளவில் மாற்றமடைவதில்லை. எனவே சமூக மாற்றம் சமூக முன்னேற்றத்தையும் குறிக்கலாம். அதற்கு முரணானதையும் குறிக்கலாம். இத்தகைய புதிய சமூகமாற்றத்தால்தான் மரபுமாற்றம் ஏற்படுகிறது. புதுமையை விரும்பும் மக்களின் மனங்களால்தான் செயற்கை மற்றும் அழிவைத்தரவல்ல சமூகமாற்றங்கள் ஏற்படுகின்றன எனலாம்."[61]

மரபுமாற்றத்தின் விளைவால் பழந்தமிழர்களின் அறிவு மற்றும் கலைச் செல்வங்கள் அனைத்தும் அழிகின்றன. மரபுமாற்றம் நவீனம் என்ற புதிய ஆடையை அணிந்து வந்தாலும் மரபு தருகின்ற மானத்தையும், நன்மையையும், பாதுகாப்பையும் அது தருவதில்லை, மாறாக பெரும்பாலும் துன்பத்தையே தருகின்றது எனலாம்.

## பண்பாட்டு மரபுகளின் இன்றைய நிலை

பண்பாடுகள் மரபாகப் பின்பற்றப்படும் போது அது மக்களுக்குப் பல வகையில் பயனாக அமைகிறது. பண்பாட்டு மரபுகளின் மிக முக்கிய கூறாக இருப்பது இயற்கை சார்ந்த கலை நுட்பமும், பண்பட்ட அறிவும் ஆகும். இத்தகைய உயரிய பண்பாட்டு மரபுகளை விடுத்து நவீனம் என்ற செயற்கைத் தனத்திற்குள் நாம் புகும்போது, நமக்கான அழிவை நாமே தேடிக்கொள்கிறோம்.

நவீனம் பல வகையில் மனிதனுக்குப் பயனாக அமைந்தாலும் அது ஏதேனும் ஒரு கேட்டை அடிப்படையாகக் கொண்டு இயங்குகின்றது. தொழிற்புரட்சியின் விளைவால், நாம் மரபுவழி இயற்கை சார்ந்த தொழிற்நுட்பங்களை விடுத்து நவீன தொழிற்நுட்பங்களை, செயற்கைச் சார்ந்த வழிமுறைகளோடும், இரசாயனத்தோடும் நாம் மேற்கொள்ளும்போது பூமியின் இயல்பான தன்மை மற்றும் சூழல் மாற்றியமைக்கப்படுகிறது. இதன் விளைவால் பூமி வெப்பமடைதல், மழையின்மை, பருவநிலை மாற்றம், இயற்கைச் சீரழிவு, உடல் நலன் பாதிப்பு போன்ற பல்வேறு இன்னல்களுக்கு நாம் ஆளாகிறோம். மரபுவழி தொழிற்நுட்பத்தில் இதுபோன்ற பாதிப்புகள் இல்லை எனலாம். எக்காலத்திலும், நம் முன்னோர்கள் ஏற்படுத்தித் தந்துள்ள, மரபுவழி தொழிற்நுட்பமும் சிந்தனையும் பயனை மட்டுமே தரக்கூடியதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

இன்றைய நவீன உலகத்தில் நவீனத்தின் மீதுள்ள மோகத்தால் மரபுவழி தொழிற்நுட்பத்தையும், சிந்தனையையும் புறக்கணிக்கும் சூழல் இன்று உருவாகியுள்ளது. ஆகவே பண்பாட்டு மரபுகளின் நிலையில் பின்னடைவு ஏற்பட்டுள்ளது. இந்நிலைப்பாடு மாறி பண்பாட்டு மரபுகளை வாழ வைத்தால் அது பூமிக்கும் மக்களுக்கும் பயனுள்ளதாக அமையும்.

## தொகுப்புரை

இலக்கியங்கள் காலத்தின் கண்ணாடியாக திகழ்வதைப் போல இவ்வியலில் சங்கம், சங்க காலம், இலக்கியம், அகம், அக இலக்கிய வகைமை, அகத்திணைகள், அகத்திணை மரபுகள், அக நூல்கள், பண்பு, பண்பாடு விளக்கம், பண்பாட்டு சொல்லாட்சிப் பயன்பாடு, நாகரிகம், மரபு, மரபு சொல்லும் பொருளும், மரபு இலக்கியங்கள், பண்பாட்டு மரபுகளின் இன்றைய நிலை போன்றவை பற்றி இவ்வியலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. யாப்பருங்கலக் காரிகை, மேற்கோள் செய்யுள், ப.126.
2. திருமுருகாற்றுப்படை, ப.94.
3. சிறுபாணாற்றுப்படை, அடி.89.
4. மணிமேகலை, பா.2116.
5. திருநாவுக்கரசர், தேவாரம், பா.5:7-3.
6. திருக்கோவையார், பா.126.
7. திருப்பாவை, பா.84.
8. சி. இலட்சுமணன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.14.
9. தளவாய்ப்புரம் செப்பேடு, பிளேட்டு.6.
10. சி. இலட்சுமணன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.26.
11. மேலது., ப.15.
12. மேலது., ப.15.
13. மேலது., ப.15.
14. சு. பாலசந்திரன், இலக்கியத் திறனாய்வு, ப.68.
15. செ.வை. சண்முகம், இலக்கியமும் மொழியமைப்பும், ப.281.
16. சோ.ந. கந்தசாமி, தமிழிலக்கியச் செல்வம், ப.12.
17. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.221.
18. மேலது., ப.490.
19. சி. இராசா, இலக்கிய மரபியல், ப.68.
20. தொல், அகத்திணையியல், நூ.1.
21. மேலது., நூ.2.
22. மேலது., நூ.5.

23. நற்றிணை, பா.10.

24. மேலது., பா.32:8-9.

25. குறுந்தொகை, பா.40:4-5.

26. மேலது., பா.49:3-5.

27. ஐங்குறுநூறு, பா.203.

28. மேலது., பா.4:1-3.

29. முல்லைப்பாட்டு, அடி.81-82.

30. மேலது., அடி.3.

31. கார்த்திகேசு சிவத்தம்பி, சங்க இலக்கியம், ப.74.

32. தமிழண்ணல், தமிழ் இலக்கிய வரலாறு, ப.159.

33. தொல்., சொல், நூ.25.

34. கலித்தொகை, பா.133.

35. அ. கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப.3.

36. S. Merwym Garbarino, Socio Cultural Theoryin Anthiropology Op. Cit, P.49

37. S. Ibid., P.49.

38. வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.14.

39. கலைக்களஞ்சியம், ப.690.

40. மேலது., ப.690.

41. வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.12.

42. அ. கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல், ப.3.

43. நற்றிணை, பா.355:6-1.

44. குறள்.590.

45. நன்னூல், நூ.388.

46. தொல்காப்பியம், மரபியல், நூ.1.

47. மேலது., நூ.90.

48. தமிழ் சொல்லகராதி, ப.3086.

49. தமிழ்மொழி அகராதி, ப.1139.

50. மருதூர் அரங்கராசன், தமிழில் மரபுத் தொடர்கள், ப.36.

51. பாலா, புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, ப.15.

52. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.1538.

53. தி.சு. நடராஜன், கவிதையெனும் மொழி, பா.17.

54. மு. வரதராஜன், இலக்கியத்திறன், ப.20.

55. மு. வரதராஜன், இலக்கிய மரபு, ப.169.

56. மு.க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15.

57. மருதூர் அரங்கராசன், தமிழில் மரபுத் தொடர்கள், ப.30.

58. குறுந்தொகை, பா.235:1-5.

58. அகநானூறு, பா.112:16.

60. பரிபாடல், பா.14:32.

61. து. செல்வராசு, சமூகவியல் கொள்கைகள், ப.246.

# இயல் 2

## இல்லறப் பண்பாட்டு மரபு

### முன்னுரை

இல்வாழ்க்கையில் முதன்மை இடத்தைத் தலைமை இடமாகப் பெண்ணே பெற்றாள். அவள் அடக்குமுறைக்கு ஆளாக்கி அல்லற்படவில்லை. தனி உரிமையோடு நற்சிந்தனை உடையவளாக இல்வாழ்க்கை அளவில் சிறந்து விளங்கினாள். குடும்ப வாழ்க்கையில் ஆண்களோடு ஒத்த உரிமை உடையவர்களாக மகளிர் விளங்கினர். எனவே இல்லறப் பண்பாட்டு மரபில் பெரும்பங்கு பெண்களுக்கு உண்டு. தலைவனானவன் பொருள் தேடச் செல்கிறான். பொருள் ஈட்டுவது மட்டுமே அவனது தொழில் ஆனால் இல்லறத்தில் இருக்கும் தலைவிக்குத் தான் அதிக பொறுப்புக்கள், கடமைகள், ஒழுக்கநெறிகள் போன்றவை குறிப்பிடப்படுகிறது.

இல்லற வாழ்வில் திருமணம் முக்கிய பங்கு வகிக்கிறது. இருமணம் கலந்து ஒரு மனமாவதற்குத் திருமணம் வழிவகுத்தக் கொடுக்கிறது. பண்டையத் தமிழர்களின் சிறந்த பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். வந்த விருந்தினரை முகம் மலர வரவேற்று விருந்தோம்புவது இல்லறத்தின் கடமையாகும். விருந்தோம்பலுக்கு அடுத்த நிலையில் தன் வாழ்க்கையை சரியான முறையில் கொண்டு செல்ல, குலத்தை விருத்தி அடையச் செய்ய நன் மக்களைப் பெறுவது இல்வாழ்க்கையில் பெரும் பயனாக கருதப்பெற்றது. மேலும் இல்லறம் சிறப்பாக அமைய வேண்டும் என்றால் ஈதலே முக்கியப் பங்கு வகிக்கிறது. மனிதனின் நல்லறம் பலவற்றுள் உயர்ந்தது ஈகையாகும். மேலே குறிப்பிட்ட அனைத்தையும் சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபோடு ஆராயப்படுவதாக இவ்வியல் அமைக்கப்பட்டுள்ளது.

## இல்லறம் விளக்கம்

'இல்லற மல்லது நல்லற மன்று' என்ற கொன்றை வேந்தனின் சொல்லுக்கு ஏற்ப, இல்லறம் நல்லறமாக அமைய வேண்டும் அவ்வாறு நல்லறமாக அமைய, ஆடவனுக்கு இன்றியமையாத துணையாக அமைபவள் மனைவியே ஆவாள். இல்லத்தை ஆளுகின்ற தன்மை கொண்டுள்ளதால் 'இல்லாள்' என்று அழைக்கப்பட்டன. இல்+அறம் = இல்லறம் ஆகும் அதாவது இல்லத்தை அறத்தோடு ஆட்சி செய்வதால் இல்லறம் என்றாயிற்று.

அறம் என்ற சொல் விரிந்த பொருளுடையது. மனிதன் புரியும் நற்செயல்கள் அனைத்தையும் இதில் அடக்கிக் கூறலாம். தமிழரின் அக வாழ்க்கையில் அறம் கடைப்பிடிக்கப்படுவதைத் தமிழ் இலக்கியங்கள் குறிப்பாகவும், தெளிவாகவும் புலப்படுத்தி இருப்பதைக் காணலாம். ஒரு மனிதனின் வாழ்வு சிறப்பாக அமைய அறம் இன்றியமையானது.

***"அறம் பொரு ளின்பம்வீ டடைதனூற் பயனே"[1]***

என்ற நன்னூல் நூற்பாவும் இதனை நிறுவுகின்றது. பழங்கால மக்கள் பசி, பிணி, பகை, வறுமை ஆகிய வாழ்க்கைப் போராட்டங்களிக்கிடையே இன்பமும், பொருளும் பெற வெவ்வேறு நெறிகளையும் பின்பற்றியிருப்பர். இந்நெறிகளில் பிறருக்குத் தீங்குபயவாத நல்ல நெறியில் பெற வேண்டும் என்ற ஒழுகலாறு கட்டுப்பாடாக கடமை உணர்வாக மக்களிடம் வளர்ந்து ஏற்றுக் கொள்ளப்பெற்ற நெறிகளை அறங்கள் என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

" 'இல்லறம்' என்ற சொல்லிற்கு 'இல்லத்தில் மனையாளோடு கூடி வாழும் ஒழுக்கம்', 'இல்வாழ்க்கை".[2] என்று ச.வே சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

அ. தட்சிணாமூர்த்தி கூறுவது "பண்டைய தமிழர் குடும்ப வாழ்வு பற்றி மிகவும் உயர்ந்த கொள்கைகளைக் கொண்டிருந்தனர் அவர்களுக்கு அறம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியன்று; வாழ்வு ஒன்றுமே அறமாகும்."[3]

"உலக வாழ்க்கை இல்லறம், துறவறம், தனி வாழ்க்கை என மூவகைப்படும். ஒரு கற்புடையப் பெண்ணை மணந்து இல்லத்திலிருந்து அறம் செய்து வாழும் வாழ்க்கை இல்வாழ்க்கையாகும். உலகப்பற்றை ஒழித்து வீடுப்பேற்று முயற்சியில் ஈடுபடுவது துறவறமாகும். மணம் செய்யாது உலகப் பற்றோடு தனியாயிருப்பது தனி வாழ்க்கை ஆகும்."[4]

என்றும் இவற்றுள் இல்வாழ்க்கையேச் சிறந்தது என முதன்மையாகக் கொண்டனர் எனவும் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணார் குறிப்பிடுகிறார்.

சமுதாய உயர்வுக்கு இனிமையான இல்வாழ்வு முதல் நிலையாகும். இத்தகைய இல்லறத்தைச் சங்ககால மக்கள் அறம் என்று மதித்தனர். இதனை,

***"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***

***அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்"[5]***

என்று தொல்காப்பியம் சுட்டியுள்ளது.

தலைவன், தலைவி இருவரும் காதல் கூடிய பின்னர் அவன் அவளுக்காகவும் அவள் அவனுக்காகவும், பின்னர் இருவரும் தாம் பெறும் மக்களுக்காகவும் என வாழத் தொடங்குகின்றனர். மனைவி, மக்கள், குடும்பம் என்று கருதியவன் அக்குடும்பங்களால் நிறைந்த உலகத்தையும் இல்லற வாழ்வில் காணமுடிகிறது. இல்லறம் என்பதற்கு மனையறம் என்ற பொருளும் உண்டு. இத்தகைய மனையறத்தில் ஒன்றுபட்டு இறுதிவரை மகிழ்வுடன் வாழ்வதே தமிழர் பண்பாட்டு மரபாகும்.

திருவள்ளுவர் 'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' எனக் கூறுவது குறிப்பிடத்தக்கது. துறவறத்தை யாரும் விரும்பவில்லை மாறாக இல்லறத்தைச் செம்மையுற ஆற்றினர். இல்லறத்தின் சிறப்பைத் தொல்காப்பியர்,

***"காமம் சான்ற கடைக்கோட் காலை***
***ஏமம் சான்ற மக்களோடு துவன்றி***
***அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்***
***சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"[6]***

என சுற்றம், குழந்தை, மனைவியோடு கூடி இருப்பதே சிறப்பைத் தரும் என வலியுறுத்தியுள்ளார்.

கணவன் மனைவி என்னும் உறவு திடீரென்று ஒரு நாளில் ஏற்படுவதன்று, பல பிறவிகளைத் தொடர்ந்து வரும் உறவுமுறை ஆகும். முற்பிறவிகளில் கணவன் மனைவியாக வாழ்ந்தவர்கள் ஊழின் வலிமையால் மீண்டும் கூடுகின்றனர் என்ற கொள்கையை குறுந்தொகை சுட்டுகிறது.

***"இம்மை மாறி மறுமையாயினும்***
***நீயா கியரென் கணவனை***
***யானகியள் நின் நெஞ்சு நேர்பவளே"[7]***

என்பது அறியத் தகுந்தது.

மனம் ஒத்த அன்பே இல்வாழ்வின் தலையாய பண்பாகும். உடலும் உயிரும் போல இயைந்த அன்புடன் விளங்கிய திறத்தினை,

***"யாக்கைக்கு உயிர் இயைந்தன்ன நட்பின்***
***அவ்உயிர் வாழ்தல் அன்ன காதல்***
***சாதல் அன்ன பிரிவு அரியோனே"[8]***

என்று அகநானூறு சுட்டுகின்றது. மனம் ஒத்த அன்பே இல்வாழ்கையின் அடிப்படைப் பண்பாட்டு மரபாக விளங்கியது.

இல்வாழ்கை என்பதே மனிதன் பக்குவப்படும் தளம் என்பதால் பல துன்பங்கள் வந்து சேர்வது இயற்கை,

***“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை***

***பண்பும் பயனும் அது”[9]***

என்று வள்ளுவர் கூறுகிறார். இல்வாழ்கையின் பயனாகப் பிறர்மீது செலுத்தும் அன்பும் பிறர் நலனில் கொள்ளும் அக்கறையும்  உயர் குணமாகிய அறமும் சிறந்த பயனாகும். தனி மனித வாழ்வு என்பது கட்டுப்பாடில்லாத, ஒழுங்கில்லாத வாழ்க்கையாக இருந்து வருகிறது. துன்பங்களுக்கிடையில் வரும் சிறிய அளவான இன்பமே வாழ்வில் இன்புற முடியும் என்பது இல்வாழ்கையின் தத்துவமாகும்.

## ஆடவர் மகளிர் அறம்

“மண்ணுலகின் நிலைப்பேற்றிற்கு இல்வாழ்வே காரணமாகும். இதனை, மக்களுலகின் நிலை பேற்றுக்குக் காரணம் ஆடவரும் பெண்டிரும் மணம் புரிந்து கொண்டு ஒருவருக்கொருவர் வாழ்க்கைத் துணையாய் மனையறம் செய்தலே என்பது தமிழர் நன்கறிந்த உண்மை. மனையறம் மாண்புறுமாயின் உலகியல் வாழ்வு அன்பும் அறமும் நிறைந்து, பொருளும் இன்பமும் பயத்து வானுறையும் தெய்வ வாழ்வு பெறுவதற்குப் பெருவழியாம்.”[10] என்று ஔவை. துரைசாமிப் பிள்ளை குறிப்பிடுகிறார்.

மனையறம் புரிதலை மகளிரும் வினையறம் புரிதலை ஆடவரும் மேற்கொண்டதால் இல்லறம் சிறந்து விளங்கியது. கணவனும் மனைவியும் இணைந்து முறைப்படி நடத்தும் இல்லறச் சிறப்பினை,

***“மனைஉறை வாழ்க்கை வல்லியாங்கு***

***மருவின் இனியவும் உளவே”[11]***

என்று குறுந்தொகைக் கூறுகின்றது.

அறம் செய்வதற்கு பொருள் இன்றியமையாதது என்பதால் பொருள் பெற ஆடவர் பிரிவது பண்பாட்டு மரபாக இருந்தது என்பதை (குறு.135 :1-2) பாடல் வரியிலிருந்து அறியமுடிகிறது.

'ஆய்நலம் தொகையினும் தொலைக' பொருள் தேடச் சென்ற தலைவன் நோய் இல்லாமல் வாழ்க என்று கணவன் நலத்தில் கருத்துடையவராக மகளிர் விளங்கினா்.

பிசிராந்தையார் என்ற புலவருக்கு வயது முதிர்ந்ததும் தலைமயிர் நரைக்காததைக் கண்டவர்கள் அதற்குரிய காரணத்தை கேட்டப்போது அதற்குப் பல காரணங்களைக் கூறும் புலவர் தம் தலைவி மனையறம் சிறப்புறுதற்கேற்ற பண்பாட்டு மரபுகள் நிறைந்தவள் என்பதை முதற்காரணமாகக் குறிப்பிடுகிறார்.

***"மாண்ட என் மனைவி"[12]***

என்கிறார். தன் அரசனையே பகைவரிடமிருந்து பாதுகாக்கும் பெரு வீரனாயினும் அவருக்குப் புகழைத் தருபவள் இல்லத்திற்குரிய மாண்புகள் எல்லாம் நிறையப் பெற்று மனைக்கு ஒளி விளக்காக விளங்கும் அவன் மனைவியே என்பதை அறியமுடிகிறது. ஆணும், பெண்ணும் கூடி வாழும் வாழ்க்கை இனிமை நிறைந்தது. ஆண் திரைகடல் ஓடியும் திரவியம் தேடுகின்றான். அறம் செய்கின்றான், சேமிக்கவும் செய்கிறான், பல வகையிலும் நுகர்கின்றான், அறுசுவை உணவு உண்கிறான், நல்லாடை உடுக்கின்றான், ஓவியம் வரைகின்றான், இணை பிரியாமல் மனைவியுடன் வாழவும் விரும்புகின்றான். இதனை திருக்குறள்,

***"கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்***
***ஒண்டொடியாள் கண்ணே உள"[13]***

என எண்ணி எண்ணி இன்புறுகின்றான். அன்பு வாழ்க்கை அறவாழ்க்கை வளர்கிறது.

## இல்லறமும் பெண்களும்

ஒரு குடும்பம் சிறப்பாக அமைவதற்கும் அக்குடும்பம் பெருமையடைவதற்கும் பெண்ணின் பொறுப்பே மிகுதியாக இருந்தது. மனைக்கு விளக்காகிய மனைவியே இல்லறத் தன்மை ஏற்றாள்.

“குடும்ப கடமையினை, வீட்டுப் பொறுப்பினைப் பழந்தமிழர் பெண்ணிற்கே வழங்கிப் பெருமை பெற்றனர். ‘இல்லாள்’, ‘மனையோள்’ மனைமுதல் முதலிய சொற்கள் வீட்டுத் தலைமை மகளிர்க்கே தரப்பட்டது என்பதனை உணர்த்தும், மேலும் இச்சொற்களுக்கு நேரான ஆண்பாற் சொற்கள் தமிழில் இல்லையென்பதும் அறியத் தகும்.”[14] என்று சி. பாலசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

ஒரு பசுவினால் வரும் ஊதியத்தைக் கொண்டு வாழ்ந்து வந்த குடும்பம் தலைவியை மணமுடித்த பின்னர் விழா எடுக்கும் அளவிற்குச் செல்வச் செழிப்பு மிக்கதாக உயர்ந்த நிலையை,

***“ஓர்ஆன் வல்சிச் சீர்இல் வாழ்க்கை***
***பெருநலக் குறுமகள் வந்தென***
***இனி விழவு ஆயிற்று என்னும் இவ்ஊரே”[15]***

என்று குறுந்தொகை விளக்குகின்றது. சங்ககால மக்கள் இல்லாளுக்கே இல்லறத்தில் பெரிதும் பொறுப்புகளையும் கடமைகளையும் வழங்கினர்.

“தன்னை வடிவாய் இருந்த மனிதனைப் பிறர் நலம்பேணும் பெருந்தகையாக மாற்றியது இல்லறம் என்னும் நல்லறம்”[16] என்று அ.ச. ஞானசம்பந்தன் குறிப்பிடுவனவற்றை அறியலாம்.

குடும்பத் தலைவன் தவறு செய்யும்போது ஊடல் கொண்டு அவனைத் திருத்துகிறவள் குடும்பத்தலைவி, கற்புடைய மங்கையர் பிள்ளைப் பேறு வாய்ப்பதற்கும், கணவரது செயல் நிறைவேறுவதற்கும், கணவன் போரில் வெற்றி பெறுவதற்கும் முருகப்பெருமானை வேண்டி வழிப்பட்டதை,

***"கருவயிறு உறுக எனக் கடம்படுவோரும்***

***செய்பொருள் வாய்க்க எனச் செவி சார்த்துவோரும்***

***ஐ அமர் படுக என அருச்சிப் போரும்"***[17]

என்ற பரிபாடலின் மூலமாக இல்லற வாழ்வு சிறப்பாக அமைய பெரிதும் கடமையாற்றியுள்ளாள் மனைவி என்பது தெளிவாகிறது.

## இல்லறமும் இனிமையும்

மாண்புடைய பெண் இல்லத்தின் ஒளி விளக்கு. பெண்கள் இல்லாவீடு விளக்கு இல்லா இருள் போன்றது. மேகத்தை தவழும் அளவிற்கு உயரம் உடைய மாளிகை இருப்பினும், அம்மாடத்தில் விளக்குகள் அணிகலனாய் விளங்குவதைப் போல் பெண் இல்லறத்திற்கு அணிகலனாய் திகழ்கின்றாள்.

மனைவி என்பவள் இல்லத்திற்குச் சிறப்பு சேர்ப்பவள் ஆவாள். எனவே அவள் ஒழுக்கம், பண்பு நிறைந்தவளாய் இருக்க வேண்டும். இல்லையெனில் அவ்வில்லம் சிறப்புடன் திகழாது. எனவே ஒரு இல்லறம் சிறக்க மனைவி சிறப்பு சேர்ப்பவளாக இருந்தால்தான் அக்குடும்ப வாழ்வு சீராக அமையும் என இலக்கியங்கள் காட்டுகின்றன.

குலத்திற்கு ஏற்ற இயல்புகள் அதாவது அச்சம், நாணம், மடம் கொண்டு கற்பில் சிறிதும் வழுவாமல் தன் சுதந்திரத்தை முறையாகப் பயன்படுத்தி நெறியுடன் வாழ்ந்து தன்னலம் பார்க்காமல் தாய், தந்தை சுற்றுத்தைக் காத்து இல்லறத்தில் வாழ்வது மகளிர்தம் பண்பாட்டு மரபாகும். உயர்ந்த கற்பைப் பெற்ற இந்திராணி போன்ற பெண்கள் தம்மை ஒருவர் விரும்பி வேட்கையால் நட்பு கொண்டாலும்

அதற்கு இடம் கொடுக்காது வாழ்வர். எனவே கணவனிற்குரிய கற்புடைய துணையாக பெண்கள் பண்புடன் திகழ்வர் என்பதை அறியமுடிகின்றது.

தலைவி தலைவன் விரும்பும் வகையில் தன்னை அழகு செய்து, பிறர் கண்டு அஞ்சும் வண்ணம் ஒப்புரவு கொண்டு, மதிப்பும் பண்பும் கொண்டு, தலைவன் மனம் அறிந்து, அதற்கு ஏற்ப அன்பு கொண்டு வாழ்வது சிறப்புடையது ஆகும்.

கட்டுச் செட்டாகச் செலவு செய்யும் பெண்ணால் குடும்பம் முன்னுக்கு வரும். குடும்பத்திலே செல்வம் பெருகும். ஊரார் இதைப்பற்றிப் பெருமையாகப் பேசுவர். அவள் அடி வைத்த பிறகுதான் குடும்பம் முன்னுக்கு வந்தது; அவள் நல்லபேறு உள்ளவள், திருமகளுக்கு ஒப்பானவள் என்று புகழ்ந்து பேசுவர், இவ்வாறு குடும்பத்திற் கவலையுள்ள பெண்களைப் போற்றும் வழக்கத்தைப் பழந்தமிழ் நூல்களிலே காணலாம்.

***"யாய் ஆகியளே விழவுமுத லாட்டி"***[18]

தலைவியானவள் தலைவன் செல்வம் பெற்று மகிழ்ந்து வாழ்வதற்குக் காரணமாக உள்ளாள். என்பதை குறுந்தொகை உணர்த்துகிறது.

## பெண்களின் இயல்பு

பெண்கள் தம் செயல்களைக் கணவன்மார்கள் பாராட்ட வேண்டுமென்றே விரும்புவார்கள். அவர்கள் உடல் வருந்திச் செய்திருக்கும் செயல்களைப் பழித்தால் - வெறுத்தால் வேதனையடைவார்கள்; புகழ்ந்தால்தான் - பாராட்டினால்தான் அவர்கள் மனம் சாந்தியடையும் இது பெண்களின் இயற்கை.

தன் சமையலைக் கணவன் பாராட்டினால் அதற்காக மகிழ்ச்சியடையாத மனைவியேயில்லை; குற்றங் கூறினால் கோபங்கொள்ளாத மனைவியும் இல்லை. இந்த இயற்கையை இன்றும் குடும்பங்களிலே காணமுடிகிறது. இவை காலப்போக்கில் இல்லறப் பண்பாட்டு மரபாக கடைபிடித்து வருகிறது.

ஒரு பெண் புளித்த தயிரைத் தன் காந்தள் மலர் போன்ற மெல்லிய கைகளால் பிசைந்தாள். அப்போது அவள் உடுத்தியிருந்த துவைத்த ஆடை அவிழ்ந்துவிட்டது தன் கையைக் கழுவாமலே அந்த ஆடையை அணிந்துக்கொண்டாள். தனது உடல் தூய்மையை கூட பார்க்காமல் பெண்கள் தன் கணவன்மார்களுக்கு சமையல் செய்கின்ற அழகு இல்லறப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

அடி பிடிக்காமல் இருக்க அடிக்கடி கலக்கிவிட்டுக் கொண்டே இனிய புளிக்கறி செய்தாள். அதை எண்ணெயிலே பொரித்துக் கொட்டினாள். 'குய்' என்ற ஓசையுடன் எழுந்த புகை அவளுடைய குவளை மலர் போன்ற கண்களை மறைத்தது. கணவனுக்கு உணவிடும்போது அவள் வருத்திச் சமைத்த புளிக்கறியைப் பரிமாறினாள். 'கறி மிகவும் நன்றாயிருக்கின்றது' என்று சொல்லிக்கொண்டு அவன் அதைச் சுவைத்துச் சாப்பிட்டான். அதைக் கண்டு அவளுடைய முகம் மகிழ்ச்சியடைந்தது. இவை அனைத்தும் இல்லறத்தில் நடக்கும் பண்பாட்டு மரபினை எடுத்துக்காட்டுகிறது. இதனை,

> ***"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்***
> ***கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்,***
> ***குவளை உண்கண் குய்ப்புகை கமழத்***
> ***தான் துடிந்து அட்ட தீம்புளிப் பாகர்,***
> ***இனிது எனக் கணவன் உண்டலின்***
> ***நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"[19]***

இதுவே பெண்களின் இயற்கைத் தன்மையை எடுத்துக்காட்டும் பாடலாகும்.

## இல்லற வாழ்வின் தனித்தன்மைகள்

இல்லறவாழ்வு என்பது ஒரு நோக்கத்தை முன்னிறுத்தி செல்வதாகவே உள்ளது. அடுத்தநிலையில் நோக்கம் அல்லது குறிக்கோள் என்பது மனிதனுடைய

வாழ்க்கையை அறவழியில் கொண்டு செல்லும் ஓர் உயர்ந்த செயல்பாட்டு வடிவமாகும்.

'குறிக்கோள் அற்ற வாழ்க்கை குன்றிப் போய் விடும்' என்ற பழமொழியைப் போல் குறிக்கோள் இல்லாத வாழ்க்கை பயன் அற்றதாக ஆகிவிடும் என்பதற்காகவே பழந்தமிழரின் வாழ்வியல் குறிக்கோள்கள் சிறப்பாகச் சுட்டப்படுகின்றன.

"மக்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு பகுதியினரும் அவரவர் நிலைமைக்கேற்ப சில குறிக்கோள்களைக் கொண்டிருத்தல் இயல்பே. இக்குறிக்கோள் இல்லறப் பண்பாட்டு மரபாக உள்ளது. ஒவ்வொருவர் தனிவாழ்விலும் அவரவருக்குத் தேவையான வசதிகளைச் செய்துகொள்ளவும்; பிறருடன் கூடி வாழவும் சில நியதிகள் அவசியமாகின்றன. வாழ்க்கைக்குரிய நியதிகளையும் நெறிமுறைகளையும் பூட்கை என முன்பு வழங்கினர். பூட்கையாவது பூண்பது அல்லது மேற்கொள்வது என்று பொருளாகும். இதனால் லட்சியங்களை மேற்கோள், குறிக்கோள் என்றும் பின்னர் வழங்குவராயினர்"[20] என்று மு.சண்முகம்பிள்ளை குறிப்பிடுகிறார்.

## ஒப்புமை

இல்லற வாழ்வில் கணவனுக்கும், மனைவிக்கும் பத்துப்பண்புகள் ஒத்திருத்தல் வேண்டும். மணமக்களாகும் இருவரும் ஒத்தக் குடியிற் பிறந்தவராகவும், தாம் மேற்கொள்ள இருக்கும் குடும்ப வாழ்க்கையைச் செம்மையாக நடத்தும் ஆள்வினைத் திறம் உடையவராகவும் இருத்தல் வேண்டும். வயதாலும் பொருத்தம் உடையவராதல் வேண்டும். அஃதாவது தலைவன் பதினாறாண்டு நிரம்பியவனாகவும் தலைவி பன்னிரண்டாண்டு நிரம்பியவளாகவும் இருத்தல் வேண்டும் என்பது முன்னோர் கருத்து.

தோற்றப் பொலிவாலும் இருவரும் ஒத்திருத்தல் நலமாகும். தோற்றப் பொலிவே அன்பு தோன்றுவதற்கு முதற்காரணம். இவ் அன்பினாலும் இருவரும்

ஒத்திருத்தல் இன்றியமையாதது. இருவரும் அறிவினாலும் ஒத்திருத்தல் சாலச் சிறந்தது.

செல்வம் நிரம்பியுள்ள காலத்து விரும்பியும் குறைந்த காலத்து வெறுத்து வாழும் வாழ்க்கை நீங்கி, எஞ்ஞான்றும் உள்ளம் நிறைந்தவராய் இருவரும் வாழ்தல் வேண்டும். கணவனும் மனைவியும் ஒத்து வாழ்வதற்கு இன்றியமையாத இவ்வுயர்ந்த பண்பாட்டு மரபினைப்

***"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு***
***உருவு நிறுத்த காம வாயில்***
***நிறையே அருளே உணர்வொடு திருவென***
***முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"***[21]

என்கிறார் தொல்காப்பியர். மணமக்களாய் வாழ்க்கையில் இணைவோருக்கு இக்காலத்தில் பார்க்கப்படும் கணப்பொருத்தம் முதலான பத்துப் பொருத்தங்களைப்போல் அல்லாமல், குடிப்பிறப்பு முதலான பத்துப் பொருத்தங்கள் இன்றியமையாதது என்று முன்னோர் கொண்டிருந்தது எக்காலத்திற்கும், எந்நாட்டவர்க்கும் எவ் இனத்தாருக்கும் ஏற்றதாக அமையும்.

சங்க காலத்தில் மக்கள் இல்லற வாழ்க்கையை பெரிதும் போற்றி வாழ்ந்தனர். ஒருவனும் ஒருத்தியும் இணைந்து வாழ்ந்தார் என்றால் அவர்களுக்கு வீடுபேறு தானாக வந்து அமையும் என்ற அடிப்படையில் இல்லறப் பண்பாட்டு மரபு தமிழரின் கொள்கையாக இருந்தது.

## இறைவழிபாடு

இல்லறம் சிறப்பாக அமைய இறைவழிபாடு முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது தெய்வக் கோட்பாடு தொன்றுதொட்டு மக்களிடையே வேர் ஊன்றி வந்துள்ள ஒரு பண்பாட்டு மரபாகும். மனித சக்திக்கு மேற்பட்ட

மற்றொரு சக்தி இந்த உலகை ஆட்டிப்படைப்பதாக அவர்கள் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் முதற்காரணமாக இருப்பது தெய்வசக்தியே என நினைத்தால், எந்த வினையிலும் முதலில் தெய்வத்தைப் போற்றும் பண்பை மேற்கொண்டனர்.

"யாவரும் இவ்வுலகில் உயிர்வாழ்வதற்கு உணவே இன்றியமையாத தேவை என்பதை அனைவரும் அறிவர். உணவுக்கு பிறகுதான் ஏனைய ஆயினும் சங்ககாலத் தமிழ் மக்கள் உணவினும் முதன்மையாகக் கடவுளைக் கருதி வாழ்ந்தனர்".[22] என சி. இலக்குவனார் குறிப்பிடுகிறார்.

என்றக் குறிப்பும் காணப்படுகிறது. மேலும் இறைவழிபாடு குறித்த பிற விளக்கங்கள் பின்னர் இயலில் ஆராயப்பட உள்ளது.

## திருமணம்

இருமனம் கலந்து ஒரு மனமாவதற்குத் திருமணம் வழி வகுத்துக் கொடுக்கிறது. இரண்டு உயிர்கள் இன்பம் பெற்றுத் தெய்வ நிலை அடைய வழிகாட்டுதலாய் அமைவது திருமணமே. திருமணம் வெவ்வேறு காலக்கட்டங்களில் வெவ்வேறு முறையில் தோன்றியிருக்க வேண்டும். குழுமணமுறை தோன்றிப் படிம வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும் என்றும் சிலர் கூறுகின்றனர்.

ஓர் ஆடவனும், ஒரு பெண்ணும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேர்வதே திருமணமாகும். மணத்தல், கலத்தல்(அ) கூடுதல் என்ற பொருளை உணர்த்தும் மனவாழ்க்கைக் கென்றே இறைவன் ஆணையும், பெண்ணையும் படைத்திருக்கிறான். திருமணம் ஆயிரங்காலத்துப் பயிர் என்பதாலும், தெய்வத்தையும் பல பெரியோர்களையும் சாட்சியாக வைத்து மணம் செய்து கொள்கின்றனர்.

“திருமணம் என்ற சொல்லை நாம் திரு+மணம் எனப்பிரிக்கலாம். மணம் என்பதே தமிழரின் பழைய மரபு தான். ஒரு கன்னிப் பெண்ணின் கூந்தலிலே மலர்சூடி அவளை ஊரும் உறவும் அறியத் தன் மனதிற்கு இனியவளாக, வாழ்க்கைத் துணைவியாக ஒருவன் ஏற்றுக்கொள்வதானலேதான் மணம் திருமணம் என்ற பெயர் அச்சடங்கிற்கு ஏற்பட்டது. இவ்வாறு கணவனும் மனைவியுமாய் வாழத் தொடங்கும் நிகழ்ச்சிக்கு திருமணம் என்று பெயர் வைத்தமை எண்ணி மகிழ்வதற்குரியதாகும்.”[23] என சசிவல்லி குறிப்பிடுகிறார்.

இலக்கியத்தில் வதுவை, மன்றல், மணம், வரைவு என்ற சொற்கள் திருமணத்திற்கு வழக்கப்பட்டுள்ளது. ஆணும் பெண்ணும் இணைந்து வாழும் வாழ்வை இல்லற வாழ்வு என்றும், கற்பு வாழ்வு என்றும் தமிழர் குறித்தனர் மேலும்,

***“கற்பெனப் படுவது கரணமொடு புணரக்***
***கொளற்குறி மரபின் கிழவன் கிழத்தியைக்***
***கொடைக்குறி மரபின் கொடுப்பக் கொள்வதுவே”[24]***

என்ற தொல்காப்பியர் திருமணத்தை வரையறை செய்கிறார் .

இரண்டு வகையான திருமண முறையை நம் முன்னோர் கடைப்பிடித்துள்ளனர். ஒன்று ஆணும், பெண்ணும் ஒருவரை ஒருவர் மனம் பொருந்தி சேரும் காதல் திருமணம். இரண்டு குடும்பத்தில் பெற்றோர்கள் பெண்ணைப் பார்த்து பொருத்தங்கள் பார்த்து சேர்த்து வைக்கும் திருமணம்.

## சங்க இலக்கியத்தில் காதல்

சங்க நூல்களுள் அக இலக்கியங்களே காதலை மையப்படுத்திதான் கூறுகின்றன. தொல்காப்பியர் களவு, கற்பு வாழ்க்கை என இருவகையாகப்

பிரிப்பர். இதில் களவு வாழ்க்கை திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்க்கை. கற்பு வாழ்க்கை திருமணத்திற்கு பிந்தைய காதல் வாழ்க்கை. இதில் இரண்டிலும் உண்மை இருக்க வேண்டும். இல்லையென்றால் துன்பம்தான் நிகழும்.

## களவு வாழ்க்கை

"களவாவது பிறர்க்குரிய பொருளை மறைந்து பெறுதல் ஆகும். ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரை உறவினர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து, பின்னும் அறநிலை வழாமல் நிற்றலால் களவும் அறமென இளம்பூரணார் விளக்கம் தருகின்றார்."[25]

***"காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்***
***பாங்கொரு தழாஅலுத் தோழியிற் புணர்வுமென்***
***றாங் கநால் வகையினும் அடைந்த சார்வொடு***
***மறையென மொழிதல் மறையோர் ஆறே"[26]***

என்கிறார் தொல்காப்பியர் மனம் ஒத்தவர்கள் சந்திப்பதும் அதற்கு ஏற்றவகையில் நல்ல இடம் தேடுதலும், பாங்கன் உதவி செய்தலும், தோழியின் புணர்வும் ஆகிய நான்கு நிலையான களவு தன்மையை அறியமுடிகின்றது.

களவு காலத்தில் பிறர் அறியாதவாறு மணந்த நிகழ்வினை தலைவனைத் தவிர வேறுயாரும் அச்சமயம், அவ்வமையம், தலைவன் அளித்த சூளுரையை மறுத்தால் யான் என்ன செய்வேன் என தலைவி வருத்தும் நிலையினை,

***"யாரும் இல்லை தானே கள்வன்"[27]***

என்ற குறுந்தொகைப் பாடலில் காணமுடிகின்றது. மேலும்,

*“ஊசல் ஊர்ந்து ஆட ஒரு ஞான்று வந்தானை*

*ஐய! சிறிது என்னை ஊக்கி எனக் கூற*

*தையால்! ஒன்று என்று அவன் ஊக்க கைநெகிழ்வு*

*பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின்”[28]*

என்ற கலித்தொகை பாடலானது ஒருமுறை குறிஞ்சி நிலத்திலே தினைப்புனம் காக்கச் சென்றாளாம் தலைவி. அப்பொழுது யானையைத் துரத்தி வந்த தலைவன் தலைவியைப் பார்த்தானாம். தலைவி ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தாளாம். அப்பொழுது கொஞ்சம் ஊஞ்சலை ஆட்டிவிடு எனத் தலைவி கூற, தலைவனும் ஆட்டிவிட்டான். கை நெகிழ்ந்தபோது தலைவியானவள் தலைவனின் மார்பிலே விழுந்தாளாம். இருவருக்கும் காதல் தொற்றிக் கொண்டது. இதுபோன்ற நிகழ்வுகள் களவுப் புணர்ச்சியில் நிகழும் என்பதை சுட்டிக்காட்டியுள்ளார்.

*“யாவும் ஞாயும் யார் ஆகியரோ?*

*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*

*யானும் நீயும் எவ்வழி அறிதும்*

*செம்புலப் பெயர் நீர்போல*

*அன்டை நெஞ்சம் தாம் கலந்தனவே”[29]*

என்ற குறுந்தொகை பாடலில், உன்னுடைய தாயும் தந்தையும் என்னுடைய தாயும் தந்தையும் என்ன உறவினர், நீயும் நானும் எந்தக்குடியில் இருந்து வந்தவர்கள். ஆனால் வானத்தில் இருந்து வரும் மழையும் நிலத்தில் பட்டு விழும் தண்ணீரும் செம்மண்ணும் சேர்ந்து செம்மை நிறத்தில் ஓடுகிறதே அது போலத்தான் நம்முடைய காதல் இன்று ஒருவர் உடலில் ஒருவர் உடல் புகுவதுபோல் புகுந்து கைகளால் இறுகப்பற்றித் தழுவிக்கொண்டு ஈருடல் ஒரு உயிராக காதலர்கள் இருப்பார்கள் என்று குறுந்தொகை சுட்டுகிறது.

குறுந்தொகையில் காதல் உணர்வு சூழலுக்கு ஏற்ப மாறுபட்டுத் தோன்றும் என்பதைக் கவிதை வழி படம்பிடித்துக் காட்டியுள்ளார்.

*“வேம்பின் பைங்காய் என்தோழி தரினே*

*தேம்பூங்கட்டி என்றனிர்”*[30]

என்று இடம்பெறும் குறுந்தொகைப் பாடலில், காதலியை நேசித்த காலத்தே அவள் அணிந்த வேப்பங்காயை தேம்பூங்கட்டி எனக்கூறி உண்டானாம். ஆனால் சில காலம் சென்றபின் அதே தலைவி பாரி பரம்பின் பனிச்சுவைத் தண்ணீர் தந்தால் உவர்க்கும் என்றானாம். எனத் தோழி கூற்றாக ஆசிரியர் கூறுகின்றார்.

## கற்பு வாழ்க்கை

கணவன் மனைவி ஆனப்பிறகு இல்லறத்தில் இருந்து ஆற்ற வேண்டிய அறங்களைக் குறித்தே கற்பு வாழ்க்கை நிகழும் எனலாம்.

*“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்*

*செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று”*[31]

என்றும்,

*“வறன் ஓடின் வையகத்து வான் தரும் கற்பினாள்”*[32]

என கற்பின் உறுதியான நிலையினை தொல்காப்பியர் மற்றும் கலித்தொகை குறிப்பிடுகிறது. சங்க காலத்தில் பெரிதாகச் சொல்லப்படும் வாழ்க்கை மதிப்பு கற்பு என்பதாகும். நிலவுடைமை ஆதிக்கம் தோன்றுகின்ற காலங்களிலெல்லாம், பெண்கள் ஆடவனின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கியிருக்கின்றனர் என்பதை உலக வரலாற்றுப்போக்கு ஒருமனதாக உணர்த்துகின்றது.

கற்புஎன்பதனை பெண்ணிற்கு முன்னிலை வைத்து சொல்லப்பட்டதையும் ஆடவன் பெண்ணைத் தனக்குரிய உடைமைப் பொருள்களில் ஒன்றாகவும் போகப்பொருளாகவும் மதிப்பிடுகிறான். இதனால் அவன் பெண்ணைக் காக்க வேண்டிய அவசியத்தால் தன் கட்டுப்பாட்டுடன் வைக்க எண்ணுகிறான்.

எனவே, பெண்ணுக்கு உயர்ந்த மதிப்பினைக் கூறி அம்மதிப்பினையே அவளைக் காக்கும் கவசமாக ஆக்கி விடுகின்றான்.

***“சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்***

***நிறைகாக்கும் காப்பே தலை”[33]***

என்கிறார் வள்ளுவர் பெண்ணுக்கு காக்கும் கருவி அவள் மட்டுமே ஆகும்.

வேட்டைக்குச் செல்லும் ஆடவன் தான் விரும்புகிற வேட்டையைப் பெற வேண்டுமானால் அவனது மனைவி கற்புடையவராக இருத்தல் வேண்டும். என்பதை,

***‘தாம் பிழையார் கேள்வர்த் தொழுதெழரால் தம்மையரும்***

***தாம் பிழையார் தாம் தொடுத்த கோல்’[34]***

எனக் கலித்தொகை குறமகளிரின் கற்பு தன்மையை வெளிக்காட்டுகிறது.

## திருமணம் - நேரம் பார்த்தல்

எந்தச் செயலைச் செய்தாலும் காலம், நேரம், நிமித்தம் பார்த்தல் என்பது பண்டைத் தமிழர் பண்பாட்டு மரபு ஆகும். திருமணத்திற்குரிய காலமாக வேங்கை மலரும் இளவேனிற் காலத்தை தேர்ந்தெடுத்துள்ளனர் என்பதை,

***“வேங்கை விரிவு இடம் நோக்கி”[35]***

என்ற பாடல் வரி விளக்குகின்றன. கணிகை (சோதிடன்) முன்னிட்டு மணநாளுக்கு ஏற்ற நாளை பெரியோர்களுடன் கூடி மணமகள் இல்லத்திற்கு சென்று நாள் குறித்தனர். இதுப் பற்றியச் செய்தியை,

***“நெறி அறி செரி புரி திரிபு அறியா அறிவனை முந்துறீஇ***

***தகைமிகு தொகை வகை அறியும் சான்றவர் இனமாக”[36]***

என்ற வரிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

இன்றைக்கும் திருமணம் பேசுவதற்குமுன் (சோதிடம்) பார்த்தல், நாள் குறித்தல் போன்ற பழக்கம் மக்களிடையே இருந்து வருகிறது. இது நம்முன்னோர்களிடமிருந்து வழிவழியாக வந்த பண்பாட்டு மரபாக கருதப்படுகிறது.

## திருமணச் சடங்குகள்

### சிலம்புகழி நோன்பு

திருமணம் நடைபெறுவதற்கு முன் தாய் வீட்டில் பெண்ணுக்குச் செய்யப்படும் சடங்கு சிலம்புகழி நோன்பாகும். சங்ககாலத்தில் பெண்குழந்தைகளுக்குப் பாலுண்பருவத்தில் கால்களில் சிலம்பணிவிக்கும் பழக்கம் உண்டு. இச்சிலம்பினைத் திருமணத்திற்கு முன்னர் கழிப்பது ஒரு பண்பாட்டு மரபாகும். அதனைச் சிலம்புகழி நோன்பு என வழங்குவர். சிலம்பைக் கழற்றுதற்குச் செய்யும் விழா சிறப்பை செவிலித்தாய் கண்டு மகிழாது இருந்த செய்தியை,

*"சிலம்பு கழீஇய செல்வம்*
*பிறருணக் கழிந்தஎன் ஆயிலை அடியா"*[37]

என்ற பாடல் கூறுகின்றது. மேலும்,

*"சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ*
*அறியாத்தே எத்தன் ஆகுதல் கொடிய"*[38]

என்ற பாடலில், எனது மகள் அறியாத சிறுபிள்ளை அவளுக்கு சிலம்பு கழித்து திருமணம் செய்வது இன்னாமையுடையது என கூறுகிறாள்.

"சிலம்புகழி நோன்பினை நாத்தூண் நங்கையர்செய்தல் மரபு என்றும் இக்காலத்தே 'கருமணி கழித்தல்' என்னும் சடங்கு அவர்களால்

நிகழ்த்தப்படுமென்றும், இந்நோன்பின் போது மணமகள் உண்ணா நோன்பு இருத்தல் மரபு”[39] என்று அ. தட்சிணாமூர்த்தி கூறுகிறார். சிலம்புகழி நோன்பு என்பது தமிழர் பண்பாட்டு மரபில் காணப்பட்டது. என்ற குறிப்புகள் சங்க அக இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

## பூவணியும் உரிமை

பெண்கள் பூவணியும் உரிமையைத் திருமணநாள் முதல் பெறுகின்றனர். செந்நிற வேங்கை பூவின்மேல் இருந்த மயில் நகையணிந்த பெண்போலக் காட்சியளிக்கும் நாட்டை உடையவனே நீ. நல்லது செய்தாய், நின் குடும்பம் வாழ்க, திருமணத்தைக் கொண்டாடும்படியாக பிண்ணிய கரிய இவள் கூந்தலில் மலர் சூட்டினாய் என்பதை,

***“நன்மனை வதுவை அயரவிவள்***
***பின்னருங் கூந்தல் மலரணிந்தோயே”[40]***

என்ற பாடல் வரிகள் மணஞ்செய்து கொண்ட தலைவனைப் பார்த்துத் தோழி மணமார வாழ்த்துவதாக ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது.

மலரணியும் சடங்கு செய்யும்போது தலைவியின் கூந்தலைத் தலைவன் தொடுவான். அப்படித் தொட்டவனுக்கே தலைவி உரிமையாகின்றாள் என்பதை,

***“இவள் ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே”[41]***

என்ற பாடல் வரி உறுதி செய்கின்றன. பண்டைத் தமிழ்க் கன்னி மலர் சூட மாட்டாள், அப்படி மலர் சூடினால் இல்லறத்தாலாவாள் என்று வ.சு.ப.மாணிக்கம் தமிழ்க் காதல் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

## நிச்சயம் செய்தல்

மணமக்களின் பெற்றோர் நன்கு அலங்கரிக்கப்பட்ட சிறந்த வேலைபாடுகள் அமைந்த நல்ல வீட்டிலே, புதிதாகக் கொண்டுவந்த

மணலைக் குவித்துப் பரப்பிக் கற்றையாக நெருங்கி வளர்ந்த பொலிவு பெற்ற கூந்தலையுடைய எம் மகளுக்குத் திருமணம் என்று கூறி நம் தாய் தந்தையர் மணத்திற்கு வேண்டுவனவற்றைச் செய்வாயினர்.

***"நனைவினை நறவின் தேறல் மாந்தி,***
***புனைவினை நல்இல் தருமணம் குவைஇ***
***பொம்மல் ஓதி எம்மகள் மணன் என***
***வதுவை அணர்ந்தனர் நமனே"[42]***

என மணஅறிவிப்புச் செய்தியை அறிவிக்கின்றாள் தோழி. அது கேட்ட தலைவி அந்த மணநாள் விரைவில் வந்துவிடும். நாம் இல்லுறை தெய்வத்தை வணங்கி பலிக்கடன் செலுத்துவோம் என்று கூறுவதன் வாயிலாக முற்கால மக்கள் திருமணத்திற்கு முன்னர் நிச்சயம் செய்தனர் என்பதை அறியமுடிகிறது.

## மணமுறை

அகநானூற்றில் இருபாடல்கள் சங்க கால மக்களின் திருமண முறையின் இயல்புகளைத் தெளிவாகச் சுட்டுகிறது. ஆரியத் தன்மை ஏதுமின்றி, தமிழர் திருமணம் எவ்வாறு நிகழ்ந்தது என்பதை அகநானூறு (86, 136) ஆகிய இவ்விரு பாடல்கள் விளக்குகின்றன.

"திங்களும், உரோகிணியும் கூடிய நல்ல நாளில் விடியற் பொழுதில் திருமணம் நிகழ்ந்தது பந்தலிட்டு அதில் புதுமணல் பரப்பினர். நல்ல ஒளிமிக்க விளக்குகளை ஏற்றி வைத்தனர். மாலைகளைத் தொங்க விட்டு வீடுகள் முழுவதையும் அழகுபடுத்தினர். உளுந்து பெய்த கொழுந்தவை அடிசில் கொடுக்கப்பட்டது உச்சியில் குடத்தினையுடையரும் கையில் புதிய மண்டையென்னும் கலத்தினையுடையருமாகிய மங்கல மகளிர் முன்னே தருவனவும் பின்னே தருவனவும் முறையாகத் தந்தனர். புதல்வர் பயந்த இழையணி மகளிர் 'கற்பினின் வழாஅ நற்பல உதவிப் பெற்றோர் பெட்கும்

பிணையை ஆக என' வாழ்த்தினர் பின்பு நீரோடு கூட்டிப் பெய்த பூக்கள் நெறிகளோடு கரிய கூந்தலில் விளக்க நீராட்டினர். அப்போது சுற்றத்தினர் 'பேரிற் கிழத்தி ஆக' என வாழ்த்தினர். பின்னர்ப் பெற்றோர் மணமகளைத் தலைவனிடம் தந்தனர் அன்றே இருவரையும் புணர்ச்சிக்கெனக் கூட்டி வைத்தனர்."[43] என்று அகநானூறு குறிப்பிடுகிறது.

"இறைச்சியுடன் சேர்த்து ஆக்கிய நெய் மிக்க வெண்சோறு படைக்கப்பட்டது. புட்சகுணம் பார்த்துத் திங்கள் உரோகினியோடு கூடிய நல்ல நாளில் மனையை அழகுப்படுத்தினர் கடவுளை வணங்கி ஒலிக்கும் மணமுழவுடன் பெண்ணுக்கு வதுவை நீராட்டை நிகழ்த்தினர். தூய ஆடையை அணிவித்தனர் மணல் நிறைந்த பந்தலில் நிறைய நகை அணிந்ததனால் தோன்றிய வியர்வையை ஆற்றினர். தலைவினுடைய பெற்றோர் மணமகளைத் தலைவனுக்குக் கொடுத்தனர் என்று அகநானூறு (136) பாடல் கூறுகிறது."[44]

இந்த இரண்டு சடங்குகளிலும் பார்ப்பனர் இடம் பெறவில்லை. எந்தவித மந்திரம் ஒலிக்கப்படவில்லை. தீ வலம் செய்தாலோ, அம்மி மிதித்தாலோ, அருந்ததி காட்டலோ எதுவும் இல்லை என்பதை அறிய வேண்டும். ஆரியச் சடங்குகள் ஏதுமில்லாமல் தமிழர்க்குரிய முறைப்படித் திருமணம் நடந்தவற்றை உணர முடிகிறது.

முல்லை நிலத்தில் வாடும் இடையர்கள் தங்கள் வீட்டில் திருமண நிகழ்வு நடக்கிறது என்றால் உடனே புதுமணலைப் பரப்பி வைப்பார்கள். வீட்டை அலங்கரிக்கும் விதமாக செம்மண்ணைப் பூசி வைத்து எருமையின் கொம்பைத் தெய்வமாக வைத்து வழிப்பட்டப் பிறகுதான் மணமகனுக்கும், மணமகளுக்கும் மணம் முடிக்கும் பண்பாட்டை மரபாகக் கொண்டனர் இதனை,

***"தருமணல் தாழப்பெய் தில்பூவ லூட்டி***
***எருமைப் பெடையோ டெமரீங் கயரும்***

***பெருமண மெல்லாந் தனித்தே யொழிய***

***வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த***

***திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த***

***ஒரு மணந் தானறி”***[45]

என்று கலித்தொகை விளக்குகிறது.

திருமணத்தின்போது சங்கொலியும், பறையும் முழங்கியதை,

***“பறைபடப் பணில மார்ப்ப வீறைகொள்பு***

***தொன்மு தாலத்துப் பொதியிற் றோன்றிய”***[46]

என்ற குறுந்தொகைப் பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன.

திருமணத்தில் தாலி இடம் பெற்றதா என்பது முக்கியமான ஒன்றாகும். இது குறித்து அறிஞர் பெருமக்கள் பலரும் பல விதமான கருத்துகளை எடுத்துரைக்கின்றனர். இலக்குவனார்,

***“வாலிழை மகளிர் நால்வர் கூடி”***[47]

என்ற அகநானூற்றுப் பாடல் வரியில் வரும் வாலிழை மகளிர் உயர்ந்த அணிகலன்களை அணிந்தவர் என்று பொருள் கொண்டு அந்த உயர்ந்த அணி தாலியைக் குறித்தது என்று கூறுகிறார். புறநானூற்றுப் பாடலும் தாலியை “இழை”[48] என்றுக் குறிப்பிடுகிறது.

“கே.கே. பிள்ளை, ஈகை அரிய என்னும் அடையை இழையணி மகளிர் என்பதனோடு புணர்த்து, ஈய முடியாத பெண்டிரைத் தவிர ஏனையவற்றை யெல்லாம் கொடுத்தான் என்று கூறுகிறார்.”[49]

“தமிழர் திருமணத்தில் தாலி இடம் பெற்றது பத்தாம் நூற்றாண்டில்தான்”[50] என்று மா. இராசமாணிக்கனார் கூறுகிறார்.கைம்மை நோன்பினை நோற்கும் பெண்டிர் தொடி, வளை இவற்றை நீக்கினர் என்று புறநானூறு கூறும். இதில்

மங்கலப் பொருட்கள் “தொடி”[51] “வளை”[52] என்ற இரண்டை மட்டும் கட்டுவது கொண்டு தாலி இவர்களது இல்லறவாழ்வில் இடம்பெறவில்லை என்பதை உணர முடிகிறது. ஆனால், இராசமாணிக்கனார், திருமணக் காலத்தில் தாலிக்கு இன்றைய மக்கள் தரும் சிறப்பைச் சங்க கால மக்கள் தொடிக்குத் தந்தார்கள் என்று கூறுகிறார் மேலும், தொடியே மங்கல அணி என்றும் திருமணக் காலத்தில் மணமகனால் மணமகளுக்கு அணிவிக்கப்படுவதாகும். என்றும் உடலோடு கணவன் உள்ள வரை கிடந்து அவன் இறந்த பிறகு கழற்றப்படுவதாகவும் அத்தொடி அமையும் என்றும் கூறுவர். நெடுநல்வாடையில் அரசனை விட்டு பிரிந்த நிலையில் தனியே படுக்கையில் கிடந்த அரசியைப் பற்றிக் கூறும் செய்திகளில் நிறைய முத்தப் போன்ற அணிகலன்களை அணிந்த அவ்வரசியின் மார்பிடத்தே திருமாங்கல்யம் மட்டும் அசைந்து கிடப்பதேயன்றி வேறோர் அணியும் காணக்கூடவில்லை என்பதை,

> ***“ஆரம் தாங்கிய அலர்முலை ஆகத்துப்***
> ***பின்அமை நெடுவீழ் தாழ நெடுதல்”[53]***

என்ற வரிகளின் வாயிலாக இழை அணியும் சடங்கு இல்லையென்றாலும் இழை அணியும் வழக்கம் இருந்துள்ளது தெளிவாகிறது.

## திருமண வகைகள்

சங்க காலத் தமிழர் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர் அதனால் திருமணங்கள் சூழலுக்கேற்ப மாறுபட்டன. பலவகையான திருமணங்கள் நடைபெற்றதை சங்க அக இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. அவற்றை களவு, கற்பு என்ற இரு பிரிவுகளில் வைத்திருந்தனர். அவற்றை பின்வருமாறு பிரிக்கலாம் அவை,

1. களவு மணம்

2. மரபு மணம்

3. பரிசு கொடுத்து மணத்தல்

4. சேவை மணம்

5. திணைக் கலப்பு மணம்

6. ஏறு தழுவி மணமுடித்தல்

7. மடலேறி மணமுடித்தல்

8. போர் நிகழ்த்தி மணமுடித்தல்

9. துணங்கையாடி மணத்தல்

10. பலதார மணம்

என்று பத்துவகையான திருமணத்தை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**களவு மணம்**

காதலித்துக் கொண்டிருக்கும் போதே தலைவி தோழியிடம் தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு தலைவனிடம் கூறு என்று வள்ளைப்பாட்டில் கூறுகிறாள். இதனைக் கலித்தொகை,

***“நன்றா கின்றால் தோழிநாம் வள்ளையுள்***
***ஒன்றிநாம் பாட மறைநின்று கேட்டருளி***
***மென்றோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்***
***மன்றல் வேங்கைக் கீழிருந்து***
***மணநயந் தனள் அம்மலைகிழ வோற்கே”[54]***

என்று புலப்படுத்துகிறது. இதுபோன்று திருமணத்தை நடத்த இப்பாட்டில் எடுத்து சொன்ன முறை சங்ககாலத்தில் காணப்பட்டது.

## மரபு மணம்

இரு வீட்டாரும் முறைப்படி பேசி நடத்தும் திருமணம் மரபுத் திருமணம் ஆகும். களவில் வருகின்ற காதல் மரபுத் திருமணத்திலும் முடியும். வள்ளல் பாரி இறந்த பிறகு அவனுடைய மகளை கபிலர் விச்சிக்கோவிடம் திருமணம் செய்து கொள்ளுமாறு முறைப்படி கேட்டார். மற்றும் உறவினர்களுடன் சேர்ந்து திருமணம் செய்து வைப்பதை,

***"நேரிறை முன்கை பற்றி நுமர்தர***
***நாடறி நன்மணம் அயர்தம்"[55]***

என்ற குறிஞ்சிப்பாட்டு விளக்குகிறது.

இவ்வாறு சங்ககாலத்தில் களவு நெறியிலும், கற்பு நெறியிலும் திருமணம் நடந்துள்ளதை அறியமுடிகிறது.

## பரிசு கொடுத்து மணத்தல்

சங்க காலத்தில் பரிசுகொடுத்து திருமணம் செய்யும் முறையும் இருந்துள்ளன. மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாரிடம் கேட்ட தொகையை கொடுக்க வேண்டும். அது பணமாகவோ, நிலமாகவோ, அணிகலன்களாகவோ வழங்கப்பட்டது.

அகநானூற்று பாடலில் தலைவிக்கு ஊரை பரிசாக கொடுத்ததை,

***"அருந்திரள் கடவுள் செல்லூர்க் குணாஅது***
***பெருங்கடல் முழக்கிற் றாகி யாணர்***
***இரும்பிடம் படுத்த வடுவுடைய முகத்தர்***
***கடுங்கண் கோசர் நியமம் ஆயினும்***
***உறுமெனக் கொள்ளுநர் அல்லர்***
***நறுநுதல் அரிவை பரிசிழை விலையே"[56]***

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

## சேவை மணம்

தலைவன் தலைவயின் தந்தையின் உள்ளத்தில் இடம் பெறுமளவிற்கு அவரிடம் பணி செய்து தலைவியை மணமுடித்தலும் உண்டு. இதற்கு சேவை மணம் என்று கூறப்படுகிறது. இதனை,

> ***"........... ஆய்தொடிக் குறுமகள்***
> ***நலஞ்சால் விழுப்பொருள் கலநிறை கொடுப்பினும்***
> ***பெறலருங் குரைய ளாயின் அறந்தெரிந்து***
> ***நாமுறை தேஎம் மரூஉப் பெயர்ந் தவனொரு***
> ***இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்,***
> ***பெருநீர்க் குட்டம் புனையொடு புக்கும்"[57]***

என்ற பாடலில் தலைவன் கடற்கரையில் உப்பு விளைவிக்கும் மனிதர்களுக்கு உதவி செய்வதை கூறுகிறது. இதன்மூலம் தலைவியின் தந்தைக்கு தலைவன்மீது ஒரு அன்பும், மரியாதையும் உண்டாகுகிறது. அதனால் தன் பெண்ணை நம்பி தலைவனுக்கு கொடுக்கலாம் என்ற எண்ணம் உண்டாகுகிறது.

## திணைக்கலப்பு மணம்

ஐந்து நிலத்துக்குள்ளும் கலப்பு மணம் இருந்திருக்கிறது என்பதனை அகநானூற்றுப் பாடல்களிலிருந்து அறியமுடிகிறது. நெய்தலும், மருதமும் ஒன்றைஒன்று அடுத்திருக்கும் நிலங்கள் நெய்தல் நிலத்தில் உப்பு விளைவிக்கப்படுகிறது. இவ்வுப்பினை வண்டிகளில் ஏற்றிக்கொண்டு மற்ற நிலங்களுக்குச் சென்று விற்கும் உப்பு வணிகர்கள் தம்முடன் தம்குடும்பத்தையும் அழைத்துச் செல்வர். அப்போது உப்பு வணிகரின் இளம்பெண் பக்கத்து ஊருக்குள் சென்று உப்பு விற்பாள். அவளை மருதத் தலைவன் ஒருவன் கண்டு காதல் கொள்கிறான் என்பதனை பின்வரும் அகநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கிறது இதனை,

***“பொன்அடர்ந் தன்ன ஒள்இணர்ச் செருந்திப்***

***பல்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்,***

***திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி***

***அசையினள் இருந்த ஆய்தொடிக் குறுமகள்,***

***நலம்சால் விழும்பொருள் கலம்நிறை - கொடுப்பினும்***

***பெறல்அருங் குரையள் ஆயின், அறம்தெரிந்து***

***நாம்உறை தேஎம் மரூஉப்பெயர்ந்து, அவனோடு***

***இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்,***

***பெருநீர்க் குட்டம் புனையொடு புக்கும்”[58]***

இவ்வாறு நிலம் விட்டு நிலம் வாழும் மக்களிடையே ஏற்பட்ட காதல் பற்றி அகநானூற்றுப் பாடல்களிலன்றி ஏனைய சங்கப் பாடல்களில் காணயியலவில்லை. புலவர் அம்மூவனாரின் பாடலில் இத்தகைய கருத்துக் காணப்படுவதால் அந்நாளில் திணைக் கலப்புக் காதல் மணமும் இருந்திருத்தல் வேண்டுமெனத் அறியமுடிகிறது.

## ஏறுதழுவி மணமுடித்தல்

முல்லை நிலத்தில் வாழுகின்ற ஆயர்களின் உரிய தொழில் ஏறுதழுவுதல் ஆகும். காளையை அடக்கி மணமுடிக்கும் முறை முல்லை நிலத்தில் வாழும் மக்களிடம் காணப்பட்டது.

***“தொழிஇ, ஒருக்குநா மாடுங் குரவையுள் நம்மை***

***அடுக்கினான் போல்நோக்கி யல்லனோய் செய்தல்***

***குருஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்***

***தருக்கன்றோ ஆயர் மகன்***

***நேரிழாய், கோளரிதாக நிறுத்த கொலையேற்றுக்***

***காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவற்கே***

***ஆர்வுற் றெமர் கொடை நேர்ந்தார் அலரெடுத்த***

***ஊராரை உச்சி மதித்து”[59]***

என்னும் பாடலில் தலைவன் தலைவியை பார்த்து காளையை வென்றுவிட்டேன். இனி நீ எனக்குரியவள் என்பதுபோல் பார்வையால் தெரிவிக்கின்றான்.

## மடலேறி மணமுடித்தல்

தலைவன் தான் விரும்பிய தலைமகளை அடைய முடியாமல் ஒரு சுழல் வரும்போது, எப்படியேனும் அவளை அடைந்தே தீரவேண்டும் என்று எண்ணி ஊர்மக்கள் அறியும்படி பனைஓலையினால் ஒரு குதிரை செய்து, காதலியின் ஊருக்கு சென்று குதிரைமேல் ஏறிக்கொள்வான். (கையில் காதலியின் உருவத்தை வரைந்த படம் ஒன்றை பிடித்துக்கொள்வான்) அதைப் பார்த்து வருந்துவான். பல நாட்கள் ஆனாலும் உண்ணாமல் உறங்காமல் இருப்பான் இதைக்கண்ட ஊர்மக்கள் இரக்கப்பட்டு அவன் விரும்பிய பெண்ணை அவனுக்கே மணம்முடிப்பார்கள்.

## மடல்

மடல் என்பது அகப்பொருள் சார்ந்த சிற்றிலக்கியம் ஆகும். தடைகள் ஏற்படும் போது அவளைப் பெறுவதற்குத் தலைவன் செய்யும் செயல் மடல் எனப்பெறும். இது தொல்காப்பியத்தில் அன்பின் ஐந்திணையில் ஒரு துறையாக உள்ளது. சங்க இலக்கியத்திலும் மடலேறுதல் பற்றிய செய்திகள் காணப்பெறுகின்றன. இச்செயல் ஆடவர்க்கு உரியதே. மகளிர்க்கு உரியது அன்று. இதனை,

***“எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்***

***பொற்புடை நெறிமை இன்மை யான”[60]***

ஆனால் இறைவன் பொருட்டு மகளிர் மடலேறுதல் உண்டு எனப் பன்னிரு பாட்டியல்நூல்கள் குறிப்பிடுகின்றன.

***“மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்***

***கடவுளர் தலைவராய் வருங்காலே”[61]***

தொல்காப்பியர் குறிப்பிடும் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் மடல் செய்தியைச் சற்று விரிவாக முதன் முதலாகத் திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமடல் சிறிய திருமடல் என்பன விளங்குகின்றன.

அக இலக்கியமான கலித்தொகை மடலேறி திருமணம் முடிக்கும் முறையை பின்வருமாறுக் குறிப்பிடுகிறது. இதனை,

***"அரிதினில் தோன்றிய யாக்கை புரிபுதாம்***
***வேட்டவை செய்தாங்குக் காட்டிமற் றாங்கே***
***அறம்பொரு ளின்பமென் றம்மூன்றி னொன்றான்***
***திறஞ்சேரார் செய்யுந் தொழில்கள் அறைந்தன்***
***றணிநிலைப் பெண்ணை மடலூர்ந் தொருத்தி***
***அணிநலம் பாடி லரற்கு"***[62]

தலைவன் உடல் வருத்தி நிற்கிறான் என்றும் ஊர்மக்கள் அறிந்து அவன் விரும்பிய பெண்ணை தலைவனுக்கே திருமணம் செய்துகொடுத்தனர் என்பதைக் குறிக்கிறது.

## போர் நிகழ்த்தி மணமுடித்தல்

சங்க அகப்பாடல்களை ஆயும்போது இத்திருமணம் பற்றிய குறிப்புகள் அறியப்படவில்லை. புறப்பாடலான புறநானூற்றுப் பாடல்கள் சிலவற்றின் மூலம் பண்டைய தமிழ்ச் சமுதாயத்தில் ஒருவன் தான் மணக்க விரும்பும் பெண்ணை பெறுதல் அரியது என்றநிலை வரும்போது போரிட்டு வெற்றி பெற்றுத் தான் விரும்பியவளை மணம் கொள்ளல் காணப்படுகிறது.

## துணங்கையாடி மணத்தல்

மூங்கிலைப் போன்ற தோள்களையும், ஒளி பொருந்திய வளையை அணிந்த பெண்கள் ஒரு பகுதியில் துணங்கையாடுவர், மற்றொரு புறம் மன்னர்களிடையே போர் நிகழும். இதில் கலந்து கொள்ளும் வீரர்களும்

துணங்கையாடும் மகளிரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் காதல் கொண்டு திருமணம் செய்வர்.

***"வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்***

***துணங்கை நாளும் வந்தன வவ்வரைக்***

***கண்பொர மற்றதன் கண்ணவர்***

***மணங்கொளற் கிலரும் மள்ளர் போரே"[63]***

என்கிறது குறுந்தொகைப் பாடல்.

## பலதார மணம்

இதனையே மகப்பேறு மணம் என்றும் சொல்வர். பழந்தமிழ்ச் சான்றோர் மகப்பேறு கருதித் தலைவன் இரண்டாம் திருமணம் செய்துகொள்ளும் முறை ஆகும். இத்திருமணம் முதல் மனைவி சம்மதத்துடன் நடக்கும் திருமணம் ஆகும் இதனை தொல்காப்பிய நூற்பாவிலிருந்து ஐங்குறுநூற்றுப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது. ஆனால் இப்பலதார மணமுறை அருகியே காணப்படுகிறது. இதனை,

***"அவனறிவு ஆற்ற அறியு மாகலின்***

***ஏற்றற் கண்ணும் நிறுத்தற் கண்ணும்***

***உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்***

***பெருமையிற் றிரியா வன்பின் கண்ணும்"[64]***

என்று தொல்காப்பிய கற்பியல் நூற்பா குறிப்பிடுகிறது. தலைவன் காமம் பொருளாகவன்றி அறமே பொருளாகக் கொண்டு மகப்பேறு கருதிச் செய்யும் இரண்டாவது திருமணத்தைத் தலைவி ஏற்றுக்கொள்வாள் இது தலைவியின் குணநலச் சிறப்பாகும் என்கிறார் தொல்காப்பியனார். இதனை,

***"பின் முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவைத்***

***தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்"[65]***

எனவும்,

***“தாய்போற் கழறித் தழீஇக் கோடல்***

***ஆய்வினைக் கிழத்திக்கும் உரித்து”[66]***

எனவும்,

***“அவன் சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்***

***மகன் தாய் உயர்பும் தன்னுயர் பாகும்”[67]***

எனவரும் நூற்பாவும் இக்கருத்தை நன்கு அறியத் துணை செய்வன.

இத்தொல்காப்பிய நூற்பாக்களுக்குச் சான்று கூறுமுகமாக ஐங்குறுநூற்றுப்பாடல் ஒன்று அமைந்துள்ளமையைக் காணமுடிகிறது. மகப்பேறு இல்லாத காரணத்தால் தலைவனொருவன் தான் முறையாக மணந்த மனைவி இருக்கும் பொழுதே, தனது தகுதிக்கேற்ற குலப்பிறப்பாட்டி மற்றொருத்தியைத் திருமணம் செய்துக்கொண்டு இல்லத்திற்கு அழைத்து வருவான் இதனைக் கண்ட தலைவி இன்முகத்தோடு அவர்கள் இருவரையும் வரவேற்று மங்கல விளக்கேற்றி அவளைத் தன் தங்கையாக ஏற்றுக்கொண்டு பின்வருமாறு தலைவனிடம் கூறுகிறாள் இதனை,

***“மயில்க ளாலப் பெருந்தே னிமிரத்***

***தண்மழை தழீஇய மாமலை நாட!***

***நின்னினுஞ் சிறந்தனள், எமக்கே - நீ நயந்து***

***நன் மனை அருங்கடி அயர,***

***எம் நலம் சிறப்ப, யாம் இனிப் பெற்றோளே”[68]***

இதன் பொருள் மழைப் பருவம் காரணமாக மயில்கள் மகிழ்ந்து கூத்தாடவும், பெரிய தேனீக்கள் இன்னிசை முரலவும், மேகம் தழுவுகின்ற பெரிய மலையினையும் உடைய தலைவனே எல்லாப் பெருமையும் நிறைந்த இப்பெண்ணை திருமணம் செய்துள்ளாய் இவள் நற்குணம் உடைய எனது

தங்கை ஆவாள். இப்பெண் என்னைக்காட்டிலும் உனக்கு தகுதி உடையவள் ஆவாள் என்று தலைவி குறிப்பிடுகிறாள்.

எனவே இதன்காரணமாக பலதார மணம் நிகழ்ந்து இருக்கலாம் என்று இப்பாடல் வழியாக அறியமுடிகிறது.

## விருந்தோம்பல்

விருந்தோம்பல் தமிழர்களின் தலைசிறந்த நாகரிகப் பண்பாட்டு மரபுகளுள் ஒன்று. தம் இல்லத்திற்கு வந்த விருந்தினரை முகமலர்ச்சியோடு வரவேற்று உணவு கொடுத்து இல்லத்திலேயே இருக்கவும் செய்து உபசரித்து அன்பு பாராட்டுவது விருந்தோம்பல் ஆகும். இவைப் பற்றிய விரிவான செய்திகளை சங்க அக இலக்கியங்கள் வழி இல்லறப் பண்பாட்டு மரபாக விருந்தோம்பலைக் காணலாம்.

விருந்து என்பது மிகச் சிறந்த மிக விலை உயர்ந்த, பலவாகிய, சிறப்புணவு என்றும், விருந்தினர் என்போர் நமக்கு மிக நெருங்கிய உறவினர்கள் அல்லது மிகவும் வேண்டிய நண்பர்கள் என்றும் இன்று கொள்ளப்படுகிறது. ஆனால் மிகவும் “எளிய உணவாயினும் அன்போடு கொடுத்துப் புதியவர் எவர் வரினும் உதவிகள் செய்து உணவிட்டுப் பேணுவது விருந்து என்று பழந்தமிழகம் கொண்டிருந்தது”[69] என பா. இறையரசன் குறிப்பிடுகிறார். இந்தக் கருத்தின் அடிப்படையில்தான் சங்க அக இலக்கியங்களில் வரும் விருந்தோம்பல் பற்றிய செய்திகளும் அமைந்திருக்கின்றன.

“பண்பாட்டு முறை வழக்கிலிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழ்நிலை நிலவியது. எனவே இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கால்நடையாகவே நடந்து செல்ல வேண்டியிருந்தது. உணவுவிடுதிகளும் இல்லாத காரணத்தால் உண்டிக்கும் உறையுளுக்குப் அனைவரும் செல்லும் ஊர்களையே நம்ப

வேண்டியிருந்தது. ஆகவே புதிதாக வருவோர்க்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையான் விருந்தோம்பும் பண்பாட்டு மரபு தமிழகத்து இல்லங்களில் உருவாயிற்று”[70] என்று வே. முத்துலக்குமி குறிப்பிடுகிறார்.

விருந்தோம்பலுக்கென்றே தனியொரு அதிகாரத்தை படைத்துள்ள திருக்குறள் இப்பண்பாட்டு மரபின் சிறப்பைச் சுட்டுகிறது. பிரிவு பற்றிய இலக்கணம் கூறும் தொல்காப்பியம் பொருள்வயிற் பிரிவையும் பிரிவுவகைகளுள் ஒன்றாகச் சுட்டுகிறது. அவ்வாறு தலைவன் பொருள் தேடிச் சென்றது தம் வாழ்க்கையை நடத்துதற்கு மட்டுமின்றி தம்மை நாடிவரும் விருந்தினரை உபசரித்தலுக்குமே ஆகும். இதற்குச் சான்றாக, கலித்தொகை, அகநானூறு போன்ற அக இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது.

“விருந்து என்னும் சொல்லுக்குப் புதுமை என்பது பொருள். எனவே, முற்றிலும் புதியவராகத் தம்மிடம் வந்தோரைப் பேணுதலையே விருந்தோம்பல் என்று தமிழர் கருதினர்”[71] என்று மு. கவிதா குறிப்பிடுகிறார்.

விருந்து போற்றுதல் மகளிர் கடமைகளில் தலையாய ஒன்றாக இருந்தது என்று தொல்காப்பியர்

***“விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்***
***பிறவும் அன்ன கிழவேள் மாண்புகள்”[72]***

என்று விருந்து போற்றும் விருப்பப் பண்பாட்டு மரபினைப் போற்றியிருப்பதைக் காணலாம்.

திருவள்ளுவர் ‘விருந்தோம்புதல்’ என்றோர் அதிகாரத்தினை அறத்துப்பாலில் அமைந்திருக்கும் திறம், பண்டைத் தமிழர் தம் வாழ்வில் விருந்தோம்புதல் பெற்றிருந்த இடத்தினை எடுத்துக்காட்டும். இதனை,

*“செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்*

*நல்விருந்து வானத் தவர்க்கு”*[73]

என்ற திருக்குறள் விருந்தோம்பல் சிறப்பினை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

அறியாதவர்கள் யாராயினும் பசியோடும், தாகத்தோடும் வருவராயினும் அவருக்கு வேண்டிய உணவையும், நீரையும் முகமலர்ச்சியோடு வழங்குவது ஒரு பண்பாட்டு மரபாகவே தமிழகத்தில் பல நூற்றாண்டுகளாகப் போற்றப்படுகிறது. இப்பண்பாட்டு மரபு விருந்தோம்பல் என சிறப்பித்து அழைக்கப்படுகிறது. சங்க இலக்கியங்கள் விருந்தோம்பலைப் பற்றி சிறப்பாக எடுத்துரைக்கின்றன. அக்காலங்களில் நெடுந்தூரம் பயணம் மேற்கொள்வோர் இடையில் தங்க இன்றுபோல் அன்று இடையிடையே ஊர்களுமில்லை, உறவினர்களுமில்லை. அதனால் அவர்கள் இலவசமாக உண்ணவும், உறங்கவும், ஏற்படுத்தப்பட்ட அமைப்புகளே சாவடிகளும், சத்திரங்களாகும். இதனை பெரிதும் அரசர்களும், வள்ளல்களும் போற்றி வளர்த்தனர்.

நற்றினைப் பாடல்கள் விருந்தோம்பலின் பண்பாட்டு மரபை சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றது.

*“விருந்தயர் விருப்பொரு வருந்தினள் அசைஇய”*[74]

என்றும்,

*“அட்டி லோளே அம்மா அரிவை*

*எமக்கே வருகதில் விருந்தே சிவப்பாள் அன்று”*[75]

என்ற வரிகளானது வரும் விருந்தினரை இன்முகத்துடன் உபசரிப்பர் என்று குறிப்பிடுகிறது. இப்பண்பாட்டு மரபின் தொடர்ச்சியைச் சங்க அக இலக்கியத்தைத் தொடர்ந்து வந்த மணிமேகலையும்,

***“ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்***

***மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை***

***மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்***

***உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே”[76]***

என உணர்த்துகிறது.

இல்லறம் நடத்துவதற்கு மிக முக்கியமானப்பண்பு விருந்தோம்பல் ஆகும். தலைவியானவள் தம் இல்லம் நோக்கி வருபவரை இன்முகத்தோடு வரவேற்று அவருக்கு விருந்து படைப்பது என்பது தமிழரின் வழிவழி வரக்கூடிய பண்பாட்டு மரபாக உள்ளது.

இவ்வுலக வாழ்க்கையில் பசி, பிணி இரண்டும் மக்களை வாட்டுகின்றன. பசித்துன்பம் தம்மை பற்றிக் கொள்ளும்போது ஏனையோரையும் அத்துன்பம் வருத்தும் என்பதனை உணர்ந்தவர்கள் அப்பசித்துன்பத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வது போலப் பிறரையும் அத்துன்பத்திலிருந்து காப்பாற்றும் போது இல்வாழ்க்கையின் பயன் விளைகிறது.

இல்வாழ்க்கையில் இருக்கும் தலைமக்கள் தாம் ஈட்டிய பொருள்களைக் கொண்டு நல்லறம் பேணும் வாயில்களாகச் சான்றோர் விருந்தோம்பல், ஈகை, ஒப்புரவு, கொடை ஆகியவற்றை உரைத்துள்ளனர். இவற்றுள் விருந்தோம்பல் என்பது தம்மை நாடிவரும் புதியவர்க்கு உணவளித்து ஓம்பும் இல்லறப் பண்பாட்டு உயர்நெறி ஆகும். எவ்வகை வேறுபாடும் கருதாது விருந்தோம்பலை மேற்கொள்ள வேண்டும் என்பதைச் சங்க அக இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

விருந்தோம்பலில் வள்ளல்கள் மட்டுமின்றி மக்களும் அவரவர் வாழும் சூழலுக்கேற்ப கிடைக்கின்ற பொருள்களைக் கொண்டு தம்மை நாடி வந்தவர்களுக்கு உணவு தந்து விருந்தோம்பியுள்ளனர்.

பொருள்தேடச் சென்ற தலைவன், தான் குறித்த பருவம் கண்டு வினைமுற்றிய பிறகு, வீடு திரும்புகிறான், விரைவாக தேரினைச் ஓட்டிச் சென்ற பாகனைப் பாராட்டி நீ விரைந்து வந்ததால் என் தலைவி விருந்தோம்பும் சிறப்பினைப் பெற்றாள் என்று கூறி இல்லம் புகுகிறான். இதனை,

***"விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே"[77]***

என்ற அடி உணர்த்துகின்றது. மேலும்,

***"விருந்தும் பெறுகுவள் போலும் திருந்திழை"[78]***

என்ற அடிமூலம் தலைவன் திரும்பி வருகின்ற தேரின் ஒலி கேட்டு அணிகலன்கள் அணிந்த தலைவியானவள் விருந்து செய்யும் பெருமையைப் பெறுவாள் என்பதை உணரலாம். இதிலிருந்து தலைவன் இல்லாமல் தலைவி தனியாக விருந்து எதிர்கொள்ளமாட்டாள் என்பதை நாம் உணரலாம்.

இதனையே சிலப்பதிகாரத்தில்,

***"அறவோர்க்கு அளித்தலும், அந்தணர் ஓம்பலும்***
***துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின்***
***விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை"[79]***

என்பது அறநெறியாளருக்கு உணவளித்தலும் அந்தணர்களைப் பேணுதலும், துறவியரை எதிர்கொண்டு உபசரித்தலும், விருந்தினரை எதிரேற்று உபசரித்தலும் ஆகிய கடமைகளை யான் இழந்தவளாக நிற்கின்றேன் என கண்ணகி கூறுவதிலிருந்து விருந்தோம்பலின் உயர்வு வெளிப்படுகிறது.

பாலை நிலத்தைக் கடந்துவரும் வழிப்போக்கர்கள் அக்கொடுமையான காட்டின் வழியே பசி, களைப்பு, தாகத்துடன் வரும்போது, அங்கு ஆடு மேய்க்கும் ஆயர்கள், தன் எருதுகளின் கழுத்தில் கட்டியுள்ள மூங்கில் குழாயில் கொணர்ந்த இனிய புளிச்சோற்றை அப்புதியவர்களின் காதடைப்பு நீங்குமாறு, தேக்கிலையில் பங்கிட்டுக் கொடுத்ததை,

***“மழவிடை பூட்டிய குழாஅய்த் தீம்புளி”***[80]

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. விருந்தோம்பல் என்பது இல்லத்தாள், கணவன் இவர்களுக்கு மட்டுமல்ல, எல்லோருக்கும் உரியதாகும் என்பதை அகநானூறு உணர்த்துகிறது. பகற்குறியில் தலைவியை, தலைவன் சந்தித்துத் திரும்பும் வேளையில் தலைவனை தன் இல்லத்திற்கு விருந்துக்கு அழைக்கிறாள் தோழி. இதனை,

***“இல்லுறை நல் விருந்தயர்தல்”***[81]

என்னும் அகநானூறு குறிக்கின்றது.

வருகின்ற விருந்தினர் அனிச்ச மலரைப் போன்ற மென்மைத் தன்மைக் கொண்டவர்கள் ஆவர். அனிச்சமலர் முகர்ந்தால் வாடி விடும் தன்மை கொண்டது. அதைப் போன்றுதான் விருந்தினரும், ஆகவே விருந்தினர் முகம் மாறுமளவிற்கு நடத்தல் கூடாது. என்கிறார் வள்ளுவர்,

***“மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து***
***நோக்கக் குழையும் விருந்து”***[82]

என்ற குறளின் மூலம் விருந்தினரின் தன்மையைக் குறிப்பிடுகிறார்.

மேலும், விருந்தினரை உபசரித்தல் வேண்டி வயலில் ஓடும் நத்தையைச் சமைத்து வைத்தனர் என்ற செய்தி நற்றிணையில் 280வது பாடலில் கூறப்பட்டுள்ளது.

என்று தானே துழாவிச் சமைத்த இனிய புளிப்பையுடைய குழம்பை, இது மிக இனிதாக இருக்கிறதென்று கூறித் தன் கணவன் உண்டான் என்ற செய்தியைப் பாடல்வரி விளக்குகிறது.

நெய்தல் நிலத்தைச் சார்ந்த பெண் தன் தந்தைக்கு உணவளித்த இல்லறப் பண்பாட்டு மரபினை அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

***“நெடுந்திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு***

***உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு***

***அயிலை துடிந்த அம் புளிச் செறிந்து,***

***கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”[83]***

பண்டமாற்று முறையில் உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வெண்சோற்றை அயிலை மீனையிட்டு ஆக்கி சுவைமிகுந்த புளிக்கறியை அதிலே ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்கு மகள் உணவாக கொடுக்கும் பண்பாட்டு மரபினை இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

தெய்வங்களுக்கு எடுக்கப்படுகின்ற திருவிழா காலங்களில் விருந்தோம்பலும் சிறப்பாக நடைப்பெற்றதை,

***“தெய்வ விழவும் திருந்து விருந்தயர்வும்”[84]***

என்று பரிபாடல் குறிப்பிடுகிறது.

## விருந்தோம்பும் வளமனை

சங்ககாலத்தில் வருகின்ற விருந்தினர்களுக்கு அனைவருக்கும் நல்விருந்தோம்பும் வளமனைகளாக வீடுகள் திகழ்கின்றன எனக் குறிஞ் சிப்பாட்டு குறிப்பொன்று காட்டுகிறது.

***“மலரத்திறந்த வாயில் பலருணம்***

***பைந்நிண மொழுகிய நெய்ம்மலி யடிசில்”[85]***

இல்லறம் நல்லறமாகத் திகழ்வதற்கு விருந்தோம்பல் முறையும் ஓர் அடிப்படையாகக் கருதப்பட்டது.

## விருந்தோம்பலின் திண்ணை

பழங்காலத்தில் வீட்டிற்கு முன்புறம் இரண்டு திண்ணைகள் அமைக்கப்பட்டிருந்தன. இத்திண்ணைகள் நாடோடிகள், வழிப்போக்கர்கள்,

துறவிகள், தங்குவதற்காக அமைக்கப்பட்டன. இரவு நேரங்களில் இத்திண்ணைகளில் வந்து தங்குவோர்க்கும், பழந்தமிழர்கள் இரவு நேரங்களில் உறங்கச் செல்வதற்கு முன்பு தமது இல்லத்துத் திண்ணையில் யாரேனும் விருந்தினர்கள் தங்கியிருக்கிறார்களா என்று பார்த்து தெளிந்த பின்னரே கதவடைப்பது வழக்கமான இல்லறப் பண்பாட்டு மரபாக இருந்திருக்கிறது. இக்கருத்தினை,

***"பலர்புகு வாயி லடைக்கக் கடவுநர்***

***வருவீ ருளீரோ வெனவும்"***[86]

என்று குறுந்தொகைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இக்காலத்தில் இப்பண்பாட்டு மரபு வெகுவாக குறைந்து மறைந்தே வருகிறது.

## விருந்தோம்பலுக்குரியவர்கள்

பழங்காலத்தில் குருகுலக் கல்விமுறை வழக்கத்தில் இருந்தது. கல்வி கற்றவர்களின் எண்ணிக்கை குறைவாயிருந்ததால் கற்பவர்களுக்குப் போதுமான குரு (ஆசிரியர்) கிடைக்கவில்லை. கல்வியில் ஆசையுள்ள வறியவர்கள் வெளியூர் சென்று இரந்துண்டு கல்விகற்று வந்தனர். வெளியூரிலிருந்து வந்து படிக்கும் மாணவர்களுக்கு ஊராரும் மனமுவந்து உணவிடுவார்கள். என்பதனை,

***"இவன் ஓர் இளம் மானாக்கன்***

***இரந்த ஊண்நிரப்பா மேனியோடு***

***விருந்தின் ஊரும் பெரும் செம்மலனே"***[87]

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இதன் மூலம் நாம் பண்டையக்கால மாணவர்களின் நிலையை உணரமுடிகிறது. மாணவர்கள் மட்டுமல்லாது அவர்களுக்குக் கல்வி கற்றுக் கொடுக்கின்ற ஆசிரியர்களும் ஊர் மக்களிடம் உணவு பெற்றே உண்டுள்ளனர். இதன் மூலம் பண்டைக் காலத்தில் கல்வி அமைப்பில் விருந்தோம்பலின் பண்பாட்டு மரபினைப் பற்றி அறியமுடிகிறது.

## துறவிகள்

அறிவர் என்னும் பெயரில் அமைந்த துறவிகள் சிலர் சங்ககாலத்தில் இருந்து வந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. அவர்களுக்கு அந்தணர் வாழும் தெருக்களில் நல்லவகையில் உணவு கிடைக்கும். பல வீடுகளில் இரந்து வாழ்வதோடு அல்லாமல், சில நாட்களில் ஒரே வீட்டில் வயிறார நல்ல விருந்து கிடைத்தது. பனிக்காலத்தில் பருகுவதற்கு வெந்நீரும் கிடைத்தது என்பதைக் குறுந்தொகைப் பாடல்கள் சுட்டுகின்றன. இச்செய்திகள் மூலம் இவர்களுக்குப் படைக்கப்பட்ட உணவு (விருந்து) இறை நம்பிக்கையில் படைக்கப்பட்டது இவை இல்லறப் பண்பாட்டு மரபினைக் குறிக்கிறது என்று கூட கூறலாம்.

இத்துறவிகள் தலைவன் பிரிவால் வாடும், தலைவிகளுக்கு தலைவனின் வருகையும் பிற இன்பகரமான செய்திகளையும், சிலவேளைகளில் தலைவியின் மனத்துயரினைப் போக்குவதற்காக அறிவிப்பதும் உண்டு. இதனை,

***"ஆசுஇல் தெருவில் நாய் இல்வியன்கடைச்***
***செந்நெய் அமலை வெண்மை வெள்இழுது***
***ஓர்இல் பிச்சை, ஆர, மாந்தி,***
***அல்சிரம் வெய்ய, வெப்பத் தண்ணீர்***
***சேமச் செப்பில் பெறீஇயரோ நீயே"***[88]

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகிறது. இச்செய்தியானது தற்போதுள்ள சாமியார்கள் அல்லது குறிசொல்பவர்கள், குறி சொல்வதைப் போன்று அமைந்துள்ளது.

## வறுமையில் விருந்தோம்பல்

இல்லறம் நடத்தும் பெண்கள் எவ்வளவு வறுமை நிலை ஏற்பட்டாலும் விருந்தோம்பல் பண்பினை கடைப்பிடிக்கின்றனர் என்பதை குறிஞ்சிப் பாட்டில் தலைவியானவள் வீட்டைக்காத்து, வரும் சுற்றத்தாருக்கும் இல்லை என

சொல்லாது கதவை திறந்தே வைத்து விழா நாட்களில் விருந்து உபசரித்ததைப் பின்வரும் பாடல் கூறுகிறது.

***“சாறு அயர்ந்தன்ன மிடாஅச் சென்றி”[89]***

என்ற பாடல் வரியானது விழாக் கொண்டாட்ட நாட்களில் நடப்பது போல ஒரு பானைச் சோற்றையும், வருபவர்களுக்கு எல்லாம் இல்லை என்று என்னாது தருகின்ற செல்வச் சிறப்புடையது போல் வீட்டின் எப்போதும் வாசல் கதவு திறந்தே இருக்க அங்கே அருமையாக நெய் ஒழுகக் கறியோடு சேர்த்துச் சமைத்த சோற்றை குற்றமற்ற குணக் குன்றான பெரியோர்கள் தம் சுற்றமொடு இருந்து உண்டு மகிழ்ந்தார்கள் என்ற செய்தி பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது என்பதை இப்பாடல் மூலம் அறியமுடிகிறது.

## விருந்தினரைப் பேணுதல்

விருந்தினரை வரவேற்று பேணுதல் என்பது மிக முக்கியமானத் தன்மையாகும், விருந்தினரை எவ்வாறு பேணுதல் வேண்டும் என்பதை,

***“விருந்தின னாக ஒருவன் வந்தெதிரின்***
***வியத்தல்நல் மொழியினி துரைத்தல்***
***திருந்துற நோக்கல் வருகென உரைத்தல்***
***எழுதல்முன் மகிழ்வன செப்பல்***
***பொருந்துமற் றவன்றன் அருகுற இருத்தல்***
***போமெனின் பின் செல்வதாதல்***
***புரிந்து முகமன் வழங்கல் இவ்ஒன்பான்***
***ஒழுக்கமும் வழிபடும் பண்பே”[90]***

என்று விவேக சிந்தாமணியின் பாடலை வே. முத்துலக்குமி குறிப்பிடுகிறார்.

சங்ககால மக்கள் விருந்தோம்பலைச் சிறந்த பண்பாட்டு மரபாக கொண்டிருந்தனர். விருந்தினரை வரவேற்று இன்பமுறச் செய்வதையே

கடமையாகக் கொண்டிருந்தனர். பெண்கள் விருந்தோம்பலை இல்லறப் பண்பாட்டு மரபாகவே கடைப்பிடித்தனர்.

## மக்கட்பேறு

இல்லற வாழ்க்கைக்கு மிகவும் சிறப்பாக அமைவது நன் மக்கட்பேறு என்பது பண்டைய தமிழரின் பண்பாட்டு மரபாகும். மக்கட் செல்வத்தைப் பாராட்டும் நூல்கள் பல இருக்கின்றன. இதனை திருக்குறளில்,

***“பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த***
***மக்கட்பே றல்ல பிற”***[91]

என்று மக்கட்பேறு சிறப்பிக்கப்படுகின்றது. மனிதனின் பண்பாட்டின் வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்குவது மக்கட்பேறாகும் மக்களின் வளர்ச்சி நிலையே பண்பாட்டின் வளர்ச்சிக்குக் காரணமாகும். நம் தமிழர்களிடம் பதினாறும் பெற்றும் பெருவாழ்வு வாழ்க என வாழ்த்தும் நிலையை காணமுடிகின்றது. பதினாறு பெற்று வாழ்க என்பது மக்கட் செல்வத்தை மட்டுமல்ல, மனிதன் தன் வாழ்க்கையில் பெற வேண்டிய அனைத்துப் பெருமைகளையும் பெற்று வாழ வேண்டும் என்பதாகும்.

***“துதி வாணி வீரம் விசயம் சந்தானம் துணிவுதனம்***
***அதி தானியம் சௌபாக்கியம் போகம் அறிவு அழகு***
***புதி தாம் பெருமை அறம் குலம் நோய் இன்மை பூண்வயது***
***பதினாறு பேரும் தருவாய் மதுரை பராபரனே”***[92]

என்ற பாடலில், பதினாறுப் பேறுகளை காளமேகப் புலவர் தன் பாடலில் எடுத்துரைக்கின்றார்.

இப்பதினாறு பேறுகளுள் பல பேறுகள் சிறப்பு பெற்றிருந்தாலும் எல்லோராலும் மதிக்கப்பட்டுப் போற்றப்படுவது மக்கட்பேறு ஒன்றாகும்.

மனித வாழ்வில் சிறப்பாக அமைய தேவையானது, நல்லற வழியில் நடத்தும் இல்லறம் ஆகும். அவ்வில்லறம் சிறந்து விளங்க வேண்டுமென்றால் நன் மக்கட்பேறு பெற வேண்டும். பழியில்லாத நன்மக்களைப் பெற வேண்டும். இதனை,

***"எழுபிறப்புந் தீயவை தீண்டாப் பழிபிறங்காப்***
***பண்புடை மக்கட் பெறின்"***[93]

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும்,

***"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்***
***நன்கலம் நன்மக்கட் பேறு"***[94]

என்றும் கூறுகின்றார்.

அகநானூற்றுப் பாடலில்,

***"இல்லை யுலகத் திசையொரு விளங்கி***
***மறுமை யுலகமும் மதுவின் றெய்துப***
***செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்***
***சிறுவர்ப் பயந்த செம்ம லோர்"***[95]

என்ற அடிகளில் மனிதன் தன் இம்மை வாழ்க்கையில் புகழோடும் மகிழ்ச்சியோடும் வாழ்வதற்கும், மறுமை வாழ்க்கையை மறுப்பின்றி அடைவதற்கும் மக்கட்பேறு முதன்மையானதாக அமைகின்றது என கூறப்படுகின்றது.

மேலும் வாழ்விற்கு அணியாக விளங்குவது நன் மக்கட்பேறாகும். மக்கட்பேறின் மாண்பினை,

***"மனைக்கு விளக்கம் மடவாள் மடவாள்***
***தனக்குத் தகைசால் புதல்வர்"***[96]

என்று நான்மணிக்கடிகை எடுத்தியம்புகிறது.

குழந்தைகளை வளர்ப்பது என்பது தாயின் தலையாய கடமையாகும்.

***“பால் கொளல் இன்றிப் பகல்போல் முறைக்கு ஒல்வாதி***

***கோல் செம்மை ஒத்திபெரும, மற்று ஒவ்வாதி***

***கால் பொரு பூவின் கவின்வாட நுந்தைபோல்***

***சால்பு ஆய்ந்தார் சாயவிடல்”[97]***

என்னும் பாடலில் வழிமூலம் தாய் தனது மகனை ஒழுக்கம் நிறைந்தவனாக வளர்ப்பதில் சிறப்புடன் செயல்படுகிறாள் என்பதை அறியமுடிகின்றது.

## மழலை மொழி

மழலைமொழி மிகவும் இனிமையானது, செவிக்கும், உள்ளத்திற்கும் இன்பத்தை ஏற்படுத்தக் கூடியது. இம்மொழியின் பொருள் எவருக்கும் புரியாவிடினும் எல்லோரையும் ஈர்க்கும் தன்மை கொண்டது. இதனை, ‘குதலைச் சொற்கள்’ என்றும் அழைப்பர்.

***“குழலினிது யாழினிது என்பதம் மக்கள்***

***மழலைச் சொல்கேளா தவர்”[98]***

என்று வள்ளுவர் மழலையின் மொழிக்குச் சிறப்பு தந்துள்ளார்.

***“நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்”[99]***

என்ற அகநானூற்று பாடலானது, நாவால் பயின்று பேசப்படாத, கேட்போர்க்கு மகிழ்ச்சியைத் தருகின்ற இனிமை வாய்ந்த மழலைச் சொற்களின் இனிமையை சங்ககால மக்கள் மழலை மொழியின் இனிமையை அனுபவித்து வாழ்ந்துள்ளனர் என்பதை உணரமுடிகின்றது.

மக்கட் பேறினால் மனிதன் முழுமையடைகிறான். மக்கட்பேறு தன் குடும்பத்தின் வளர்ச்சிக்கும், பெருமைக்கும் அடிப்படையாக அமைகிறது. குழந்தைப்பேறு பெறாதவர்களை சமூகம் மலடி என்று பெயரிட்டு அழைக்கும்

அவல நிலையையும் நாம் அறிந்த ஒன்று ஆகும். யாராலும் விரும்பக் கூடிய ஒன்று குழந்தைச் செல்வம் அதன் நடை, உடை, சொல் போன்றவை எல்லோராலும் விரும்பக் கூடியவை. ஏற்க்க கூடியவை இதனையே,

***"யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன்"[100]***

என்றும் மழலைச் செல்வத்தின் நிலையை அகநானூறு எடுத்துரைக்கின்றது.

## மக்கட்பேற்றின் இனிமை

இல்லற வாழ்வின் இனிமை மக்கட்பேற்றாலே நிறைவடைகிறது என்று பண்டைய மக்கள் நம்பி இருந்தனர். ஏன் இன்றும் திருமணம் ஆனபின் பிள்ளை இல்லை எனில் வருந்தும் பெண்களையும் பார்க்கலாம். ஏசும் சமூகத்தையும் பார்க்கலாம். ஆக, புதல்வர்களைப் பெற்றவர்கள் இம்மை உலகத்திலும் புகழோடு விளங்கி, மறுமை உலக வாழ்வினைக் குற்றமின்றி எய்தினர் என்ற பெண்களின் நம்பிக்கையும் காலப்போக்கில் பண்பாட்டு மரபாகவே மாறிவிட்டது.

உடன்போக்கு சென்ற தலைவியின் மீது கோபம் கொண்ட செவி-லித்தாய், அவள் எவ்விதம் இருக்கிறாள் என்பதைப் பார்க்க விரும்புகிறாள்.

***"மறி இடைப் படுத்த மான் பிணைபோல***
***புதல்வன் நடுவணன் ஆக நன்றும்***
***இனிது மன்ற அவர் கிடக்கை முனிவு இன்றி"[101]***

என்ற பாடலால் மக்கட்பேற்றினைப் பெற்று தன் மகள் வாழ்வது கண்ட செவிலித் தாயின் கோபம் தணிந்து இல்லற வாழ்வில் நிறைவு பெற்றாள் என்றும் அவள் பெற்ற பேரின்பத்தினை எடுத்துக்காட்டுகிறது.

***"மாலை முன்றில் குறுங்காற் கட்டில்***
***மனையோள் துணைவி ஆக, புதல்வன்"[102]***

என இன்பமிக்க பொழுதிற்கு சாதாரிப் பண்ணின் இசையினை விட, தலைமகன் தன் மனைவி புதல்வனுடன் கூடியிருக்கும் சிறந்தக் காட்சி மகிழ்வை ஏற்படுத்துவதாக பேயனார் குறிப்பிடுகிறார். இதன்மூலம் யாழ் இசையினை விட மழலையுடன் இனிது இருக்கும்பொழுது, பெரும் மகிழ்வைத் தருவதாக அறியமுடிகின்றது.

## குடிப்பெருமை

ஒவ்வொரு குடிக்கும் பெருமை சேர்ப்பது மக்கட் செல்வமாகும். குடிக்கு விளக்காக அமைவது மக்கட்பேறு என (அகம். 184) விளக்குகிறது. மக்களைப் பெற்ற மகளிர் சமூதாயத்தில் மதிக்கப்பெற்றனர். வாழையடி வாழையாக வரும் குடும்பத்தின் மரபு நெறி போற்றுவது மக்கட் செல்வமாகும்.

“இல்லறத்தில் வாழ்வோர்க்குப் புத்திரப்பேறு ஒரு சிறந்த செல்வமாகக் கருதப்பட்டது. குலப்பெருமையைக் காக்கவல்லது கணவனுக்கும், மனைவிக்கும் எவ்வளவு கடுமையான சண்டைகள் நேர்ந்தாலும், குழந்தைகள் இருந்தால் சண்டைகள் தலைதூக்காது. அவ்விருவர்க்கும் குழந்தைகளே சமாதானத் தூதர்களாய் நிற்கும். அவர்களுடைய பிணக்கு விரைவில் மறையும்”[103] என்று சாமி. சிதம்பரனார் குறிப்பிடுகிறார்.

வெளியே சென்றிருக்கும் கணவன்மேல் மனைவி கடுங்கோபத்துடன் இருக்கின்றாள். கணவனும் இதை அறிந்துக் கொண்டான். நாம் நேரே அவளிடம் போனால் அவள் நம்முடன் பேசமாட்டாள் என்று நினைத்தே அவன் அத்தந்திரத்தைக் கையாண்டான்.

பேசாமல் வீட்டுக்குள் புகுந்தான் அவன் கட்டிலிலே உறங்கும் புதல்வனை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டான். அதைக்கண்ட மனைவி தானும் கட்டிலில் ஏறித் தன் கணவனுடைய முதுகுப் புறத்தை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டாள். இந்த அவளோடு அவர்கள் சண்டை தீர்ந்துவிட்டது இதனை,

***“புதல்வன் தழீஇனன் விறலவன்***

***புதல்வன்தாய் அவன்புறம் கவைஇ யினளே!”[104]***

கணவன் மனைவிகளுக்குள் ஒற்றுமை நிலவப் புத்திரப்பேறு ஒரு சாதனம் என்ற கருத்து இப்பாட்டில் அமைந்திருப்பதைக் காணலாம்.

மழலைமொழி அனைவருக்கும் இனிமை தரக்கூடியது என்பதை, தலைவன் மேல் உள்ள கோபத்தை மாற்றி பிள்ளையை பாராட்டலாம் என்று இருந்தபோது பிள்ளையோ, அத்தத்தா, அத்தத்தா என்று தந்தையை நினைவு படுத்துகிறது. இருப்பினும், பிள்ளைகளின் மழலையில் மயங்கி தூக்கி அணைத்துக் கொள்ளும் காட்சி குடிப்பெருமையை காட்டுகிறது. இதனை,

***“நோய் நாம் தணிக்கும் மருந்து என பாராட்ட***

***ஓவாது அடுத்து அடுத்து அத்தத்தா என்பான் மாண”[105]***

என்ற கலிப்பாடலில் தந்தையின் பிரிவால் துயருற்ற தாய், நன் மருந்தாக பிள்ளையின் மழலையால் இன்பம் பெற்ற மனநிலையை மொழிகின்றது. மேலும் சிறுவர் சிறுத்தேரை உருட்டி விளையாடுவதை,

***“பாலோடு அலர்ந்த முலை மறந்து, முற்றத்துக்***

***கால் வல் தேர் கையின் இயக்கி, நடைபயிற்றா”[106]***

என்றும், பால் உண்ண மறுத்து, தேரை உருட்டி விளையாடும் பிள்ளையைக் கண்டு முருகன் போல ஆகிய தோற்றம் கொண்ட என் உயிர் மகனே என பாராட்டி மகிழும் தாயின் மனதைக் சுட்டுகின்றது.

தன்னுடைய குடிப்பெருமையை உயர்த்திட உதவிடும் வகையில் பிள்ளைப் பெற்றதால் ‘தாய்’ என்று பெயர் பெற்று விளங்கிய தன் மனைவியின் வயிரை குவளை மலரால் ஒற்றி எடுக்கிறான்,

***“கடும்படைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி”[107]***

என்ற நற்றிணைப் பாடல், பிள்ளை பெற்று தந்ததால் தன் மகிழ்வை மனைவியிடத்து காண்பிக்கும் விதத்தினையும் தன் மனை விளங்கச் செய்பவள் மனைவி என்பதை உணர்த்தும் விதமாகவும் அமைந்துள்ளது. ஒரு தந்தையின் மனமகிழ்வை எடுத்துக்காட்டுகிறது.

## நன்மக்கள் அருமை

குழந்தைகளில் ஆண்மகன், பெண்மகள் என்று பேதமுறை எந்த இலக்கியத்திலும் காணப்பெறவில்லை. ஆயினும் பெண்மகள் மீதுள்ள அக்கறை பாசம் அதிகளவில் காணமுடிகின்றது.

***"ஒரு மகள் உடையேன் மன்னே அவளும்***
***செரு மிகு மொய்பின் கூர்வேற் காளையோடு"***[108]

என்ற நற்றிணைப் பாடல்வழி மகள் பெறுதற்கரியவள் என்பதனையும் தலைவி தலைவனுடன் சுரவழியில் சென்றது கூட அவருக்கு வருத்தம் தரவில்லை. ஆனால், அவளை விட்டும் பிரியும் பிரிவு மிகுந்த வருத்தத்தைத் தருவதாக பெறுதற்கரிய மகளின் பிரிவை எண்ணி வருத்தும் தாய்மையைக் காணமுடிகின்றது. பெண் குழந்தையே வேண்டாம் என்று கருவிலே அழிக்கும் சமூகத்தையும் பார்த்து வருகிறோம் இதனை,

***"குன்றக் குரவன் கடவுள் பேணி***
***இரந்தனன் பெற்ற செல்வளைக் குறுமகள்"***[109]

என ஐங்குறுநூறில் பெண் குழந்தை வேண்டும் என்று குன்றக் கடவுளை வேண்டிப் பெற்றவள் என்று குறிப்பிடுவது இல்லறப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

***"நல்கூர்ந்தார் செல்வ மகள்"***[110]

என்பதால் மக்கட் பேறு இல்லாத காரணத்தால் வேண்டிப் பெற்றவள் என் மகள் என்று கூறும் கலித்தொகை குறிப்பிடுவதால் பெண் குழந்தை மீதுள்ள பற்றையும் காணலாம்.

மேலும், இல்லறம் பண்பாட்டு மரபில் மகிழ்ச்சிக்குரிய நிகழ்வுகளில் மைல்கல்லாக விளங்குவது மக்கட்பேற்றாலே விளையும் என்பதை இதன்வழி உணர முடிகின்றது.

**ஈதல்**

இவ்வுலகத்தில் மனிதன் தன்னைக் காத்துக்கொள்வது தன்னலம் ஆகும். பிறரையும் தன்னைப்போல் நேசிக்காதவர்கள் இவ்வுலகில் வாழ்வது பயனில்லை. ஈகை என்பது தன்னிடம் இரந்து நிற்பவர்க்கு இல்லை என்று கூறாமல் வழங்குதல் ஆகும். மனிதனின் நல்லறங்கள் பலவற்றுள் உயர்ந்தது ஈகையாகும். வறுமையில் துன்புற்ற மக்களுக்கு வேண்டிய பொருளை வழங்கி அவர்களின் துன்பத்தைப் போக்குவது சிறந்த அறம் எனலாம். ஈகைக் குணம் கொண்டவர்கள் இவ்வுலகில் பெரும் புகழையும் பேறினையும் அடைவார்கள். இல்லறம் நல்லறமாக மாறுவது ஈதலே ஆகும். இவ்வுலகம் அக்குணம் கொண்டவனைப் போற்றித் துதிக்கும் போன்றவை மக்கள் கொண்டிருந்த நம்பிக்கையாகும்.

சங்ககால மன்னர்கள் தங்களை நாடிவந்து புலவருக்கு வேண்டியதையும் கிடைத்தற்கரிய பொருள்களையும் அவர்கள் மனம் மகிழும் அளவிற்குக் கொடுத்த ஈகைப்பண்பினைச் சங்க அக இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன.

'ஈகை' என்ற தலைப்பில் வள்ளுவர் திருக்குறளில் ஓர் அதிகாரத்தைப் படைத்துள்ளார். இல்லாத ஏழைகளுக்கு கொடுத்துதவ வேண்டும் என்பதை,

***"வறியார்க் கொன்று ஈவதே ஈகை"***[111]

என்றும்

***“ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது***

***ஊதியம் இல்லை உயிர்க்கு”*** [112]

என்று குறிப்பிடுகிறார். எட்டுத்தொகையில் மன்னர்களின் கொடைத்திறனையும், கொடை வழங்கிய மன்னர்களாகிய வள்ளல்களைப் புகழ்ந்து பாடிய புலவர்களின் கவித்திறனையும் நாம் அறியலாம். பத்துப்பாட்டில் குறுநில மன்னர்கள், தங்களை நாடி வந்த பாணர்கள், விறலியர், பொருநர், கூத்தர் போன்றோர்களுக்கு பரிசில் வழங்கிய வள்ளல் தன்மையைக் காணமுடிகின்றது.

ஈகையாளரின் பண்பு பற்றி நாலடியார் குறிப்பிடுவது தன்னை அடைந்தவரை கண்டு அச்சம், கலவை, சோர்வு கொள்ளாது முகமலர்ந்து ஈதல் வேண்டும் அகம் மலர்ந்து ஈவது மிகவும் சிறப்புடைத்து ஆகும். செல்வம் இருக்கின்ற காலத்தில் பொருளை கொடுப்பது போன்று செல்வமில்லாத காலத்திலும் இயன்றளவு மகிழ்ச்சியுடன் பொருளைக் கொடுக்க வேண்டும் அன்புடன் வழங்கும் செல்வம் எக்காலத்தும் நன்மையைக் கொடுக்கும்.

வறுமை என்பது ஓர் சுழற்சி எனள்று குறிப்பிடலாம். இன்று மற்றவர்க்கு இருக்கும் வறுமை நாளை நமக்கும் நேரிடும் மேலும் இன்று ஒருவரிடம் உள்ள செல்வம் நாளை மற்றவர்க்கு உரிமையாகும். தன் இல்லத்திற்கு வருபவரை இகழ்ச்சி கொள்ளாது தன்னிடம் உள்ள பொருளைக் கொடுத்து வாழ வேண்டும் என்பதை,

***“இம்மி அரிசித் துணையானும் வைகலு***

***கோடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்து***

***ஆடாஅ அடுப்பினவர்”*** [113]

என்ற பாடல் சுட்டுகின்றது. நிறைந்த உணவு தன்னிடம் இல்லையெனினும் சிறிதளவாது பிறருக்குக் கொடுத்து உண்ண வேண்டும். அவ்வாறு பொருளைக் கொடுப்பதற்கு மனம் இல்லாதவர் அடுத்த பிறவியில் இரந்து வாழ்வதற்கு

ஆளாவர். அம்மனிதனை இவ்வுலகில் வாழ்பவர் முற்பிறவியில் இரந்து கேட்பவர்க்குக் கொடுக்காதவன் என்று இகழ்ந்து கூறுவர் என்கிறது நாலடியார். எனவே பிறருக்கு கொடுக்கும் குணம் உள்ளவரே சிறந்தவர் ஆவார் அதுவே இல்லத்திற்குரிய பண்பாட்டு மரபாகவும் கருதப்படுகிறது.

சங்க அக இலக்கியமான அகநானூற்றில் தலைவன் பொருள் தேடுவதற்காக பிரிந்து செல்கிறான். இதனால் தலைவனைப் பிரிந்த வருத்தத்தில் தலைவி இருக்க, தலைவியைத் தேற்றும் தோழியானவள்,

***"இல்லார்க் கில்லைன் றியைவது கரத்தல்***
***வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்"[114]***

தன்னைத் நாடி வருபவருக்கு இல்லை என்று கூறாத நெஞ்சம் கொண்ட தலைவன் பொருள் மீது கொண்ட பற்றினால் மட்டுமல்ல, ஈதலே ஒருவனின் இல்லறக் கடமையாகும். என்பதை நினைவில் கொண்டுதான் பிரிந்துள்ளான். ஆதலால் வருவான், வருந்தாதே என்கிறாள்.

சங்ககால மக்கள் ஈகையைக் கடமையாகவும் இல்லறப் பண்பாட்டு மரபாகவும் கொண்டிருந்தனர். தன்னிடம் இரப்பவரிடம் இல்லை என்று சொல்லும் தன்மையற்றவர்கள் ஆவர்.

***"கொடைக் கடன் என்ற கோடா கெஞ்சின்"[115]***

கொடையினைத் தன்னுடைய கடமையாகக் கொண்டவர்கள் என்பதைச் சுட்டுகிறது. அறங்களுள் நல்லறமான கொடைப் பண்பினை தனக்குரிய கடனாக உதியன் என்பவன் கொண்டுள்ளான் என்ற வரலாற்றுச் செய்தியை முன்னிறுத்தி ஈகைப் பண்பினைக் கடைபிடித்து வாழும் சங்ககால மக்களின் இல்லற வாழ்வியலை அறியமுடிகின்றது.

***"பொருள் இல்லாருக்கு இவ்வுலகம் இல்லை"[116]***

என்ற வள்ளுவரின் குறளுக்கேற்ப

*“............ஈதல்*

*பொருளில் லோர்க்கஃதியை யாதாகுதல்”*[117]

என்பது, பொருள் ஈட்டச் செல்லும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகிறான். ஈதல் என்ற நல்லறத்தைச் செய் நினைப்பவன் முதலில் பொருளினைப் பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு பொருள் பெறாதவன் ஈதல் என்ற அறத்தைச் செய்ய இயலாது என்று கூறுகிறான். பொருளானது முக்கியமானது என்றும், பொருள் இல்லை என்றால் இவ்வுலகம் இல்லை என்பதையும் உணர்த்துவதாக இப்பகுதி அமைந்துள்ளது எனலாம்.

இல்லை என்று வந்தோர்க்கு இல்லை என்னாது ஈதலே மேலானது தன்னிடம் உள்ள செல்வத்தைப் பிறருக்குக் கொடுப்பதைப் பண்டைய கால மன்னர்கள் பண்பாட்டு மரபாக கொண்டிருந்தனர். தான் பெற்ற செல்வமும் நிலையானதல்ல, ஆனால் பேரும் புகழுமே நிலையானவை என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர்.

அறங்களைச் செய்யாதவரின் வாழ்க்கையும், பிறருக்கு உதவாதவனின் செல்வமும் இல்லாமல் போகும் என்பதை,

*“அறன் கடைப் படான்”*[118]

என்று குறிப்பிடுகிறது. அகநானூறு பொருளானது நிலையில்லாது பிறருக்கு உதவக் கூடிய குணங்களைக் கொண்டிருத்தல் சிறந்த அறம் என்பதனை,

*“நசைதர வந்தோர் இரந்தவை*

*இசைபடக் பெயர்தல் ஆற்றுவோரே”*[119]

என்ற அடிகள் தன்னிடம் இரந்து கேட்போர்க்கு ஒன்றினைக் கொடுத்து புகழ் உண்டாக வாழ்வதற்காகவே பொருள் தேடித் தலைவன் சென்றுள்ளான் என்பதைக் சுட்டுகிறது.

ஈதல் சிறந்தது என்றும் அதுவே புகழ் தரக் கூடியது என்றும் இவ்ஈதலே மகிழ்ச்சியை மனிதனுக்குத் தருகிறது என்பதனை,

***"ஈதல் இன்பம் வெஃகிமேவர"[120]***

என்ற அடி உணர்த்துகின்றது. அக்கால மக்களிடம் மனையறைப் பண்பாட்டு மரபோடு ஈகைப் பண்பும் சிறந்து விளங்கியது.

## ஈகையறம்

"அறங்களில் முதன்மையானதாகச் சான்றோர்களால் போற்றப்படுவது ஈகையறம் என்னும் கொடுத்தல் பண்பாகும். இருப்போர் இல்லாதோர்க்குக் கொடுத்து மகிழ்வதே வாழ்வியலை அர்த்தப்படுத்தும். மாந்தர்களை மேன்மைக்கு உள்ளாக்கும். இஃதே உயர்ந்த சமுதாய அறமாக மதிக்கத் தக்கது. இவ்வாழ்வியல் தன்மை கொண்ட உலகியல், நிலையாமையைத் தன்னுள் கொண்டது. இதனாலேயே சான்றோர் அறம், பொருள், இன்பம் என மூன்றையும் இல்வாழ்விற்கு நெறிகளாக வலியுறுத்தினர். பொருள் கொண்டோர், அஃது இல்லாதோருக்குக் கொடுத்து உதவுவதையே மிகக் சிறந்த பண்பாகப் கொண்டிருந்தனர். வறியோர்க்கு ஈவதும் அதனால் பெறப்படும் புகழும் இன்பமும் சோம்பலுற்றுப் பொருள் தேடாது இருப்பவர்க்கு இல்லை என்று கருதிய அளவில் சங்ககால ஆடவர் பொருளீட்டலையே தம் கடமையாகக் கொண்டிருந்தனர்"[121] என்று சதாசிவம் குறிப்பிடுகிறார். இதனை நற்றிணை,

***"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்***

***அசைவுட னிருந்தோர்க் கரும்புணர்வின என"[122]***

என்று உரைப்பதன் மூலம் அறியலாம். இல்லற வாழ்விற்குப் போதுமான பொருள் வளம் இருப்பினும் தம்மை நாடி வரும் இரவலர்களுக்கு உதவி செய்தல் பொருட்டு அக்கால ஆடவர் சமுதாய பொருள் தேடலை மேற்கொண்டது. இதனைத் தலைவி,

***“பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு***

***காமர் பொருட்பிணி போகிய.....”[123]***

என்று தோழியிடத்து உரைப்பதால், தலைவன் பிறர் நலம் பேணும் பொருட்டும் பொருளீட்டலைச் செய்தான் என்பதும் தெளிவாகின்றது. தலைவனின் பொருளீட்டல் மாண்பை எடுத்துரைக்க முற்பட்ட மற்றொரு தோழி, தலைவன் பொருளீட்ட முனைந்ததன் நோக்கம் நம்மோடு நட்புப்போடு இருப்பவருக்கு உதவும் பொருட்டும் தலைவியின் அழகு பொருந்திய தோள்கள் அணிகலன்களைப் பெறவும் என்று தலைவியிடத்து உரைக்கின்றான். அஃதாவது,

***“நட்டோர் ஆக்கம் வேண்டியும் ஒட்டிய***

***நின்தோள் அணிபெற வரற்கும்***

***அன்றோ தோழிஅவர் சென்ற திறமே”[124]***

என்ற தலைவனின் நோக்கமும் செயலும் இங்கு கூறப்படுகின்றது. பொதுநலம் கருதியும் தலைவன் பொருளீட்டலில் ஈடுபடுவது அவனுடைய உயர்ந்த மரபினை வெளிக்காட்டுகின்றது. இதனால் பொருளீட்டல் ஈகையறம் பேணும் தன்மையிலும் நிகழும் என்பது அறியப்படுகின்றது.

## ஈதலும் வாழ்வும்

வீட்டுக்கு தினந்தோறும் இரவலர் பலர் வந்து உதவி பெறுவது பெருமையாகவும், அவர்கள் வராமலிருப்பது வாழ்க்கையின் சிறுமையாகவும் கருதப்பட்டு வந்தன. உன்னைப் பிரியமாட்டேன் என்று தலைவிக்கு அறிவுறுத்தும் தலைவன் கூறும் உறுதிமொழி இதனை,

***“இரவலர் வாரா வைகல்***

***பல ஆகுக, யான் செலவு உறுதகவே”[125]***

என்கிறது குறுந்தொகை. மேலும்,

***“இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய***

***கொடுத்தவைதா என் சொல்லினும்***

***இன்னாதோ நம் இன் உயிர் இழர்பே”[126]***

என்றும், பிரிதொரு குறுந்தொகைப் பாடல். அதாவது இல்லை என்று துன்பத்தால் வருத்தி இரந்துகேட்ட ஒருவர்க்குக் கொடுத்த பொருளைத் திரும்பப் பெறக்கூடாது.

திரும்பக் கொடுக்குமாறு கேட்கவும் கூடாது அவ்வாறு கேட்பதைவிட உயிரை விட்டுவிடலாம் எனவும் குறிப்பிடுகிறது.

பிறர் துன்பத்திற்கு இளகும் மனமுடைய சான்றோர். பொருளைப் பாதுகாவாது தம்மிடமுள்ளதை எல்லோர்க்கும் வழங்கிடும் இல்லறப் பண்பாட்டு மரபினை உடையவராவார் என்பதனை,

***“நல்இசை வேட்ட நயன் உடைநெஞ்சின்***

***கடப்பாட்டாளன் உடைப்பொருள் போலத்***

***தங்குதற்கு உரியது அன்று, நின்***

***அம்கலுழ் மேனிப் பாஅய் பசப்பே”[127]***

என்று குறுந்தொகைப் உணர்த்துகிறது. இதிலிருந்து சங்ககால மக்களிடையே இருந்த ஈகைப்பண்பும், இரக்க உணர்வும் வெளிப்படுகிறது. உயர்ந்த உள்ளம் கொண்ட செல்வக்குடியில் பிறந்தவர்கள், தன்னை நாடி வந்தவர்களுக்கு நீரோடு பொன்னைச் சேர்த்துத் தானாமாக வழங்குவார்கள். தானம் கொடுத்து மீதமிருந்தவற்றைத் தான் மட்டும் நுகராமல் யாவருக்கும் விருப்பமோடு கொடுக்கும் இல்லறப் பண்பாட்டு மரபினை உடையவர்கள் என்பதனை,

***“கவலை வேண்டிய அகவல்வாய்ச் சிறுகுழி,***

***கொன்ற ஒள் வீதாஅய்ச், செல்வர்***

***பொன்பெய் பேழை மூய்திறந்த அன்ன,***

*கார் எதிர் புறவின் அதுவே, உயர்ந்தோர்க்கு*

*நீரோடும் சொரிந்த மிச்சில் யாவர்க்கும்*

*வரைகோள் அறியாச் சொன்றி,*

*நிரைகோல் குறுந்தொடி தந்தை ஊரே”*[128]

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகிறது. மேலும்,

*“பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்”*[129]

என்ற குறுந்தொகைப் பாடல் வரியின் மூலம், இரவலர்களுக்கு மனம் உவந்து அவர்களின் துன்பம் நீங்குமாறு பொருள் கொடுத்து உதவும் மனப்பான்மை சங்ககால மக்களிடையே இருந்து இல்லறப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

## தொகுப்புரை

நாட்டின் கண்களாகப் போற்றப்படும் பெண்கள் இல்லறம் நடத்தும் மாண்பைச் சிறப்பாக இவ்வியல் கூறுகிறது. இல்லறத்திற்குத் தலைவனாக விளங்கும் கணவனை மதிக்கும் பண்பாட்டு மரபினையும், பெண்ணின் உயரிய பண்பினையும், திருமணம் பற்றிய செய்திகளையும் இவ்வியல் கூறுகிறது. தன் குடிப்பெருமையை நிலை நிறுத்துவது, குழந்தைகளைப் பெறுவது, அக்குழந்தைகளுக்கு நல்லுரையைப் பேணுவது, அவர்களை நல்ல அறிஞர்களாக உருவாக்குவது போன்ற பெண்களின் இல்லறக் கடமைகளை இவ்வியல் கூறுகிறது. பெற்ற குழந்தைகளால் தாய் தந்தையர்கள் அடையும் இன்பம், பிறருக்குக் கொடுத்து உதவுதல், அதனை அறமாக போற்றுதல், வறுமையிலும் கணவனுடன் இல்லறம் நடத்துவது, கணவனை உபசரித்தல், பிள்ளைகளை உபசரித்தல், தன் கணவன் வீட்டு உறவினர்களையும், தம் குடியில் உள்ள உறவினர்களைப் போல போற்றுவது, பிறந்த வீட்டுக் குடிப்பெருமையும், தன் வீட்டுக் குடிப்பெருமையும், உற்றார் உறவினர் அயலவர் யாவரும் இன்புற்று வாழ இறைவனை வணங்கும் பெண்களின் உயர்ந்த சிந்தனைகளையும், சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகளின் வழியாக இவ்வியல் கூறுகிறது.

## குறிப்புகள்

1. நன்னூல், நூ.10.
2. முனைவர் ச.வே. சுப்பிரமணியன், மெய்யப்பன் தமிழ் அகராதி, ப.153.
3. அ. தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.81.
4. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணார், பண்டைத் தமிழ் நாகரீகமும் பண்பாடும், ப.64.
5. தொல். பொருள். களவு., நூ.19.
6. மேலது., கற்பியல், நூ.15.
7. குறுந்தொகை, பா.49:3-4.
8. அகநானூறு, பா.339:12-14.
9. குறள்.45.
10. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், முதல் தொகுதி, ப.5.
11. குறுந்தொகை, பா.322:5-6.
12. செ. பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.41.
13. குறள்.1101.
14. சி. பாலசுப்பிரமணியன், மலர் காட்டும் வாழ்க்கை, ப.16.
15. குறுந்தொகை, பா.295:4-6.
16. அ.ச. ஞானசம்பந்தன், அகமும் புறமும், ப.33.
17. பரிபாடல், பா.106-108.
18. குறுந்தொகை, பா.10.
19. மேலது., பா.167.
20. மு. சண்முகம் பிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.228.
21. தொல். பொருள். மெய்ப்., நூ.25.

22. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப.62.

23. சசிவல்லி, தமிழர் திருமணம், ப.7.

24. தொல். பொருள். களவு., நூ.140.

25. மேலது., ப.153.

26. தொல். பொருள். செய்யுள்., நூ.487.

27. குறுந்தொகை, பா.25:1.

28. கலித்தொகை, பா.37:14-17.

29. குறுந்தொகை, பா.40.

30. மேலது., பா.196:1-2.

31. தொல். பொருள். களவு., நூ.111.

32. கலித்தொகை, பா.16:20.

33. குறள்.57.

34. கலித்தொகை, பா.39:16-17.

35. மேலது., பா.38.

36. மேலது., பா.39.

37. நற்றிணை, பா.279.

38. அகநானூறு, பா.385.

39. அ. தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு, ப.874.

40. மேலது., பா.296.

41. குறுந்தொகை, பா.225.

42. அகநானூறு, பா.221.

43. மேலது., பா.86.

44. மேலது., பா.136.

45. கலித்தொகை, பா.114:12-17.

46. குறுந்தொகை, பா.15:1-2.

47. அகநானூறு, பா.80.

48. புறநானூறு, பா.127:5-6.

49. முனைவர். கு. இராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப.29.

50. மேலது., ப.29.

51. புறநானூறு, பா.250:3-4.

52. மேலது., 237:9-14.

53. நெடுநல்வாடை, அடி.136-137.

54. கலித்தொகை, பா.41.

55. குறிஞ்சிப்பாட்டு, அடி.231-232.

56.அகநானூறு, பா.90:9-14.

57. மேலது., பா.280:4-9.

58. மேலது., பா.280:1-9.

59. கலித்தொகை, பா.104.

60. தொல். பொருள். அகத்., நூ.38.

61. பன்னிரு பாட்டியல், 63.

62. கலித்தொகை, பா.141:1-6.

63. குறுந்தொகை, பா.364:5-8.

64. தொல். பொருள். கற்பு., நூ.6.

65. மேலது., நூ.31.

66. மேலது., நூ.32.

67. மேலது., நூ.33.

68. ஐங்குறுநூறு, பா.292.

69. பா. இறையரசன், தமிழர் நாகரிக வரலாறு, ப.302.

70. வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.83.

71. பழந்தமிழர் பண்பாட்டு மீள்வாசிப்பு...., மு. கவிதா, ப.6.

72. தொல். பொருள். கற்பு., நூ.11.

73. குறள்.85.

74. நற்றிணை.பா.81.

75. மேலது., பா.120.

76. மணிமேகலை, பா.11:93.

77. அகநானூறு, பா. 384:14.

78. மேலது., பா.324:1.

79. இளங்கோவடிகள், சிலம்பு, கொலைக் களக் காதை, அடி.71-73.

80. அகநானூறு, பா.311:10.

81. மேலது., பா.300:21.

82. குறள்.90.

83. அகநானூறு, பா.60.

84. பரிபாடல், பா.17.

85. குறிஞ்சிப்பாட்டு, அடி.203-204.

86. குறுந்தொகை, பா.118:3-4.

87. மேலது., பா.33:1-4.

88. மேலது., பா.277:1-5.

89. குறிஞ்சிப்பாட்டு, அடி.201.

90. வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.92.

91. குறள்.61.

92. காளமேகப் புலவர், கவி காளமேகம், பா.16.

93. குறள்.62.

94. மேலது., பா.60.

95. அகநானூறு, பா.66:1-4.

96. நான்மணிக்கடிகை, பா.10.

97. கலித்தொகை, பா.86:17-20.

98. குறள்.66.

99. அகநானூறு, பா.16:4.

100. மேலது., பா.16:5.

101. ஐங்குறுநூறு, பா.40:1-3.

102. மேலது., பா.410:1-2.

103. சாமி. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.52.

104. குறுந்தொகை, பா.359.

105. கலித்தொகை, பா.81:18-19.

106. மேலது., பா.81:7-8.

107. நற்றிணை, பா.370:2.

108. மேலது., பா.184:1-2.

109. ஐங்குறுநூறு, பா.259:1-2.

110. கலித்தொகை, பா.50:14.

111. குறள்.221.

112. மேலது., 231.

113. நாலடியார், பா.94

114. அகநானூறு, பா.53:13-14.

115. மேலது., பா.168:6.

116. குறள்.247.

117. அகநானூறு, பா.335:2-3.

118. மேலது., பா.155:1.

119. மேலது., பா.377:14-15.

120. மேலது., பா.69:5.

121.சு.சதாசிவம், பழந்தமிழர் வாழ்வும் வரலாறும், ப.74.

122. நற்றிணை, பா.214:1-2.

123. மேலது., பா.186:8-9.

124. மேலது., பா.286:7-9.

125. குறுந்தொகை, பா.137:3-4.

126. மேலது., பா.349:5-7.

127. மேலது., பா.143:4-7.

128. மேலது., பா.233.

129. மேலது., பா.59:1.

# இயல் 3

## கலைப் பண்பாட்டு மரபு

### முன்னுரை

கலை என்பது மனிதனின் காட்சிக்கும் கருத்திற்கும் இலக்காகி மனதை ஈர்க்கும் ஆற்றல் உடையது என்று குறிப்பிடலாம். பல ஆண்டுகளாக வாழ்ந்துவந்த மனிதன் பொழுதுபோக்கிற்காகவும், விளையாட்டிற்காகவும், மனச்சுமை உள்ள நேரத்திலும் கைகளை தட்டியும், பொருட்களைத் தட்டியும் இசையை எழுப்பினான். அதுவே நாளடைவில் இசைக்கலை வளர்வதற்கு அடித்தளமாக அமைந்தது. வீட்டை அழகுபடுத்தியபோதே கட்டடக்கலை வளர்ந்ததை அறியமுடிகிறது. இப்படி ஒவ்வொரு கலைகளும் மனிதனின் அன்றாட வாழ்க்கை முறையில் இருந்து உருவாகி வளர்ச்சிபெற்ற நிலையை சங்க அக இலக்கியங்கள் வழியாக பண்பாட்டு மரபினை எடுத்துக் கூறுவதாக இவ்வியல் அமைக்கப்பட்டுள்ளது.

ஆதிகாலத்தில் மனிதன் காடுகளில் விலங்குகளின் இடையே விலங்குகள்போல் வாழ்ந்து வந்தான். பின்பு இயற்கையிடம் இருந்தும் விலங்குகளிடம் இருந்தும் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள இயற்கையாக அமைந்த மலைக்குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்தனர். விலங்குகளை எதிர்க்கவும், உணவைப் பெறுவதற்கும் கற்களைப் பயன்படுத்தினான். கல் அவனது வாழ்க்கையின் முன்னேற்றத்திற்குத் துணையாக அமைந்தது. வேட்டையாடி உண்ட மனிதன் தனது அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தித் தனக்குத் தேவையான உணவுப் பொருளைத் தானே உற்பத்தி செய்தான்.

தான் வசிப்பதற்குத் தேவையான ஆடைகளையும் உண்டாக்கினான். உணவுப் பொருளைச் சேகரிக்கவும் தொடங்கினான். இதனால் மனிதன் ஓய்வு நேரத்தை ஆடியும், பாடியும் இன்பமாகக் கழித்தான். இவை பின்னாளில் இசைக் கலையாகவும், நாட்டியக் கலையாகவும் வளர்ந்தன. தனது எண்ணங்களை ஓவியமாகத் தீட்டினான். தன்னைக் காக்கும் தெய்வங்களைப் போற்ற நினைத்து கோயில்களைக் கட்டினான். இவ்வாறு மனிதனிடம் கலைகள் வளரத் தொடங்கின.

மனிதன் தான் கண்ட எல்லாத் தொழிலிலும் எல்லாத் துறையிலும் நுண்ணுணர்வைச் செலுத்தி அவைகளை அழகு பெறவும், சுவையுறவும், உறுதி பெறவும், இனிமை செறியவும் செய்தான். இவற்றை மனிதன் கலை என்று கூறினான். மக்கள் கண்ட உணவு, உடை, உறையுள் போன்றவைகளில் மட்டுமல்ல மருத்துவம், ஓவியம், நாடகம், நாட்டியம், எழுத்து, மொழி, இசை போன்றவைகளிலும் கலையைப் புகுத்தினான். கலைகள் அந்தந்த நாட்டின் இயற்கை அமைப்பு, தட்பவெப்பநிலை, சுற்றுச்சூழல், மக்களின் பழக்கவழக்கங்கள், சமயக்கொள்கை முதலியவற்றுக்கு ஏற்ப வெவ்வேறு விதமாக உள்ளன. கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, காவியக்கலை ஆகிய ஐந்தும் அழகுக்கலைகள் ஆகும். இவை இன்கலை, கவின்கலை, நற்கலை என்றும் கூறப்படுகின்றன. இவை கண்ணால் கண்டும், காதால் கேட்டும் மனிதன் உணர்ந்து மகிழக் கூடியவை .

**கலை**

மனிதனது உள்ளத்தைத் தன்வயமாக்கி நிரம்பி இவ்வளவோடு நில்லாமல் வெளிப்படும் ஆற்றலே கலை. மனிதன் உணர்ச்சியை எழுப்பி அழகுணர்வையும் இன்பத்தையும் அளிக்கின்ற பண்பு கலைகளுக்கு உண்டு. மனிதன் தன்னுடைய அறிவினாலும் கற்பனையினாலும் கலைகளை அமைத்து

அவற்றின் மூலமாக உணர்ச்சியையும் அழகையும் இன்பத்தையும் கருத்தையும் வெளிப்படுத்துகிறான்.

## கலைத்தோற்றம்

கல்+ஐ = கலை கற்றல் அடியாகப் பிறந்ததே கலையாகும். உழைப்பில் உருவாகி உள்ளத்தை மகிழ்விப்பதும், ஒரு நிலை இன்றி அலையும் மனத்தைக் கலையாமல் நிலைபெறச் செய்வதும் கலையாகும்.

'கல்' என்ற வேர்ச்சொல்லிருந்து தோன்றிய சொற்கள் கல்வி, கற்பு போல்வன. கலை என்பது பன்மையில் செவிநுகர் இசையையும், கண்டுகளிக்கும் காட்சிப் பொருள்களையும் குறிப்பதாகும்.

## கலை பற்றி அறிஞர்களின் விளக்கம்

"கலை கருத்தின் உறைவிடம்; அழகின் பிறப்பிடம்; இன்பத்தின் ஊற்று; கவர்ச்சியின் நிறைவு; மகிழ்ச்சியின் மாட்சி; பண்பாட்டின் கொடுமுடி; நாகரிகத்தின் ஒளிவிளக்கு; மனிதனுடைய எண்ணத்தில் எழுச்சியையும் இதயத்தில் மலர்ச்சியையும் உண்டாக்குவது கலை"[1] என்கிறார் க.த. திருநாவுக்கரசர்.

"மனிதனது உள்ளத்தைத் தன்மயமாக்கி நிரப்பி அவற்றோடு நில்லாமல் வெளிப்படும் ஆற்றலே கலை"[2] என்று மா. இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.

"கலை என்பது மனிதனின் காட்சிக்கும் கருத்திற்கும் இலக்காகி, உள்ளத்தைத் தன்பால் ஈர்க்கும் அமைப்பில் உருவாக்கம் பெருவதாகும்"[3] எனத் தமிழகத்துக் கலைகள் என்னும் நூலில் சி. கோவிந்தராசனார் கூறுகிறார்.

“ஒரு பொருளைத் திறம்பட படைத்துக் காட்டுவதும் ஒரு வினை நிகழ்ச்சியைத் திறம்பட இயற்றிக் காட்டுவதும் கலை”[4] என்கிறார் டாக்டர் பொற்கோ.

“கலை என்னும் சொல்லும் கல்வி என்னும் சொல்லும் பொதுவாக ஒரே பொருளை உணர்த்துகின்றன. கற்றல் என்பது ஒருவன் கற்றுத் தெரிந்து கொள்ளுதல். கலை என்றால் அவ்வாறு கற்றுத் தெரிந்துகொள்வதை ஓர் அழகுணர்ச்சியோடு தெரிந்து கொள்வது”[5] என்று பொருள்கொள்ளலாம் என்கிறார் மா.நன்னன்.

சங்கப் புலவர்கள் ‘கலை’ என்ற சொல்லை ‘ஆண்மான்; மானின் கொம்பு’ என்ற பொருளில் மட்டும் பயன்படுத்தினர் சங்க இலக்கியங்களில் சங்கம் மருவிய காலத்து ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில் தான் ‘கலை’ என்னும் சொல் ‘அழகிய படைப்பு’ என்னும் விரிந்த பொருளைத் தருகிறது. “கலையும் இசைந்துடன் போக”[6] என்கிறது.

## கலையின் வகைகள்

கலைகள் அறுபத்து நான்கு என்று கூறப்படுகிறது. அவை முறையே; 1. ஆடல், 2. பாடல் 3. இசைக்கருவிகள் 4. வீணை 5. தருமவாத்தியம் 6. ஓவியம் 7. கவிதை 8. நிகண்டு, 9. யாப்பு அணி 10. இலக்கணம் 11. நாடகம் ஆடுதல் 12. செய்யுளின் ஓரடியைக் கொண்டு மற்ற அடிகளை நிரப்பி புதிய செய்யுள் செய்தல் 13. போட்டியில் ஒருவர் சொல்லும் செய்யுளின் இறுதி எழுத்தில் வேறொரு செய்யுளைச் சொல்லுதல் 14. புதிர்போல அமைந்த பாக்களைச் செய்தல் 15. எளிதில் ஒலிக்க முடியாத கடினம் அமைந்த பாக்களைப் படித்தல் 16. மறை பொருளாகச் செய்யுளில் பொருள்களை அமைக்கும் புதிர் வகை 17. பிறரை ஏமாற்றுவதற்கான செய்யுள் செய்தல் 18. பல நாட்டு

மொழிகளைக் கற்றல் 19. கீழோர் மொழிகளை அறிதல் 20. நூல்களை அழகாகவும் தெளிவாகவும் படித்தல் 21. முன்பு படிக்காத நூலை ஒரு வருடம் கூடிப் படிக்கும் திறமை 22. மனத்தில் ஒரு செய்யுள் வைத்துக் கொண்டு சில குறிப்புகளை மட்டும் ஒருவர் தர மற்றவர் அச்செய்யுளைச் சொல்லுதல் 23. மனப்பாடம் செய்வதற்குறிய முறைகள் 24. மனையடி சாத்திரம் 25. தச்சுக்கலை 26. பருவங்களின் தட்பவெப்ப நிலைக்கு ஏற்பத் தரையை மாற்றி அமைத்துக் கொள்வது 27. தோட்டக்கலை 28. அரிசி, பூ முதலியவற்றால் ஆன கோலங்கள் 29. பலவகைத் தின்பண்டங்களைத் தயாரிப்பது 30. பலவகைக் குடிநீர்களைத் தயாரிப்பது 31. நூல் நெசவும் தையலும் 32. பிரம்பு பின்னல் 33. பூ வேலைகள் 34. மாலைக் கட்டுதல் 35. தலைக் கொண்டை முடிச்சு அலங்காரங்கள் 36. உடை அலங்காரம் 37. காதணிகள் 38. வாசனைப் பொருள்கள் 39. நகைகள் 40. உடம்பு பிடிப்பது, தலைமயிரைக் கோதி விடுவது 41. உதட்டிற்கு வண்ணம் தீட்டுவது 42. இலைகளில் தன் எண்ணத்தைத் தெரிவிக்கும் ஓவியங்களை வெட்டி அவற்றைக் காதற் செய்தி அனுப்பப் பயன்படுத்துதல் 43-44. ஆண்களும் பெண்களும் சேர்ந்து நீராடும் பொழுது விளையாட்டாக நீரில் மிருதங்கம் போல ஒலிகளைக் கிளப்பும் கலைகள் இரண்டும் 45-47. படுக்கை தயாரிப்பது முதல் இன்புற்றிருப்பதற்கு உதவியான கலைகள் 48. உலோகம் நாணயம் இரத்தினங்கள் இவற்றை மதிப்பிடுவது 49. இந்திர ஜாலம் 50. பொருள்களைக் கையில் மறைப்பது 51. பொருள்களை துணியைக் கொண்டு மறைப்பது 52. உலோகம், மணிகள் இருக்கும் நிலத்தைக் கண்டறிவது 53. மரம் ஏறுதல் 54. மூங்கில் முடைதல் 55. தோல் பதனிடுதல் 56. வீட்டில் கிளி, மைனா முதலியவற்றை பேசப் பழக்குவது 57.சூதாட்டம் 58. சொக்கட்டான் 59. ஆடு, கோழி முதலியவற்றை சண்டையிடச்செய்வது 60.பொம்மைகளைக் கொண்டு குழந்தைகளுக்கு உரிய விளையாட்டுகளைச் செய்து காட்டுவது 61. கயிற்றைக் கொண்டு விளையாடுவது 62. நல்ல நடத்தைக்குரிய பயிற்சிகள்

63. யானை ஏற்றம் குதிரை ஏற்றம் முதலியன 64. படைப் பயிற்சியும், வேட்டைப் பயிற்சியும் போன்றவையாகும்.

மேலும் கலைகளில் ஓவியம், சிற்பம், இசை, இலக்கியம். நாட்டியம், நாடகம் முதலானவற்றை 'நுண்கலைகள் என முன்னோர்கள் வகைப்படுத்தியுள்ளனர். மேலும் கலைகளை நுணுகி காலம் என்னும் அளவில் சேராமல் இருக்கின்ற ஓவியம், சிற்பம் ஆகிய கலைகளை நிலைக்கலைகள்' என்றும் காலம் என்னும் அளவுடைய இசை முதலிய கலைகளை 'இயங்குக் கலைகள்' என்றும் வகைப்படுத்தினர். மேலும் கலைகளை ஏழு பிரிவுகளாகப் பிரித்தனர். அவை முறையே,

1. பயன்கலைகள்
2. மதிநுட்பக் கலைகள்
3. உடற்பயிற்சிக் கலைகள்
4. விளையாட்டுக் கலைகள்
5. பொழுதுபோக்குக் கலைகள்
6. இன்பக் கலைகள்
7. அழகுக் கலைகள்

என்பனவாகும்.

இயற்கையிலும் வாழ்க்கையிலும் உள்ள அழகிய இன்பங்கள் தெளிவாக இல்லாமல் கலந்து உள்ளன. கலந்த நிலையை மாற்றி நமக்குத் தேவையானதையும், பொருந்துவதையும் மட்டும் மனம் நுகரும்படிச் செய்வது கலை ஆகும்.

**கட்டடக்கலை**

கட்டடக்கலை மக்கள் கண்ட கவின்கலைகளில் ஒன்று. இது நன்றான நாகரிகக்கலை, கட்டடக்கலை மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத 'எழிற்கலை' என்று கூறப்படுகிறது. ஆதிகாலத்தில் குகைகளையே தங்கி வாழும் இடமாக மனிதன் பயன்படுத்தினான். பயிர்செய்து வாழத் தொடங்கிய காலத்தில் குடிசைகள் அமைத்து வாழக் கற்றுக்கொண்டான். படிப்படியாக மனிதனிடம் ஏற்பட்ட நாகரிக மாற்றங்கள் அவன் வாழும் குடிசை அமைப்புகளில் மாற்றத்தை ஏற்படுத்தின. மண், சுடுமண், கற்கள், மரங்கள் முதலியவற்றைப் பயன்படுத்திக் கட்டடங்கள் கட்டினான். கட்டடம் மாளிகை, அரண்மனை, கோயில் என்று பலவகையில் வளர்ச்சி பெற்றது.

பழங்காலத்தில் இயற்கை வழிபாடே சிறந்திருந்தது, பின்பு தாய்வழி தெய்வ வழிபாடு தோன்றியது. தாய் இறந்தபின் அவள் புதைக்கப்பட்ட இடத்தில் ஒரு மரத்துண்டையோ, கல்லையோ நட்டு வழிபடத் தொடங்கினான். இதனைத் தொடர்ந்து நில அமைப்பிற்கு ஏற்ப மாயோன், சேயோன், வேந்தன், வருணன் முதலிய தெய்வங்கள் தோன்றின. கட்டடக்கலையின் வளர்ச்சியில் மனிதன் தெய்வங்களுக்கு கோயில் கட்டினான். மண்ணால் சுவர் எழுப்பி மரப்பட்டைகளைப் பொருத்தி ஓலை, புல் முதலியவைகளைக் கொண்டு வேய்ந்த கூரைக் கோயில்களை முதலில் கட்டினான். பின்பு மண்ணைவிட ஓலையைவிட மரம் உறுதியாகவும் இருந்ததால் மரத்தினால் கோயில்கள் கட்டினான். இவையும் இயற்கையின் தாக்கத்திற்கு எளிதில் உட்படுவதால் செங்கல்லாலும். சுண்ணாம்பினாலும் கோயில்கள் கட்டினான். இவையும் சில நூற்றாண்டுகளில் பழுதடைவதால் குடைவரைக் கோயில்களும், கற்கோயில்களும் எழுந்தன.

பல நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் பல்வேறு கலைகள் மக்களிடம் வளர்ச்சிபெற்றன. கலைகள் பற்றிய சான்றுகள் சங்க இலக்கியங்களிலும்

பரவிக்கிடக்கின்றன. ஒவ்வொரு காலக்கட்டத்திலும் கலைகள் வளர்ந்த வரலாற்றை இலக்கியங்கள் பதிவுசெய்துள்ளன. ஓவியம் கலைகளின் தாயாகவும், சிற்பம் அதன் சேயாகவும், தமிழகக்கோயில்கள் சிற்பங்களின் களஞ்சியமாகவும் இருக்கின்றன. கற்களிலும், செம்பிலும் கலைகள் குடியிருக்கின்றன. கோயில்கள் தமிழன் கட்டடக்கலையின் பெருமைக்குச் சான்றாகவும் கலைப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கும் விதமாக உள்ளன.

## கட்டடப்பிரிவுகள்

கலைகளில் ஒன்றாகக் கருதப்படுவது கட்டடக்கலையாகும். இது நீளம், அகலம், பருமன் ஆகிய வடிவங்களில் கட்டப்படுவதாகும். கல், மண், மரம் உலோகத்தாலாக்கப்படுவது கட்டடக்கலையாகும். கட்டடக்கலைக்கு இயம்பும், பயன்பாடு நிலை, போற்றுத்தன்மை, அழகு என்ற மூன்று நிலைகள் உண்டு. மொஹஞ்சதரோ, ஹரப்பா நாகரிகம் திராவிடக் கட்டடக் கலையின் முன்னோடி என ஜான், மார்ஷல், ஈராஸ் பாதிரியார் கூறுகின்றனர். தமிழகத்தில் புதிய கற்கருவிக் காலத்திலேயே மனிதன் வீடுகளைக் கட்ட ஆரம்பித்தான் எனத் தொல்லியல் கூறுகின்றது. கட்டடத்தின் மையப் பகுதியில் ஓரிரு அறைகளைக் கொண்ட சிறுமண்டபம், அதைச் சுற்றி நான்கு புறமும் தாழ்வாரம் போன்ற அமைப்பு, கிழக்கு அல்லது தெற்குப் புறமாக வாயில் அமைந்திருந்த பாங்குடையது தமிழகத்தில் காணப்படும் பழமையான கட்டடக்கலை மரபாகும்.

நாகரம், வேசரம், திராவிடம் என்று மூன்று பிரிவுகளாகக் கட்டடக்கலை பிரிக்கப்பட்டுள்ளது. நாகரம் என்பது வடஇந்தியக் கட்டடக்கலை. இது நர்மதை ஆற்றுக்கு வடக்கே வடஇந்தியாவில் அமைக்கப்பட்டது. அடிமுதல் முடிவரையில் நான்கு பட்டையாக அமைக்கப்படுவது. வேசரம் என்னும் கட்டடவகை பண்டையக் காலத்தில் பெரிதும் பௌத்த மதத்தாரால் வளர்ச்சி அடைந்தது. இது தரை அமைப்பிலும் உடல் அமைப்பிலும் விமான அமைப்பிலும் வட்ட

வடிவமாக அல்லது நீண்ட அரைவட்ட வடிவமாக இருக்கும். திராவிடம் என்பது தென்னிந்திய கோயில் கட்டட அமைப்பு முறையாகும். இக்கட்டட அமைப்பு முறை வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே கன்னியாகுமரி வரையில் காணப்படுகின்றது.

இந்தக் கட்டடப் பிரிவுகளின் நோக்கம் மூன்று பாகமாகப் பார்ப்பதேயாகும். அதாவது இமயத்தொட்டு விந்தியமலை வரை ஒரு பகுதியாகவும், விந்திய மலையிலிருந்து கிருஷ்ணா நதிவரை இன்னொரு பகுதியாகவும் கிருஷ்ணா நதிதொட்டுக் குமரிமுனைவரை மற்றொரு பகுதியாகவும் பிரிப்பதாகும். கட்டடங்கள் மூன்று குணங்களை பெற்றுள்ளது. அவை, சாத்வீகம், ராஜசம், தாம்சம் ஆகும். நகர அமைப்பு கட்டடங்களில் சாத்வீக குணம் சிறப்பாக இருக்கும் விதத்தில் கட்டப்பட்டுள்ளன. வேசார அமைப்பு கட்டடங்கள் தாம்ச குணத்தைப் பிரதிபலிக்கின்றன. திராவிடக் கட்டட அமைப்பில் ராஜச குணம் சிறப்புற்று ஒளிர்கின்றது.

## கட்டடக்கலையின் பயன்

பூமியில் வாழ்கின்ற மனித இனத்தின் வளர்ச்சியையும், தளர்ச்சியையும் சரியாகக் காட்டக்கூடியது கட்டடம் ஆகும்.

ஒரு நாட்டின் வரலாற்றில் அதனுடைய பண்பாடு. வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி, சமயச் சிந்தனை, அழகியல் வளர்ச்சி, சமுதாய நோக்கு, மக்கள் நம்பிக்கை போன்றவற்றை எடுத்துக்காட்டுவதாகக் கட்டடக்கலை திகழ்கிறது. மனித நாகரிக வரலாற்றின் சுவடுகளாகவும் அடையாளங்களாகவும், பண்பாட்டு மரபாகவும் கட்டடக்கலை இருக்கின்றது.

"அழகியல் சார்ந்த வெளிப்பாட்டில் இசையே உன்னதமானது என்பர். அதனால்தான் ஸ்விகல் என்னும் ஜெர்மானிய அறிஞர் கட்டடக்கலையை உறைந்துபோன இசை என்கிறார்."[7]

கிராமத்து வாழ்கையிலும், நகர வாழ்கையிலும் கட்டடங்கள் பெற்ற சிறப்பை இலக்கியங்களும், அகழ்வாய்வுகளும் எடுத்துக்காட்டுகின்றன. தனிமனிதர்களின் வாழ்விற்காகவும், அரசியல் நடவடிக்கைகளுக்காகவும், சமய நம்பிக்கைகளுக்காகவும், கட்டப்பட்டவையே கட்டடங்கள் ஆகும். நிலவியல், பொறியியல், சூழலியல், அழகியல் என்னும் அனைத்தும் சார்ந்த அறிவினையும் உணர்வினையும் காட்டுவனவாகக் கட்டடங்கள் திகழ்கின்றன.

## சங்ககாலத்தில் கட்டடக்கலை

புதிய கற்காலத்திலே தமிழர்கள் வீடுகளைக் கட்ட முயற்சி செய்துள்ளனர் என்பதைத் தொல்லியல் ஆய்வுகள் எடுத்துக்காட்டுகின்றன. பழங்காலத் தமிழர்கள் தங்கள் சில அமைப்பிற்கேற்ப வீடுகளை அமைத்துக் கொண்டனர். குறிஞ்சி நில மக்களின் வீடுகள் பரண் அமைப்புடையாதாகவும், முல்லை நில மக்களின் வீடுகள் மண்ணால் ஆன சிறுகுடில்களாகவும், மருதநில மக்களின் வீடுகள் கட்டுமானக் கட்டடமாகவும், நெய்தல் நில மக்கள் பெருங்காற்றுக்கும், பேரலைக்கு ஈடுகொடுக்கும் வகையில் சிறு வடிவத்தில் தாழ்ந்த ஓலைக் குடிசைகளையும் அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர்.

பல ஊர்கள் சேர்ந்து நாடுகளாக உருப்பெற்ற போது அவற்றை ஆளுகின்ற மன்னர்களும், அரசியல் சார்ந்தவர்களும் வாழ்வதற்கு மிகப்பெரிய குடியிருப்புகளை உருவாக்கினர். பழங்காலக் கோட்டைக் கட்டட அமைப்பை இலக்கியங்களில் காணமுடிகின்றது. சோழரின் தலைநகரான உறையூரிலும் சேரரின் ஒரு பகுதியான கரூரிலும் ஆராய்ச்சியாளர்கள் அகழ்வாய்வு நடத்தி பழைய கோட்டையின் அடித்தளக் கட்டுமானப் பகுதிகளையும் சுரங்க வழிகளையும் கண்டுபிடித்துள்ளனர்.

மரப்பொந்துகளிலும், குகைகளிலும் வாழ்ந்த மனிதன் தான் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்பதை உணர்ந்து கற்களைக் கொண்டு

வீடுகளை அமைத்துக் கொண்டான். அந்த இருப்பிடங்கள் தேரோடும் வீதிகளில் மதில் சூழ்ந்த நீண்ட மாடங்களாக அமைந்திருந்தன. மதில் விண்ணைத் தொடுமளவு உயர்ந்து காணப்பட்டது. இதனை,

***“ஆய்அதை மாடத் தலை நிலா முற்றத்துள்***
***ஆதிக் கொளீஇய அசைவினை யாகுவை”[8]***

என்ற கலித்தொகைப் பாடலடிகள் காட்டுகின்றது. ஒரு நாட்டின் நாகரிகத்தின் அடையாளம் கட்டடக்கலை ஆகும். கட்டடங்களின் அறிவினையும் முயற்சியையும் வெளிப்படுத்தக் கூடியது எனலாம். சங்ககாலத் தமிழர்கள் பெரிய நகரங்களையும், மாட மாளிகைகளையும், கோபுரங்களையும் அதனைச் சுற்றி மதில், அகழி போன்ற பாதுகாப்பான அரண்களையும் அமைத்திருந்தனர். இக்கட்டடக்கலை அகநானூற்றில் சிறப்பு பெற்றிருந்தது எனலாம்.

***“வைகு சுடர் விளக்கும் வான்றோய் வியனகர்”[9]***

என்று பாடலடி விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும்; வானைத் தொடுகின்றளவிற்கு அரண்மனைக் கட்டடங்களைக் கொண்டுள்ள சிறந்த நகர் என்பதை விளக்குகிறது.

பழந்தமிழர்கள் மாடமாளிகைகள், கூட கோபுரங்கள் கொண்ட நகரங்களை அமைத்துப் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர் என்பதை,

***“மாடம் ஓங்கிய மணல் மலி மறுகின்”[10]***

என்ற பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. வானத்துடன் போர் செய்கின்றதுபோல் உயர்த்துகின்ற கூரையற்ற மாடிக் கட்டிடங்கள் அமைக்கப்பட்டுள்ளன என்பதை,

***"விண்பொர நிவந்த வேயா மாடத்து"[11]***

என்ற சங்கப்பாடல் விளக்குகிறது.

பத்துப்பாட்டில் ஒன்றான நெடுநல்வாடையும்,

***"விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்***
***இருகோற் குறிநிலை வழுக்காத குடக்கேர்***
***பொருதிறஞ் வாரா அரைநாள் அமைத்து***
***நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்***
***தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்***
***பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து***
***ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பிற்***
***பருவிரும்பு பிணித்துச் செல்வரக் குரீஇத்***
***துணைமான் கதவம் பொருத்தி இணைமாண்டு***
***நாளொடு பெரிய கோளமை விழுமரத்துப்***
***போதவிழ் குவளைப் புதுப்பிடி காலமைத்துத்***
***தாளொடு குயின்ற போராமை புணர்ப்பிற்***
***கைவல் கம்மியன் முடுக்கலிற் புரைதிர்ந்து***
***ஐயவியப்பிய நெய்யணி நெடுநிலை"[12]***

என்று வரும் பகுதி கட்டடக்கலை பற்றிய நூல்களைப் படித்த வல்லுநர்கள், நுட்பமாக நூல்பிடித்துப் பார்த்து, திசைகளைத் தெரிந்து திசைக்குரிய தெய்வங்களையும் கருத்தில்கொண்டு மன்னனுக்குரிய மனை வகுத்தனர் என்பதை விளக்குகிறது, இதன்மூலம் மனை வகுப்பதற்கு நெறிமுறைகளை உருவாக்கி உயர்ந்த நிலையில் இருந்த தமிழர்களின் பண்பாட்டு மரபினைக் காணமுடிகின்றது. அதுமட்டுமல்லாமல் ஆணிகளையும், இரும்புகளையும் பயன்படுத்திச் சாதிலிங்கங்களைச் செய்ததையும் கூறுகின்றது.

சங்ககாலத்தில் அரசனையும் இறைவனையும் வேறுபாடு இல்லாமல் பார்ப்பதைப் பண்பாட்டு மரபாகக் கொண்டிருந்தார்கள். இதனால் அரசனின்

அரண்மனைபோல இறைவனின் கோவிலும் கட்டப்பட்டன. காவிரிப் பூம்பட்டினத்தில் பல்வேறு இறைவனுக்குச் செங்கற்களால் எழுப்பப்பட்ட கோயில்கள் பல இருந்தன. அவற்றைக் 'கோட்டம்' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. சங்ககாலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் உருவான அரண்மனை, கோட்டம் முதலியவற்றைக் கொண்டு அவற்றை அழகாக வடிவமைக்கும் கொல்லர்கள், கல்தச்சர்கள் அக்காலத்தில் இருந்தனர் என்பதை மணிமேகலை,

***"மகத வினைஞரு மராட்டக் கம்மரும்***
***அவந்திக் கொல்லரும் யவனத் தச்சரும்***
***தண்டமிழ் வினைஞர் தம்மொரு கூடிக்***
***கொண்டினிது இயற்றிய கண்கவர் செய்வினைப்***
***பவழத் திரள்காற் பன்பணிப் போதிகைத்***
***தவள நித்திலத் தாமந் தாழ்ந்த***
***கோணச் சந்தி மாண்வினை விதானத்துத்***
***தமனியம் வேய்ந்த வகைபெறு வனப்பிற்***
***பைஞ்சேறு மெழுகாப் பசும்பொன் மண்டபம்"[13]***

எனக் குறிப்பிடுகின்றது.

## கோவிலின் வகைகள்

விமானங்களின் அமைப்பைக் கொண்டும் கூரையின் அமைப்பைக் கொண்டும் கோவிலின் வகைகள் கூறப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசு தனது திருத்தாண்டகத்தில் பெருங்கோவில், சுரக்கோவில், கொடிக்கோவில், இளங்கோவில், மணிக்கோவில், ஞாழற்கோவில், ஆலயக்கோவில் என்று ஏழு விதமான கோவில்களைக் கூறுகிறார். தமிழகத்தில் திருநாவுக்கரசர் கண்ட ஏழு விதமான கோவில்களும் இன்னும் பல மாடக் கோவில்களும் எங்கும் காணப்படுகின்றன.

## பல்வர்காலக் கோவில்கள்

சங்ககாலக் கோவில்கள் செங்கல், சுண்ணாம்பு, மரம் ஆகிய பொருள்களால் கட்டப்பட்டன. அதனால் விரைவில் சிதைந்துபோனது. இந்த நிலையை மாற்றி எப்பொழுதும் நிலைபெற்றிருக்கும்படி பாறையில் கோயில்களைக் குடைவித்தான். பல்லவர் காலக் கோயில்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்:

1. குடைவரைக் கோாயில்கள் அல்லது குடைவித்த கோவில்கள்
2. ஒற்றைக் கற்கோவில்கள் அல்லது செதுக்குவித்த கோவில்கள்
3. கட்டிடக் கோவில்கள் அல்லது செதுக்குவித்த கோவில்கள்

மகேந்திரன் காலத்தில் மாமண்டூர், மண்டகப்பட்டு, தளவானூர், குறங்குரை, முட்டம், பல்லாவரம், வல்லம், திருச்சி முதலிய இடங்களில் குடைவரைக் கோவில் அமைக்கப்பட்டன. பல்லவர்கள் அமைத்த ஒற்றைக் கற்றளிகள் மிகச் சிறப்பு வாய்ந்தன. ஒரு முழுப் பாறையை மேலிருந்து கீழாகச் செதுக்கி வடிவமைக்கப்பட்டவை. இந்த வகையில் அமைந்த பல்லவர் காலக் கற்றளிகள் மாமல்லபுரத்தில் மட்டுமே காணப்டுகின்றது.

## பாண்டியர் கட்டடக்கலை

கட்டடக்கலைகளில் ஒன்றான குடைவரைக் கோயிலைப் பல்லவர்களுக்கு முன்னரே பாண்டியர்கள் அமைத்தனர். அவற்றுள் திருப்பரங்குன்றம், திருமலைப்புரம், குன்றக்குடி, திருமயம் போன்ற ஊர்களில் குடைவரைக் கோயில்கள் சிறந்து விளங்குகின்றன. பாண்டியர்கள் காலத்தில் கட்டப்பட்ட சைவ, வைணவக் கோயில்கள் தென்தமிழ் நாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றன. அகன்ற கருவறையின்மீது மிகுந்த உயரமற்ற விமானங்களைக் கொண்டு இக்கோவில்கள் காட்சியளிக்கின்றன.

## சோழர்காலக் கட்டடக்கலை

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் கட்டடக்கலை மாற்றம் பெற்றுக்கொண்டு வந்தன. சோழர்காலத்தில் செங்கற்களில் உள்ள கோவில்கள் கற்கோவில்களாக மாற்றம் பெற்றன. சோழர்காலக் கட்டிடக்கலையின் சிறப்பைத் தஞ்சை பெருவுடையார் கோவிலும், கங்கை கொண்ட சோழபுரத்திலும் காணமுடிகிறது. இந்த இரண்டு கோவிலுக்குப் பிறகு பல கோவில்கள் கட்டப்பட்டன என்றாலும் இரண்டாம் இராசராசன் காலத்துத் தாராசுரம் ஐராவதேசுவரர் கோவிலும், மூன்றாம் குலோத்துங்கன் காலத்துத் திரிபுவனக் கோவிலும் குறிப்பிடத்தக்கன.

## பிற்காலப் பாண்டியர் கட்டடக்கலை

சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கு பின் பாண்டியர்கள் ஏறக்குறைய 250 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர். பிற்காலச் சோழர்காலத்தில் இருந்த செங்கற்களால் கட்டப்பட்ட கோவில்களைக் கற்றளிகளாக மாற்றுதல், புதிய கோவில்களைக் கற்றளிகளாக மாற்றுதல், புதிய கோவில்களை உருவாக்குதல் எனும் இரு நிலைகளில் கட்டடக்கலை வளர்ச்சி பெற்றன. பத்தமடையில் உள்ள காரியமாணிக்கப் பெருமாள்கோவில், விஸ்வநாதர் கோவில், இடைக்காட்டில் உள்ள கரிய மாணிக்கப் பெருதிருவந்தீஸ்வர நயினார் கோவில், அருப்புக்கோட்டை சுந்தரேசுவரர் கோவில், திருப்பத்தூர் திருத்தலீஸ்வரர் கோவில், ஊர்க்காடு கோடியப்பர் கோவில் ஆகியன பாண்டியர் காலத்துக் கட்டடக்கலைக்குச் சான்றாகும்.

## வாயில் கோபுரங்கள்

கட்டடக்கலைக்குச் சிறப்பாக அமைவது வாயில் கோபுரங்கள் ஆகும். சோழப் பேரரசின் பிற்காலத்திலேயே கோவில்களின் நான்கு புறங்களிலும் உள்ள நுழைவாயில்களின்மீது எழுநிலை மாடங்களைக் கொண்ட கோபுரங்கள்

எழுப்புவது என்ற வழக்கம் உருவானது.கோபுரம் அமைக்கும் வழக்கம் பிற்காலப் பாண்டியர்கள் ஆட்சியின்போது சிறப்புப் பெற்றது. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இடையில் சிதம்பரத்தில் கட்டப்பட்ட கிழக்குக் கோபுரமும், ஜம்புகேசுவரத்தில் கட்டப்பட்ட சுந்திரபாண்டியன் கோபுரமும் பாண்டியர்காலக் கோபுரங்களுக்கு எடுத்துக்காட்டாகும்.

## விஜயநகர நாயக்கர்காலக் கட்டடம்

இந்துக்களின் ஆட்சி முடிந்த பிறகு மொகலாயர்களின் ஆட்சியின்போது இந்துமதம் சிதையத் தொடங்கின. அதனைக் காப்பாற்றியது விஜயநகர பேரரசு ஆகும். விஜயநகர காலத்தில்தான் பழைய கோவில்கள் புதுப்பிக்கப்பட்டன. பல புதிய கோவில்களும், புதிய மண்டபங்களும், காட்சி மாடங்களும், துணைக் கோவில்களும் கட்டப்பட்டன. விஜயநகர கோவில்களில் எல்லாவற்றிலும் இறைவிக்கு என்று ஒரு தனிக் கருவறை கட்டுவது நடைமுறையில் இருந்தது. “விஜயநகரக் கட்டடக் கலையின் இன்னொரு சிறப்பம்சம் ஆயிரங்கால் மண்டபம் என்கிறார் நீலகண்ட சாஸ்திரி.’’[14]

விஜயநகர மன்னர்களின் பிரதிநிதிகளாக வந்த நாயக்க மன்னர்களும் உயர்ந்த கோபுரங்களை எழுப்பியுள்ளனர். திருமலை மன்னன் மதுரையில் திருப்பணி செய்வதை ‘திருப்பணி மாலை’ மிக அழகாகச் சித்தரிக்கிறது. இதனை,

***“உரக்க வெகு ரொக்கங் குடுத்துப் படங்கு***
***தூணுத்திர முதற் பழங்கல்***
***ஒடிந்தன பிடுங்கி நலமாயனத்துக் காரை***
***யோடு சிரணமகற்றி***
***அரைத்த சுண்ணாம்பை வெல்லச்சாறு விட்டுநன்***
***றாய்க் குழைத்து செங்கலும்***

*அடுக்காப் பரப்பிக் கடுக்காயோ டாமலக*

*மரிய தான் றிக்காயுமுந்*

*தொருக் காலிடித்து நன்னீரினி*

*லூறிய கடுஞ்சாறும் விட்*

*டுழி காலங்களினு மிசையாத வச்சிரக்*

*காரையிட் டோங்குமம்மை*

*சிரக்காலம் வாழவே மீனாட்சி கோலுஞ்*

*செப்பமிடு வித்து நன்றாய்ச்*

*செய்வித்த புண்ணியஞ் சதகோடி புண்ணியஞ்*

*திருமலை மதிபனுக்கே"*[15]

என்ற பாடலடிகள் உணர்த்துகிறது. இந்தியாவின் முக்கியமான பணிகளாகக் கருதப்படுகின்ற நாகரம், வேசரம், திராவிடம் எனும் மூன்றில் திராவிடக் கட்டடக்கலையே தமிழகத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றுக் கலைப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கிறது.

## ஓவியக்கலை

நாடோடியாக வாழ்ந்த மனிதன் பின்னர் தனக்கென ஒரு இடத்தில் வாழ ஆரம்பித்தான். அவை குகைகளாக இருந்தன. குகைகளில் வாழ்ந்த காலந்தொடங்கி ஓவிய ஈடுபாடு மனிதனுக்கு இருந்திருக்கின்றது என்பதைச் சான்றுகள் உணர்த்துகின்றன. பறவைகள், விலங்குகள், மரங்கள், மனிதர்கள் எனத் தான் கண்டவற்றையும் வேட்டை, சடங்கு எனத் தான் செய்தவற்றையும் அவன் தீட்டி மகிழ்ந்ததை உலகம் எங்கும் கிடைக்கின்ற பாறை ஓவியங்கள் எனப்படும் 'குகை ஓவியங்கள்' சான்றுகளாக உள்ளன.

கிராமம், நகரம் என வாழ்வியல் வளர்ந்தபோது அழகுணர்ச்சியும் மேம்பட்டுத் தான் பயன்படுத்துகின்ற பொருள்களிலும் ஓவியம் வரைந்து

வாழ்க்கையை அழகுபடுத்திக்கொண்டதைச் சிந்து, சுமேரியா, எகிப்து முதலான இடங்களிலிருந்து கிடைக்கப்பெற்ற தொல்பொருள்கள் காட்டுகின்றன. தமிழகத்திலும் பழங்காலம் முதல் இடைவிடாமல் ஓவியக்கலை வளர்ந்து வந்துள்ளது.

## பழங்கால ஓவியங்கள்

பழங்கால மனிதர் வாழ்ந்த இயற்கைக் குகைகளில் வேட்டைக் காட்சிகளும், மண்பாண்டங்களின்மேல் உள்ள பல எழுத்து உருவங்களும் கொண்டு பழங்கால மக்களின் ஓவியத் திறனை அறியமுடிகிறது.

## சங்ககால ஓவியக்கலை

தொல்காப்பியர் காலத்தில் நடுகல் வணக்கம் இருந்தது. அக்கல்லில் இறந்த வீரனது உருவம் செதுக்கப்படும். கல்லில் உருவம் செதுக்கப்படுவதற்கு முன்பு சிற்பி அவ்வுருவத்தை ஓவியமாக வரைந்திருக்க வேண்டும். இவற்றின் மூலம் சிற்பக்கலைக்கு முந்தைய தொன்மை வாய்ந்தது ஓவியக்கலை என்று அறிய முடிகிறது.

ஓவியம், ஓவம், வினைஞர் வட்டிகைச் செய்தி, புனையா ஓவியம், எழுதுநிலை மண்டபம், சித்திரக்கூடம், சித்திர மாடம், ஓவியமாக்கள், துகிலிகை போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

***"ஓவியச் செந்நூ லுரை நூற் கிடக்கையும்"[16]***

என்ற சிலப்பதிகாரப் பாடல் மூலம் ஓவியக்கலை பற்றிய சிறந்த நூல் ஒன்று சங்ககாலத்தில் இருப்பதை அறியமுடிகிறது.

***"ஓவத்தன்ன இடனுடை வனப்பு"[17]***
***"ஓவத்தன்ன உருகெழு நெடுநகர்"[18]***

என்னும் சங்கப்பாடலில் புலவர்கள் அழகாகப் புனைந்து செய்யப்பட்டுள்ள பொருட்களை, வீடுகளை, ஓவியமாக கண்டனர் என்பதை விளக்குகிறது. இவ்ஓவியங்கள் தமிழரின் கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

நச்சினார்க்கினியர் தம் உரையில் ஓவியருக்கு 'நோக்கினார்' கண்ணிடத்தே தம் தொழில் நிறுத்துவோர் என இலக்கணம் வகுத்துள்ளார். மணிமேகலையும் அழகிய பூங்கா ஒன்றை ஓவியமாகக் காணுகிறது :

***"வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்***
***சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுபோல்***
***ஒப்பத் தோன்றிய உவவனம்"[19]***

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

நெடுநல்வாடை என்னும் சங்க இலக்கியத்தில் மன்னின் அந்தப்புரத்துச் சுவரில் பல வகைப்பூக்ககளும் ஒரு கொடியைச் சுற்றி இருப்பது போன்ற காட்சி ஓவியமாகத் தீட்டப்பட்டு இருப்பது கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது. இதனை,

***"வரைகண் டன்ன தோன்றல வரைசேர்பு***
***வில்கிடந் தன்ன கொடிய பல்வயின்***
***வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ***
***மணிகண் டன்ன மாத்திரள் திண்காழ்ச்***
***செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்***
***உருவப் பல்பூ ஒருகொடி வளைஇக்***
***கருவொடு பெயரிய காண்பி னல்லில்"[20]***

என்ற பாடலடிகள் படம்பிடிக்கின்றன.

பாண்டிய நெடுஞ்செழியனது தேவி படுத்திருந்த கட்டிலின் மேற்கூரையில் பலவகை ஓவியங்கள் தீட்டப்பெற்றிருந்ததை நெடுநல்வாடை என்னும் நூலின் வழியாக அறியமுடிகிறது.

மதுரையை அடுத்த திருப்பரங்குன்றத்தில் முருகனின் கோவிலில் புராண இதிகாசக்கதைகள் பல ஓவியங்களாகத் தீட்டப்பட்டிருப்பதைப் பரிபாடல் கூறுகிறது.

செல்வர் வாழும் வளமனைச் சுவர்கள் மீதும் மாடங்கள் மீதும் தேவர் முதல் எல்லா உயிர்களையும் தீட்டியிருப்பதாக மணிமேகலை கூறுகின்றது,

காதலன் தான் விரும்பிய பெண்ணை மணக்க முடியாத நிலையில் ஒரு துணியில் அவள் உருவத்தை ஓவியமாக வரைந்து கொண்டு மடல் ஏறும்வழக்கம் இருந்ததை அகப்பொருள் நூல்கள் கூறுகின்றன. இவை கலைப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கின்றன.

## பல்லவகால ஓவியங்கள்

பல்லவர்கள் கட்டிய கோவில்களில் அனைத்திலும் ஓவியங்கள் தீட்டப்பட்டுயிருந்தன என்பதை அங்குக் காணப்படும் ஓவியத் துணுக்குகள் எடுத்துக்காட்டுகின்றன. பல்லவர்கால ஓவியங்களில் கடைசியாக இருப்பவை காஞ்சி கைலாசநாதர் கோவிலும், பனைமலை தாளகிரிசுவர் கோவிலும் ஆகும். வண்ணங்களால் மட்டும் கலவையால் மெல்லியக் கோடுகளைக் கொண்டுத் தீட்டப்பட்ட ஓவியங்கள் பல்லவர்காலத்து ஓவியக்கலையின் சிறப்பினை உணர்த்துகிறது. கட்டிடம், சிற்பம் போன்று ஓவியக்கலைக்கும் உயிர்கொடுத்தவன் பல்லவ அரசன் மகேந்திரவர்மன் ஆகும். இதனால் சித்திரகாரப்புலி என சிறப்புப்பெயர் பெற்றான். திருச்சிராப்பள்ளி குகைக்கோயில், பல்லாவரம் குகைக்கோயில், காஞ்சி ஏகாம்பரேச்சுரர் கோயில், பௌர்ணமி மண்டபம் முதலியன மகேந்திரவர்மனின் சித்திரக்கலையை விளக்கும் சான்றாகும்.

### பாண்டியர்கால ஓவியங்கள்

பல்லவ மன்னர்களை அடுத்துவந்த பாண்டியர்களின் ஓவியங்கள் திருமலைப்புரம் போன்ற இடங்களில் காணப்படுகின்றன. புதுக்கோட்டைக்கு அருகில் உள்ள சித்தன்னவாசல் என்னும் ஊரில் பல ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. அவனிபசேகர ஸ்ரீவல்லபன் என்ற பாண்டிய மன்னன் சித்தன்னவாசல் குகையைப் புதுப்பித்தான். இச்செய்தி தமிழரின் கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது. இதனைக் கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளதை பாடல் ஒன்று விளக்குகிறது:

***"திருந்திய பெரும்புகழ் தேவ தரிசனத்து***
***அருத்தவ முனிவனைப் பொருட்செல்வன்***
***அறன்கிளர் நிலைமை இளம்கௌதமன் எனும்***
***வளங்கெழு திருநகர் மதுரை ஆசிரியர்***
***அவனிப சேகர சீர்கெழு செங்கோல்"***[21]

உலகமே வியக்கும் ஓவியங்களை இங்கு காணலாம்.

சித்தன்னவாசலில் குடையப்பட்ட முன்மண்டபத்தில் நான்கு தூண்கள் உள்ளன. நடுத்தூண்கள் இரண்டில் நடனமங்கை இருவரின் உருவங்கள் வரையப்பட்டுள்ளன.

வலப்புறத்தூணின் உட்பகுதியில் அரசன் அரசியர் தலைகள் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. மணிகள் பதிக்கப்பெற்ற சிறந்த வேலைப்பாடு கொண்ட மகுடம் அரசன் முடிவேல் காட்சி அளிக்கிறது. மேற்கூரையில் பெரிய ஓவியம் உள்ளது. அவை தாமரை குளத்தைக் குறிக்கிறது. அதில் தாமரை இலைகள், மலர்கள், அரும்புகள் போன்றவை ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன. சமணப் பெரியோர் சிலர் தாமரை மலர்களைப் பறிக்கின்றனர். குளத்தில் எருமைகளும், மான்களும் காணப்படுகின்றன. இக்கோயில் சமணக் கோயில்

என்பதால் பல தீர்த்தங்காரர் சிலைகளும் உள்ளன. சித்தன்னவாசல் ஓவியம், சிற்பம், நடனம் என முக்கலையும் சிறப்பிக்கும் கூடமாக உள்ளது.

## சோழர்கால ஓவியம்

சோழர்கால ஓவியங்களுள் சிறந்ததாகக் கருதப்படுபவை தஞ்சை பெரிய கோயிலில் வரையப்பட்டுள்ள ஓவியம் ஆகும். தஞ்சை பெரிய கோயில் கருவறையின் புறச்சுவர்கள் மீது வரையப்பட்டுள்ளன. சுந்தரர் சிவபெருமானால் தடுத்தாட் கொள்ளப்பட்ட வரலாறு, கயிலைக்காட்சி, சோழர்கால நாட்டிய மகளிர் குறித்த ஓவியங்கள் போன்றவை தீட்டப்பட்டுள்ளன. இவ்ஓவியங்கள் அனைத்தும் தமிழரின் கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றன.

## விஜயநகரகால ஓவியம்

தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களில் விஜயநகரகால ஓவியங்கள் உள்ளன. காஞ்சி, காளத்தி, குடந்தை, திருவரங்கம், திருப்பதி, திருவண்ணாமலை, ஓமலூர் போன்ற இடங்களில் விஜயநகர ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளது.

திருவரங்க கோவில் வேணுகோபாலர் சந்நதி முகமண்டப மேல் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளது. இங்கு குழலூதும் வேணுகோபாலனையும், அவரைச் சூழ்ந்த பசுக்கள் கூட்டமும் சிறப்பாகத் தீட்டப்பட்டுள்ளன.

காஞ்சி வரதராசப் பெருமாள் கோயில்கள்மேல் திருச்சுவற்றில் உள்ள கண்ணனுடைய திருவிளையாடல்கள் ஓவியம் சிறப்பான முறையில் தீட்டப்பட்டுள்ளன. இனிமேல் ரதிதேவி அமர்ந்துள்ள காட்சி, ரதியும் மன்மதனும் உள்ள காட்சி போன்றவை விஜயநகரகால ஓவியத்திற்கு சிறந்த சான்றாகும்.

## நாயக்கர்கால ஓவியங்கள்

விஜயநகர மன்னர்களைப் பின்பற்றி நாயக்கர்கள் பல இடங்களில் தங்கள் ஓவியக்கலையை வளர்த்துள்ளனர். மதுரை, தில்லை, திருவெள்ளறை, திருக்குற்றாலம், திருவலம்புரி, குடந்தை, திருவரங்கம், செங்கம், பட்டீஸ்வரம் முதலிய இடங்களில் நாயக்கர்கால ஓவியங்கள் காணப்படுகின்றது. மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தில் ஊஞ்சல் மணட்பத்தில் எதிரில் உள்ள சிறு மண்டபத்தின்மேல் அங்கயற்கண்ணி அம்மையைச் சுந்தரேசப்பெருமாள் மணந்துகொள்ளும் காட்சி மிக அழகாக தீட்டப்பட்டுள்ளது. எனவே ஓவியங்கள் தமிழரின் கலைப் பண்பாட்டு மரபினை பறைசாற்றும் விதமாக உள்ளன.

## இசைக்கலை

இசை என்றால் உள்ளத்தோடு பொருந்துதல் எனப் பொருள்படும் இசை இனிமையான ஒலிகளின் சேர்க்கையாகும். இது உயிர்களின் உள்ளத்தை உருக்கும் தன்மை கொண்டது; இனிமை மிக்கது. இது மக்களுக்கு மகிழ்ச்சியூட்டும்தன்மைவிலங்குகளிடம்இருந்துபாதுகாக்கவும்,உணவிற்காகவும் விலங்குகளைக் கொல்லவும், பறவைகளை வீழ்த்தவும், காய்கனிகளை உயர்ந்த மரத்திலிருந்து வீழ்த்தவும் கவண் கல்லைப் பயன்படுத்தினான். இவற்றிலிருந்து எழுந்த ஓசையே இசையும், இசைக்கருவியும் தோன்றக்காரணம். வில்லில் இருந்து யாழ் எழுந்தது. ஒலியிலிருந்து பறை தோன்றியது.

ஓய்வு நேரங்களில் இசைக்கப்பட்ட இவை நில அமைப்பிற்கும் சமூக வளர்ச்சிக்கும் ஏற்ப கடினமான தொழில் செய்யும் பொழுதும், வெற்றி கொண்டாட்டத்தின் பொழுதும், ஓய்ந்திருக்கும் பொழுதும், தெய்வ வழிபாட்டின் போதும் இசைக்கப்பட்டன. ஆரம்பத்தில் இசைக்கருவி என்பது எல்லாவற்றிற்கும் பெயராக இருந்தது. பின்னர் யாழ், பறை வெவ்வேறு துறைகளுக்கு உரியவனவாக பிரிக்கப்பட்டன. பறை உழைப்புத் துறைக்கும், யாழ் இன்பத்துறைக்கு உரியதாக

கருதப்பெற்றது. இன்பத்துறைக்கு உரியது நாளடைவில் கலையாக போற்றி வளர்க்கப்பட்டது.

இசைக்கலை என்பது மிகவும் தொன்மையானது. சங்க காலத்திற்கு முற்பட்ட திணை வாழ்க்கைக் காலத்திலேயே ஒவ்வொரு நிலத்திற்கு பண் வகைகளும், இசைக்கருவிகளும் தோன்றின. பாணர்கள் பல்வகையான இசைக்கருவிகளை இசைத்து இசை வளர்த்தன.

***"அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்***
***உளவென மொழிப இசையோடு சிவணிய***
***நரம்பின் மறைய என்மனார் புலவர்"[22]***

என்னும் தொல்காப்பிய நூற்பா இசைத் தமிழின் பழைமையைக் காட்டுகிறது. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நான்கு வகைப் பாக்களும் அவற்றின் இனங்களும் இசையை அடிப்படையாகக் கொண்டவை.

## சங்க இலக்கியத்தில் இசை

சங்க இலக்கியங்களில் இசைக்கருவிகள், பண்புகள், இசைவாணர்கள் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. முழவு, ஆகுளி, பாண்டில், கோடு, தூம்பு, குழல், தட்டை, எல்லரி, பதலை முதலிய கருவிகள் இருந்தன என்பதை மலைபடுகடாம் என்னும் நூல் கூறுகிறது. மேலே கூறிய இக்கருவிகளை தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என வகைப் பிரித்துள்ளனர்.

குழல், கோடு, தூம்பு இம்மூன்றும் துளைக்கருவி, முழவு, முரசு, பதலை, துடி போன்றவை தோற்கருவிகள், யாழ், நரம்புக்கருவி, பாண்டில் என்பது கஞ்சக்கருவி ஆகும். சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார் பேரிகை, படகம், இடர்க்கை, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை,

தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண் விடுதூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, விரலேறு, பாகம், உபாங்கம், துடி, பெரும்பறை ஆகிய தோற்கருவிகளைக் கூறுகின்றார். இறையனார் களவியலுரைகாரர் முதுநாரை, முதுகுருகு என்னும் இசை நூல்கள் இருந்ததாகக் கூறுகின்றார்.

## தமிழ்ப்பண்கள்

ஏழு வகையான தமிழ்ப்பண்கள் உண்டு அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் போன்றவை ஆகும். ஐவகை நிலங்களுக்கு உரிய பண்புகளாக குறிஞ்சிப்பண், முல்லைப்பண், மருதப்பண், நெய்தற்பண், பாலைப்பண் என ஐவகைப் பண்கள் விளங்குகின்றன. இவற்றில் காலைப் பண்கள், இரவுப் பண்கள், காலை மாலைப் பண்கள் எனப் பொழுதிற்கு ஏற்றதுபோல் அடைந்த பண்களையும் இலக்கியத்தில் காணலாம்.

## சங்ககால இசைக்கருவிகள்

சங்ககால மக்களின் வாழ்வில் இசையும் கூத்தும் பின்னிப் பிணைந்து ஒன்றாக அமைந்திருந்தன. இதற்குச் சான்றாகத் தொல்காப்பியம் திகழ்கின்றது. இசையையும் கூத்தையும் துணையாகக் கொண்டு பாணர்கள் வாழ்க்கை நடத்தினர் என்ற கருத்தை

> ***"கூத்தரும், பாணரும் பொருநரும் விறலியும்***
> ***ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்***
> ***பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்***
> ***சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"[23]***

என்று தொல்காப்பியம் சுட்டுகின்றது. சங்க இலக்கியத்தில் இசைக்கருவிகள் பற்றியச் செய்திகளும், இசையை வளர்த்த பாணர்கள் பற்றியச் செய்திகளும் ஏராளமாகக் காணப்படுகின்றன.

சங்ககாலத்தில் ஏராளமான இசைக்கருவிகள் மக்களின் பயன்பாட்டில் இருந்தன. தொல்காப்பியர் கருப்பொருளைப் பற்றிக் கூறும்போது யாழினையும் பறையினையும் குறிப்பிடுகின்றார். மேலும் யாழினைப் பற்றி தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில்,

***"அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்***
***உளவென மொழிப இசையொடு சிவணிய***
***யாழின் மறைய என்மனார் புலவர்"[24]***

என்று குறிப்பிடுகிறார்.

## சங்ககால இசைப்பண்கள்

சங்ககால மக்களால் குறிஞ்சிப்பண், மருதப்பண், பாலைப்பண், காஞ்சிப்பண், செவ்வழிப்பண், பஞ்சுரப்பண், விளரிப்பண் என்ற பல பண்கள் இசைக்கப்பட்டன. குறிஞ்சி நிலத்திற்குரியப் பண் குறிஞ்சிப்பண், அதனை முருகனுக்கு வெறியாட்டு நிகழும்போது இசைத்தனர் என்ற செய்தியை திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. இசையானது மக்களின் வாழ்வியலோடு இணைந்து ஒன்றாக இருந்ததால் மலைச்சாரலில் உள்ள தினைப்புனத்தில் குறிஞ்சிப் பெண் ஒருத்தி குறிஞ்சிப்பண் பாடும்போது அதனைக் கேட்ட யானை தினையையும் உண்ணவில்லை; நின்ற இடத்தை விட்டு நகரவும் இல்லை. ஒருவித மயக்கத்தில் உறங்கிய நிலையில் நிற்கின்றது. இந்நிலையில் கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

இச்செய்தியினை,

***"ஒலியியல் வார்மயிர் ஊரினள் கொடிச்சி***
***பெருவரை மருங்கில் குறிஞ்சி பாடக்***
***குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது***
***படாஅப் பைங்கண் பாடுபெற்று ஒய்யென***
***மறம் புகல் மழகளிறு உறங்கும்"[25]***

என்று அகநானூற்றுப் பாடல் படம்பிடித்துக் காட்டுகின்றது.

பாலைப்பண் மிக இனிமையான பண்; அதனைக் கேட்கும் தீயவரும் கூட நல்லவராக மனமாற்றம் அடைவர். அத்தகைய சக்தி அப்பண்ணிற்கு உண்டு. இதனை,

***"ஆறலை கள்வர் படைவிட அருளின்***
***மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை"[26]***

என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது. ஆறலைக் கள்வர்கள் பொருள் பறிக்கச் சென்றபொழுது வழிப்போக்கர்கள் பாடிய பாலைப் பண்ணைக் கேட்டு மனமாற்றம் அடைந்து தங்களின் கொடுந்தொழிலைக் கைவிட்டனர் என்பது இதன் பொருளாகும்.

மருதப்பண்ணை விடியற்காலைப் பொழுதில் பாடினர். விறலியர் இப்பண்ணைச் சீறியாழில் இசைத்துப் பாடினார் என்ற கருத்தினை மலைபடுகடாம் எடுத்துக் கூறுகிறது.

காஞ்சிப்பண் உடலில் ஏற்பட்ட நோயின் வருத்தம் தீரச் சங்ககால மக்களால் பாடப்பட்டது என்ற கருத்தினைப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

செவ்வழிப்பண் முல்லைக்கும், நெய்தலுக்கும் உரிய மாலை நேரப்பண் ஆகும். இப்பண்ணைக் கேட்டுத் தலைவனைப் பிரிந்து தனித்திருந்த தலைவி வருந்தினாள் என்ற செய்தியினைப்

***"பையுள் நல்யாழ் செவ்வழி வகுப்ப***
***ஆருயிர் அணங்கும் தெள்ளிசை***
***மாரி மாலையும் தமியள் கேட்டே"[27]***

என்ற அகநானூற்றுப் பாடல் விளங்குகின்றது.

குறிஞ்சி நில மகளிர் வேங்கை மலர் பறிக்கும்போது பஞ்சுரப் பண்ணைப் பாடினார்; அப்போது அதனைக் கேட்ட வழிப்போக்கர்கள் அஞ்சினர் என்ற நிகழ்வினை ஐங்குறுநூற்றுப்பாடல் கூறுகின்றது.

சங்ககால மக்கள் பண்பாட்டு மரபினை மேம்படுத்தும்வகையில் வாழ்வின் இன்ப நிலையிலும், துன்ப நிலையிலும் இசைப்பண்களைப் பாடி மன இன்பத்தையும், மனஅமைதியையும் அடைந்தனர் என்பதை உணர முடிகின்றது.

## இசை கலைஞர்கள்

பண் - ராகம், பாண் - பாட்டு, பாணர் - பாடகர், பாடினியர் - பெண் பாடகர் பாணரும் பாடினியரும் இசைத்தமிழ்ப் பண் புலவர்களாக இருந்தனர் இவர்களை மன்னர்களும் வள்ளல்களும் சிறப்பான இடத்தில் வைத்திருந்தனர். பாணர்களுக்கு பொற்றாமரையும் பாடினிக்குப் பொன்னாலான மாலைகளையும் வள்ளல்கள் அளித்தனர். தம்மை போன்ற இசைக்கலைஞர்களையும் பரிசு வாங்குவதற்கு வழி செய்தனர். சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் ஆகிய நூல்கள் பாணர்கள் வாழ்க்கை முறையை கூறுவதாக அமைந்திருந்தன. பாணர்கள் மன்னனின் அவைகளிலும், திருவிழாக்களின் போதும் இசையோடுப் பாடல்களைப் பாடி மகிழ்வித்தனர்.

## சிலப்பதிகாரத்தில் இசைக்கலை

சிலப்பதிகாரத்தின் அரங்கேற்றுகாதையும் அடியார்க்கு நல்லார் எழுதிய உரையும் தமிழ் இசையின் சிறப்புக்களை அறிய உதவுகின்றன. சிலப்பதிகாரத்தின் வழியே பல்வேறு வகையான வரிப் பாடல்களை அறிய முடிகின்றன. அவை ஆற்றுவரி, கானல்வரி, ஊசல்வரி, வேட்டுவரி போன்றவையாகும்.

மாதவி நாடக அரங்கில் ஆடும்பொழுது இசை ஆசிரியன், குழல் ஆசிரியன், யாழ் ஆசிரியன் போன்றோர் அவளுக்கு அருகில் அமர்ந்து அவள் ஆடலுக்குத் துணைபுரிந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகின்றது.

மாதவி அரங்கத்தில் ஆடியபோது அதற்குத் தக்கபடி இசைக்கருவிகள் இசைத்தன. குழலின் இசைக்குத் தக்கபடி யாழும், யாழின் இசைக்குத் தக்கபடி

தண்ணுமையும், தண்ணுமை இசைக்குத் தக்கபடி முழவும், முழவின் இசைக்குத் தக்கபடி ஆமந்திரிகையும் இசைத்தார்கள்.இதனை,

> ***“குழல்வழி நின்றது யாழே யாழ்வழித்***
> ***தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்***
> ***பின்வழி நின்றது முழவே முழவொடு***
> ***கூடிநின்று இசைத்து ஆமந்திரிகை”[28]***

என்ற பாடலடிகள்மூலம் அறியலாம்.

நெல்குத்தும் போது மகளிர் பாடுவது வள்ளைப்பாட்டும், பந்தாடும்போது பாடுவது கந்துக வரியும், ஊசல் ஆடும்போது பாடுவது ஊசல் வரியும் ஆகியவற்றின் குறிப்புகளும் சிலப்பதிகாரத்தில் காணமுடியும்.

## சங்க அகப் பாடல்களில் இசை

பழந்தமிழர் காலத்தில் பண்களைக் காலத்திற்கும் நேரத்திற்கும் ஏற்றவாறு இசைத்து மகிழ்ந்து கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர். மாலை நேரங்களில் செவ்வழிப் பண்ணும் காலையில் மருதப் பண்ணும் வாசித்து மகிழ்ந்தனர் என்பதை,

> ***“சாயஎன் கிளவிபோல் செவ்வழி யாழிசை நிற்ப***
> ***போயஎன் ஒளியே போல் ஒருநிலையே பகல்”[29]***

முல்லை நிலத்துக்கு உரிய ஆயர்கள் ஆடு, மாடு, மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டிருந்தனர்; முல்லை நிலத்து மக்கள் குழலை இசைக்கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். ஏறு தழுவுமிடத்தில் ஆயன் ஒருவன் ஊதிய குழலின் ஓசை தலைவிக்கு நல்ல சகுனமாக இருப்பதை இப்பாடல் உணர்த்துகிறது:

*“அணிமாலைக் கேள்வற் தருஉமார் ஆயர்*
*மணிமாலை ஊதும் குழல்”*[30]

என்னும் அடிகள் விளங்குகின்றது.

குறிஞ்சி நில மக்கள் தொண்டகப் பறையை அடித்து தினைப்புனத்தில் இருக்கும் கிளியை ஒட்டியுள்ளனர். இச்செய்தியைக்

*“குறக் குறுமாக்கள் புகற்சியின் எறிந்து*
*தொண்டகச்சிறு பறைப்பாணி அயலது*
*பைதாட் செந்தினைப் படுகிளி ஒப்பும்”*[31]

என்னும் அடிகள் உணர்த்துகின்றன.

சங்க காலத்தில் ஊர்களிலுள்ள தெருக்கள் தோறும் யாழ் இசையின் முழக்கம் ஒலித்திருக்கின்றது. இதனை,

*“யாழ்இசை மறுகின் நீடுர் கிழவோன்*
*வாய்வாள் எவ்வி ஏவல் மேவார்”*[32]

என்னும் பாடலடிகள் கூறுகின்றது. அதுமட்டும் இல்லாமல் யாழின் நரம்புகளை வைத்துக்கொண்டு கிளிக்கூண்டு செய்துள்ளனர். இதனை,

*“மனை உறை குரீஇக் கறையணற் சேவல்*
*பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்”*[33]

என்னும் அடிகள் எடுத்துக்காட்டுகின்றன. மேலும் இசைக்கருவி பற்றிய செய்தியினை ஆற்றுப்படை நூலிலும் காணலாம். சங்ககாலப் பாணர்களிடையே மிகவும் வாழ்க்கையோடு இணைந்து இருந்த ஒரு வகைப் பறை ஆகுளி ஆகும். கைவிரல்களால் தட்டி இசைக்கப்படும் கருவி இதுவாகும்.

*“விரலூன்று படுகண் ஆகுளி கடுப்பக்*
*குடிஞை இரட்டும் நெடுமலை யடுக்கத்து”*[34]

என்னும் வரிகள் உணர்த்துகின்றன.

சங்க கால மகளிர்களும் இசையில் சிறந்து விளங்கினர். அக்கால இசைக்கருவிகளான யாழினை மீட்டும் திறன் படைத்தவர்களாகத் திகழ்ந்தனர் என்பதை,

***"ஒண்டொடி மகளிர் பண்டை யாழ் பாடே"***[35]

என்பதும், வளையணிந்த மகளிர்கள் பழமை வாய்ந்த யாழினை இசைத்தனர் என்பதிலிருந்து பெண்களும் கலைப் பண்பாட்டு மரபின் வளர்ச்சிக்கு முன்னோடியாக இருந்தனர் என்பதை அறியலாம்.

***"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்***
***மழலைச்சொல் கேளா தவர்"***[36]

என்னும் வள்ளுவர் இசைக்கருவிகளைக் குறிப்பிடுகின்றனர்.

## தோற்கருவிகள்

மரத்தினால் செய்யப்பட்டுத் தோலினால் அவற்றின் மேலில், மூடப்பட்டக் கருவிகள் தோற்கருவிகள் என்பர். அக்கருவிகளுள் பறை, முரசு, முழவு, தண்ணுமை போன்ற இசைக்கருவிகள் அகநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன.

"பண்டைத் தமிழர் இசைக் கருவிகளை அவற்றின் அமைப்பினைக் கொண்டு தோற்கருவி, துணைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி என நான்கு வகைப்படுத்தியிருந்தனர். இவற்றுடன் மிடற்றுக் கருவியையும் சேர்த்து ஐந்தென்றனர்"[37] என்கிறார் பொ.கோதாண்டராமன்

## தண்ணுமை

இரு பெரும் வேந்தர்கள் போரிட்டு, அதில் வெற்றி பெற்ற மன்னர் தன் வீரர்களுக்கு வாகைப்பூ என்னும் பூக்கோளினைத் தண்ணுமை முழங்க வழங்குவான். இதனையே அகநானூறு.

*“பூக்கோள் ஏய தண்ணுமை”*[38]

என்றும் கூறுகிறது.

## முழவு

தோற்கருவிகளுள் முதன்மையான மென்மையான கருவி முழவாகும். இதனை அகநானூறு

*“................. வயிரியர்*

*முழவு தீர்ந்தன்ன முழக்கத் தேறோ”*[39]

என்பது, கூத்தர்கள் முழக்கும் முழவின் ஓசையானது மேகங்கள் இருண்டு இடிக்கும் இடியோசையைப் போன்று விளங்குகின்றது என்று கூறுகின்றது. முழவினைக் கூத்தர்கள் இயங்கும் திறன் கொண்டிருந்தனர்.

## முரசு

பழங்கால இசைக் கருவிகளும் ஒன்று முரசு மன்னன் தன் போர் எழுச்சியைத் தெரிவிப்பதற்கும், நகர்வலம் வருவதற்கும் முரசினைப் பயன்படுத்தினான். தோற்கருவிகளுள் வன்மையான கருவி முரசாகும். பழங்காலத்தில் நாட்டின் செய்திகளை அறிவிக்கும் கருவி முரசாகும். அதே வழக்கம் பண்பாட்டு மரபாக இன்னும் சில ஊர்களிலும், கிராமங்களிலும், ‘தண்டோரா’ என்ற பெயரில் ஒருவன் கழுத்தில் ‘தப்புனை’ மாட்டிக் கொண்டு அடித்து ஒலியெழுப்பி செய்தியை சொல்லிச் செல்வதைக் காண்கிறோம்.

*“ஓடா நல்லேற் றுரிவை தைஇய*
*வாடுகொண் முரச மாமுமென முழங்க”*[40]

என்பது பின்னிடாது வெல்லும் வீரம் மிகுந்த ஏற்றினது தோலாற் போர்த்தப்பட்ட வெற்றிகொண்ட முரசும் ‘இமும்’ என ஒலிக்கப் பகைவரிடம் வெற்றிபெற்ற

மன்னன் நாட்டினைத் திறையாகப் பெற்றான் என்றோர். எனவே மன்னரின் போர்க்களத்திற்கும் முரசு பயன்பட்டது எனலாம்.

இவ்வாறு இசைக்கருவிகள், தோற்கருவிகள், நரம்புக்கருவிகள் எனப் பிரிக்கப்பட்டு, அக்கருவிகளைக் கையாளும் வித்தகர்களும் பாணர், பாடினி, விறலி, விறலியர், கூத்தர் என முறையே காணப்பட்டனர். இவர்கள் இசைக் கலையில் மிகச் சிறந்து விளங்கினர். அக்கால இசைக்கலை இவர்களால் சிறப்பிடம் பெற்றன எனலாம்.

சங்கஅக இலக்கியத்தில் தலைவியின் சொல், செயல் முதலான குணநலன்களை யாழோடு ஒப்புமைப்படுத்திப் பேசப்பட்டுள்ளன. தலைவியின் சொல் யாழ் போன்று இனிமையாக உள்ளது என்பதை,

***“பல்இதழ் மென்மலர் உன்கண் நல்யாழ்***
***நரம்பு இசைத் தன்ன இன்தீம் கிளவி”[41]***

என்ற பாடலும்,

***“தொடிக்கண் வடுக்கொள முயங்கினான்***
***வடிப்பு உறு நரம்பின் தீவிய மொழிந்தே” [42]***

என்ற பாடலும் சான்றாகக் கூறலாம்.

## பல்லவர் காலத்து இசை

தமிழகத்தில் கி.பி நான்காம் நூற்றாண்டு பல்லவர்களின் ஆட்சி ஏற்பட்டது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் இசையால் தமிழ்ப் பரப்பினர். சைவ வைணவ சமயங்கள் பல்லவர் காலத்தில் அதிகமாகப் பரவுவதற்கு இசைப்பாக்கள் துணையாக இருந்தன. இறைவனையே இசையாகக் கண்டனர்.

தேவாரத்தில் சாதாரி, குறிஞ்சி நட்டபாடை, சீகாமரம், கொல்லிகாவாணம் போன்ற பணிகள் காணப்படுகின்றன. மேலும் யாழ், வீணை, கொக்கரி, சக்கரி, தக்கை, மொந்தை, முரசு, உடுக்கை, தாளம், துடி, கொடுகட்டி போன்ற கருவிகளை நாயன்மார்கள் தங்கள் பாடல்களில் குறிப்பிடுகின்றனர்.

## சோழர் காலத்து இசை

பல்லவர்காலத்துக்குப் பிறகு சோழர்காலத்தில் இலக்கியங்கள் மூலம் இசைக்கலை வளர்ந்தன. ஒன்பதாம் திருமுறையிலுள்ள பாக்கள் திருஇசைப்பாக்கள் என்று கூறப்படுகிறது. கம்பராமாயணம், பெரியபுராணம், சீவகசிந்தாமணி நூல்களில் இசைபற்றி வரும் செய்திகள் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன. சோழர்கால கல்வெட்டுகளும் இசைபற்றிய செய்திகளைக் கூறுகின்றன.

## சிற்பக்கலை

பண்டையத் தமிழர்கள் சிற்பக் கலையிலும் திறன்பெற்று விளங்கினர். சிற்பங்களை மரத்திலும், மண்ணிலும், கல்லிலும் வெளிப்படுத்தினர். அதுமட்டுமில்லாமல் உலோகம், தந்தம், மெழுகு முதலியன கொண்டு சிற்பங்களை அமைத்தனர். இவை தமிழரின் கலைப் பண்பாட்டு மரபினைக் காட்டும் சின்னமாக விளங்குகிறது.

## சங்ககாலச் சிற்பக்கலை

போர்க்களத்தில் வீரர் செயல் செய்து இறந்த வீரனுக்கு கல் நடுவது பழந்தமிழர் பழக்கம். அந்த கல்லில் வீரனது உருவத்தைச் செதுக்கி அதற்கு அடியில் அந்த வீரனுடைப் பெயரும் புகழையும் செதுக்கி வைத்த செய்தியை தொல்காப்பியம் எடுத்துக் கூறுகிறது.

செங்குட்டுவனால் இமயமலையிலிருந்து கொண்டு வரப்பட்ட கல்லில் கண்ணகியின் உருவம் பொறிக்கப்பட்ட செய்தியை சிலப்பதிகாரம் கூறுகிறது. அதுமட்டுமில்லாமல் சங்க காலத்தில் சுதையினாலான (சுண்ணாம்பு) உருவங்கள் ஏராளமாகச் செய்யப்பட்டன. இந்த உருவங்களைச் செய்பவரை "மண்ணீட்டாளர்" என்று அழைக்கப்பெற்றனர். இவர்கள் சமுதாயத்தில் புகழ்ப் பெற்று இருந்ததாக சிலப்பதிகாரம் கூறுகிறது.

பூம்புகார் நகரத்திலிருந்த மாளிகைகளில் சுண்ணாம்பினால் செய்யப்பட்ட சிற்ப உருவங்களை இந்திர விழாவின் போது பல பகுதிகளிலிருந்து வந்த மன்னர்கள் பார்த்து ரசித்தனர் என மணிமேகலை கூறுகிறது.

## பல்லவர் காலச் சிற்பக்கலை

பல்லவர் காலத்தில் செங்கற்களால் கட்டப்பட்ட கோவில்களில் சுதை உருவங்கள் நிறைய செய்து வைக்கப்பட்டன. தமிழகத்தில் கற்சிற்பங்களைத் தொடங்கி வைத்தவர்கள் பல்லவர்கள் ஆவார். இவர்கள் கட்டிய குடைவரைக் கோயில்களில் எண்ணற்ற சிற்ப உருவங்கள் காணப்படுகின்றன.

பாறைகளிலேயே செதுக்கப்பட்ட சிற்பங்கள், கட்டிடங்களை அழகு செய்யும் சிற்பங்கள் என இரு வகையான சிற்பம் பல்லவர் காலத்தில் இருந்தன. குடைவரைக் கோயில்களிலும், இதர் கோயில்களிலும் சிற்பங்கள் காணப்படுகின்றன.

பல்லவர் காலக் கட்டிடக் கோயிலான காஞ்சி கைலாயநாதர், கோயிலில் சிவபெருமானின் பல்வேறு தோற்றங்களும், திருமால், நான்முகன். முருகன், கொற்றவை முதலியவர்களின் தோற்றங்களும், பல்வேறு நிலையில் சிற்பமாகப் படைக்கப்பட்டுள்ளன. மேலும் காஞ்சி வைகுந்தநாதர் கோவிலில் பல்லவர்களின் வரலாற்றை முழுவதும் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன.

## பாண்டியர் காலச் சிற்பக்கலை

பாண்டிய மன்னர்கள் அமைத்த குகைக் கோயில்களான திருமயம், பிள்ளையார்ப்பட்டி, குன்றக்குடி, திருப்பரங்குன்றம் போன்ற இடங்களில் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்துள்ளதை காணமுடிகிறது.

மேலும் கோவில்பட்டிக்கு மேற்கே கழுகுமலையில் உள்ள வெட்டுவான் கோவில் விமானத் தளங்களில் சிற்பி உருவாக்கியுள்ள தெய்வங்கள் பாண்டியர் காலச் சிற்பக் கலைக்குச் சான்றுகளாகும்.

## சோழர்காலச் சிற்பக்கலையும், விஜயநகர சிற்பக்கலையும்

தஞ்சை பெரிய கோவில் சோழர்காலக் சிற்பங்களுக்கு சான்றாக உள்ளன. மேலும் கங்கை கொண்ட சோழபுரக்கோவில், திருவனக் கோவில், தாராசுரம் கோவில், சிதம்பரம் கோவில் ஆகியவற்றில் சோழர்கால சிற்பங்களைக் காணலாம்.

நாயக்கர் ஆட்சியில் கட்டிய ஆயிரங்கால் மண்டபமும் மீனாட்சி கோவிலும் அவர்களின் சிற்பக்கலைக்கு சான்றாக உள்ளன.

## அகநானூற்றில் சிற்பக்கலை

சிற்பங்களில் அழகு வாய்ந்தது கற்சிற்பம். இக்கற்சிற்பம் சிற்பங்களில் முதன்மையானது. சங்ககாலத் தமிழர்கள் நடுகல் நடும் வழக்கத்தினை பண்பாட்டு மரபாகச் கொண்டிருந்தனர். நடுகல்லினைத் தேர்ந்தெடுத்து அதில் வீரனின் உருவத்தையும், பெயரினையும் கல்லில் செதுக்கி, நீராட்டி, அக்கல்லினை நட்டு நடுகல் என்று வழிபடுவர். இதனை,

***"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்***
***சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்த லென்று***
***இருமூன்று மரபில் பெரும்படை வாழ்த்தலென்று***
***இருமூன்று மரபில் கல்லொடு புரை"[43]***

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம்.

***"புன்றலை சிதைத்த வன்றலை நடுகற்***
***கண்ணி வாடிய மண்ணா மருங்குற்***
***கூருளி குயின்ற கோடுமா யெழுத்தம்"[44]***

என்ற அகநானூற்றுப் பாடலில் வலிய பாறையில் நடுகல்லில் இடம்பெற்ற கண்ணி வாடப் பெற்றதும், நீராட்டப் பெறாததும் ஆகிய இடத்தில் கூரிய உளியால் செய்யப் பெற்ற கீற்றுகள் மறைந்த எழுத்துக்கள் அவ்வழியே செல்லும் குதிரை வண்டியால் தேய்ந்து மறைந்து அவ்வழியே செல்லும் பதியோர்க்கு வேறு பொருள் தருவதாய் விளங்குகின்றன என்கிறார். பழந்தமிழர்களிடம் சிற்பக்கலை சிறந்து விளங்கியது என்பதை காணமுடிகின்றது.

## சுதை உருவங்கள்

சங்ககாலத்தில்சுதையினாலானஉருவங்கள்ஏராளமாகச்செய்யப்பட்டன. இந்த உருவங்களைச் செய்பவரை "மண்ணீட்டாளர்" என்று அழைப்பர் மண்ணீட்டாளர் தமிழகத்தில் சிறப்பாகப் போற்றப்பட்டனர். பூம்புகார், மதுரை முதலிய சிறந்த நகரங்களில் மண்ணீட்டாளர் சிறப்பாக என்று வாழ்ந்தனர் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. அவர்கள் கோவில் சுவர்களையும், மாளிகைகளையும் பாவைகள் கொண்டு அலங்கரித்தனர். பூம்புகார் நகரத்திலிருந்த மாளிகைகளில் சுதையினால் செய்யப்பட்ட சிற்ப உருவங்கள் அமைக்கப்பட்டிருந்தன. இந்திர விழாவின் போது பல பகுதிகளிலிருந்தும் வந்த மன்னர்கள் அவற்றைப் பார்த்து ரசித்தனர் என்று மணிமேகலை கூறுகிறது. இன்றுள்ள காவிரிபூம்பட்டினத்தில்

சம்பாதி அம்மன் கோவில் சிறந்து காணப்படுகிறது. அதில் காணப்படும் உருவங்கள் சங்காலத்தில் காணப்படுபவையாகும்.

> ***“மண்ணிலும் கல்லினும் மரத்திலும் சுவரினும்***
> ***கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க”[45]***

என்ற மணிமேகலை அடிகள், சிற்பங்கள் எப்பொருள் துணைக்கொண்டு உருவாக்கப்பட்டன என்பதை உணர்த்துகிறது.

## மரச்சிற்பங்கள்

மரத்தாலும் மிக அழகிய சிற்பங்கள் செய்யப்பட்டன. கோயில்களிலும், மடங்களிலும் தேவன், தேவியர் உருவங்கள் மரத்தால் செய்யப்பட்டன. சங்ககாலத்தில் உள்ள சிற்பங்கள் தேர்களில் உள்ள சிற்பங்கள் மிகுந்த வேலைப்பாடுகள் கொண்டு இருந்தன. தேர்களில் மரச்சிற்பங்கள் செதுக்கப்பட்டன. ஒரே பகலில் எட்டு தேர்களைச் செய்யவல்ல தச்சர்கள் தமிழகத்தில் சங்க காலத்தில் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. இத்தகைய இலக்கிய ஆதாரங்கள் பல நூற்றாண்டுகளாக தொடர்ந்து வருகின்ற சிற்பக்கலை வளர்ச்சியைக் காட்டுகிறது.

## ஆடற்கலை

சங்க காலத்தில் இசையும் கூத்தும் அக்கால மக்களின் பொழுதுபோக்குக் காரணியாகவும் இருந்து வந்துள்ளன. இசையினையும் கூத்துக்களையும் எல்லோரும் நிகழ்த்துவதாக அமையவில்லை. ஒரு சில பிரிவினர் நிகழ்த்துவர். அவற்றை மக்கள் எல்லோரும் கேட்டு மகிழ்ச்சி அடைந்தனர் என்பதை சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது.

பழந்தமிழ் இலக்கியங்களுக்கு இலக்கணமாக அமைந்த தொல்காப்பியம் ஆடற்கலைபற்றிக் குறிக்கிறது. எனவே தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே

ஆடற்கலையும், அக்கலையின் தேர்ச்சிப் பெற்றவர்களும் இருந்துள்ளனர் என்பதை நாம் அறிய முடிகின்றது. எடுத்துக்காட்டாக,

***“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்”[46]***

என்ற தொடரால் அறியலாம்.

***“நடமே நாடகம் கண்ணுள் நாட்டம்***
***பழகம் ஆடல் தாண்டவம் பரதம்***
***அகனுதர் வாணி குரவை***
***இலயம் நிலையம் நிருத்தம் கூத்தே***
***நடனம் தூக்கு நாட்டியம் நட்டணம்***
***நடையும் அதற்கே நவிலலு மாகும்”[47]***

என்று கூத்திற்குரிய பல பெயர்கள் அக்காலத்தில் இருந்ததை சேந்தன் திவாகரம் எடுத்துரைக்கிறது. ஆடல் என்பதை கூத்து என்றழைப்பது உண்டு. ஆடுபவரைக் கூத்தாடி என்றும் அழைப்பர். பெரும்பாலும் கூத்துகள் பொழுதுபோக்கிற்காக மட்டுமின்றி, சமயச் சார்பின் நிகழ்விற்கும் காரணியாக அமைந்துள்ளன.

சிலம்பில் அடியார்க்கு நல்லார் கதை தழுவியும், கதை தழுவாதும் அமைவது கூத்து என்கின்றார். கதை தழுவி வருவதை நாடகம் என்று குறிப்பிடுகிறார். கூத்துக்களைப் பொதுவாக அகக்கூத்து, புறக்கூத்து என்று இருவகையாகக் கூறுவர். ஆனால் அவை குரவைக் கூத்து, துணங்கைக்கூத்து, அல்லிப் பாவைக் கூத்து, எனக் கூத்து நிகழ்த்தும் காரணத்தையும், கூத்தின் பெயராகக் கொண்டழைப்பதையும் அறிய முடிகின்றன.

## கூத்தின் வகைகள்

“கூத்துகளில் பலவகையுண்டு. மன்னவருக்கும், மக்களுக்குமானது ஒன்று; புகழ்ந்தும், இகழ்ந்தும் ஆடுவது மற்றொன்று; மூன்றாவது தமிழக்கூத்தும்

ஆரியக்கூத்தும்; நான்காவது தேசியக்கூத்துகள், பொதுவாக, கூத்துகளில் பதினோரு வகையுண்டு, அவை முறையே கடையம், மரக்கால், குடை, துடி, அல்லியம், மல், குடம், பேடு, பாவை, கொடுகாட்டி, பாண்டரங்கம்"[48] என்பன என்று டாக்டர் கே.கே.பிள்ளை கூறுகிறார்.

## கூத்து விளக்கம்

'கூத்து' என்னும் சொல் 'நாட்டியம்', 'நாடகம்' ஆகிய இரு கலைகளுக்கும் பொதுவானதாக வழங்கப் பெற்றுள்ளது. தொல்காப்பியத்தில் 'கூத்து' 'கூத்தர்' என்னும் சொல் மிகுதியாக உள்ளது.

> ***"இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து"[49]***
> ***"நாட்டியம் நன்னூல் நன்கு கடைபிடித்து"[50]***
> ***"நாடக மேத்தும் நாடகக் கணிகை"[51]***

என்று சிலப்பதிகாரத்தில் கூத்தைப்பற்றிக் காணப்படும் பாடலடிகளாகும். சங்க இலக்கியமான புறநானூற்றில் கூத்துப் பற்றிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இரவு தொடங்கி விடியும் வரைக் கதை தழுவி ஆடப்படும் நாடகமே கூத்து ஆகும். கூத்து எனும் சொல் முதலில் நடனத்தையும் பின்னர் கதை தழுவி வரும் நாடகத்தையும் குறிக்கும்.

## பல்லவர் காலக் கூத்துக்கலை

பல்லவர் காலத்தில் ஏற்பட்ட சமய மலர்ச்சியால் கோவில்களில் ஆடல், பாடல் போன்ற கலைகள் வளர்ந்தது. பல்லவ மன்னர்கள் பரதக் கலைக்கு முன்னுரிமை அளித்தனர் நடனம் ஆடும் பெண்களை ரிஷபத்தளியார், தேவரடியார், தளிச்சேரிப் பெண்டுகள் என அழைத்தனர். பல்லவர் காலத்தில் குழு நடனம் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தன.

## சோழர் காலக் கூத்துக்கலை

கோயில்களில் ஆடவும், பாட்டு பாடவும் பல்லவர் காலத்தில் மகளிர் இருந்தனர். அந்த மகளிருக்குத் தேவையான அனைத்தையும் செய்து தந்தனர். தஞ்சை கோவிலில் மட்டும் 400 தேவரடியார் இருந்தனர். இராசராச சோழன் காலத்தில் திருமூல நாயனார் நாடகம் ஆசிரியக் கூத்து ஆகியவை நடைபெற்றன. முதலாம் குலோத்துங்கச் சோழன் காலத்தில் பூம்புலியூர் நாடகம் நடத்தப்பட்டன. தஞ்சை கோவிலில் சரபோஜி மன்னர் காலத்தில் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் எழுதிய சரபேந்திர பூபாலக் குறவஞ்சி நாடகம் நடத்தப்பெற்றன. சோழர் காலத்திலும் கலைகள் சிற்பான இடத்தைப் பெற்றன.

## நாயக்கர் காலக் கூத்துக்கலை

நாயக்கர் கால மன்னர்களுக்கு மராட்டிய மன்னர்களுக்கு கலை வளர்ச்சியில் பெரிதும் ஈடுபட்டனர். அரண்மனையில் இருந்த அரசன் சிலைக்கு முன் ஒவ்வொரு சனிக்கிழமையிலும் நாடக மங்கைகள் ஆடினர். ஒவ்வொரு மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் நாடகம், கூத்து பல மாற்றங்களைப் பெற்று வளர்ந்தன.

## குரவைக்கூத்து

“காதலையோ போர் வெற்றியையோ பொருளாகக் கொண்ட குரவைச் செய்யுட்களைப் பாடிக்கொண்டு எழுவரோ ஒன்பதின்மரோ வட்டமாக நின்றுகை கோர்த்துக் கொண்டு ஆடுவது குரவைக் கூத்தாகும்”[52] என்று கலைக் களஞ்சியம் விளக்கம் தருகிறது.

***“வேங்கை முன்றில் குரவை”[53]***

என்று நற்றிணையும், குரவைக் கூத்தின் செல்வாக்கைக் கூறுகின்றது.

குரவைக் கூத்து என்பது தலைவி தன் தோழியர்களுள் முருகனைப் பாடி மகிழ்வது, அவ்விறைவனிடம் வேண்டுவதையே பண்பாட்டு மரபாகக் கடைப்பிடித்தனர். தான் விரும்பிய தலைவனையே கணவனாக அடைய வேண்டும் என வேண்டுவர். குரவைக் கூத்து சங்க இலக்கியங்களின் மிகுதியான இடங்களில் இடம் பெற்றுள்ளன. இக்குரவைக் கூத்து இறைவனாக 'முருகனை' கொண்டுள்ளனர்.

***"பாடுர் பெழுதரும் பகுவாய் மண்டிலத்து***
***வயரிடைப் பட்ட தெள்விறி இயம்ப***
***வண்டற் பாவை யுண்டுறைத் தரீஇத்***
***திருநுதன் மகளிர் குரவை அயரும்"[54]***

என்பது, தலைமகள் பிரிவினால் வருந்துகின்ற வேறுபட்ட தலைவியிடம் தோழி, ஓசை பரந்து எழும் பெரிய வாய் வட்டத்தை உடைய ஊதுகொம்பினிடத்து எழுந்த தெளிந்த ஓசை ஒலிக்க, வண்டல் விளையாட்டுக் குரியம் பாவையை நீர் உண்ணும் துறையில் கொணர்ந்து வைத்து அழகிய நெற்றியுடைய பெண்கள் குரவைக் கூத்தாடும் கடற்கரைச் சோலை சூழ்ந்த ஊரானாகிய நம் தலைவன் விரைந்து வந்துள்ளார். வருந்தாதே என தேற்றுகிறாள். அது மட்டும் இல்லாமல் தன் ஊரில் பெண்கள் ஆடும் குரவை கண்டு உன் நிலை நினைத்து வந்துள்ளான். உன் துயர் தீர்ப்பான் என்று தோழி கூறுகிறாள்.

## துணங்கைக் கூத்து

துணங்கைக் கூத்து எனும் கூத்தானது மகளிர் கை சேர்ந்துக் கொண்டு நடத்திக்காட்டிய கலைப் பண்பாட்டு மரபாக சங்க காலத்தில் விளங்கியது. இளம்பெண்கள் இறைவழிபாட்டின்போது இவ்வகை நிகழ்வுகளை நடத்திக் காட்டுவதாகும்.

***"எல்வளை மகளிர் துணங்கை"[55]***

என்று குறுந்தொகை பேசுகிறது.

இக்கூத்து மகளிர்களால் நிகழ்த்தப்படும், இதனை,

***“தாமும் பிறகும் உளர்போற் சோழன்***

***முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்”***[56]

என்பது, பெண்களும் பிறகும் சிறப்புடைய முழவு ஒலிக்கும் துணங்கைக் கூத்தாடி விழாவினை மகிழ்வாகக் கொண்டாடினார்கள் என்பதைச் சுட்டுகிறது.

குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து போன்ற கலைகளில் பெண்கள் சிறப்புற்றிருந்தனர். கூத்தர், விறலியர், வயிரியர், பாணன் போன்றோர்களும் கலையில் சிறந்து விளங்கியதால் கலைகள் வளர்ச்சியுற்றன. இவை அனைத்தும் கலைப் பண்பாட்டு மரபினைக் குறிப்பிடுகின்றன எனலாம்.

## தொகுப்புரை

கலைப் பண்பாட்டு மரபு என்னும் இவ்வியலில் தமிழர்களின் வாழ்வில் கலைகள் பெற்று இருந்த முக்கியத்துவத்தை வெளிப்படுத்தும் செய்திகள் ஆராயப்பட்டிருக்கின்றன. கட்டடக்கலை பற்றியும், அது மன்னர்களின் காலத்தில் சிறப்பு பெற்று விளங்கியதையும் கூறப்பட்டுள்ளது. கட்டடக்கலையின் பயன்பாடு குறித்தும், அவை மூலம் கோயில்கள் வளர்ந்த விதத்தையும் ஆராயப்பட்டுள்ளது: ஓவியக்கலை வளர்ந்த வரலாறு, அவை ஒவ்வொரு ஆட்சி காலத்திலும் வளர்ந்தமுறை கூறப்பட்டுள்ளது. இசைக்கலை பற்றியும், அக பாடல்களில் இசை குறித்த செய்திகளையும், இசை வகைகளையும் ஆராயப்பட்டுள்ளன. இசைக்குரிய பண்கள் பற்றியும், தண்ணுமை, முழவு, முரசு போன்ற இசைக்கருவிகளைப் பற்றியும் ஆராயப்பட்டுள்ளன. சிற்பக்கலை இயலில் சுட்டப்பட்டுள்ளன. சுதை உருவ பற்றியும் ஆராயப்பட்டுள்ளன. சிற்பக்கலை வளர்ந்த முறை, அவை பாடல்களில் எடுத்துக் கூறியவற்றை இயலில் சுட்டப்பட்டுள்ளன. சுதை உருவகங்கள், மரச் சிற்பங்கள் போன்ற கலை வகைகளை அகப்பாடலில் ஆராயப்பட்டுள்ளன. கூத்துக் கலை பற்றியும், அதன் வகைகளை குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து போன்றவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஆட்சிக் காலத்திலும் எவ்வகையான கூத்துக்கள் உருவாயின அவை எவ்வாறு மக்களிடம் சென்றடைந்தது போன்ற விளக்கங்களை பண்பாட்டு மரபோடு இவ்வியலில் சுட்டப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. க.த திருநாவுக்கரசு, தமிழர் பண்பாடு, ப.30.
2. மா. இராசமாணிக்கனார், தென்னிந்திய சிற்பங்களும் கோயில்களும், ப.35.
3. சி. கோவிந்தராசனார், தமிழகத்துக் கலைகள், ப.88.
4. டாக்டர் பொற்கோ, பண்பாட்டுக் கருத்தோட்டம், ப.25.
5. மா. நன்னன், பெரியாரியல், ப.27.
6. சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை, ப.78.
7. க.த திருநாவுக்கரசு, தமிழகக் கலைச் செல்வங்கள், ப.145.
8. கலித்தொகை, பா.145.
9. அகநானூறு, பா.174.
10. பெரும்பாணாற்றுப்படை, பா.86.
11. நெடுநல்வாடை, பா.86-90.
12. மேலது., பா.73-86
13. மணிமேகலை, பா.13:50-58.
14. நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு (இரண்டாம் பாகம்), ப.78.
15. ஆ. சிவசுப்பிமணியன், மந்திரமும் சடங்குகளும், ப.55.
16. சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை, ப.88.
17. அகநானூறு, பா.255.
18. மேலது., பா.288.

19. மணிமேகலை, பா.18:55-57

20. நெடுநல்வாடை, பா.108-114.

21. மா. இராசமாணிக்கனார், தமிழகக் கலைகள், ப.69.

22. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூற்பா.25.

23. தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா.30.

24. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நூற்பா.25.

25. அகநானூறு, பா.255.

26. முடத்தாமக் கண்ணியார், பொருநராற்றுப்படை, பா.25.

27. அகநானூறு, ப.185.

28. சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை, ப.285.

29. கலித்தொகை, பா. 75

30. மேலது., பா. 85

31. ஆ. வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப.85

32. அகநானூறு, பா.175.

33. குறுந்தொகை, பா.212.

34. பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார், கூத்தராற்றுப்படை, பா.65.

35. மேலது., ப.68.

36. குறள்.66.

37. பொற்கோ, பண்பாட்டுக் கருத்தோட்டம், ப.26.

38. அகநானூறு, ப.128.

39. மேலது., பா.175.

40. மேலது., பா.108.

41. மேலது., பா.109.

42. மேலது., ப.49.

43. தொல்காப்பியம், புறத்திணையியல், நூற்பா.63:19-22.

44. அகநானூறு, பா.258.

45. மணிமேகலை, பா.29:10-11.

46. தொல்காப்பியம், அகத்திணையியல், நூ.22.

47. சேந்தன் திவாகரம், ப.38.

48. கே.கே பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப.96.

49. சிலப்பதிகாரம், பா.3:12.

50. மேலது., பா.3:46.

51. மேலது., பதிகம்.15.

52. கலைக் களஞ்சியம், ப.236.

53. நற்றிணை, பா.35.

54. நாகனார், நான்மணிக்கடிகை, பா.58.

55. குறுந்தொகை, பா.38.

56. மேலது., பா.40.

# இயல் 4

## சமயப் பண்பாட்டு மரபு

### முன்னுரை

சமயம் என்பது வாழ்க்கை நெறி. மனிதனுடைய உணர்ச்சிகளின் பயனாக அவன் சில பொருள்களைப் பெரிதும் உயர்வாகக் கருதி போற்றி வருகிறான். அவற்றை புனிதமானவை என்றும் கருதுகிறான். அவ்வுணர்ச்சிகளில் இருந்து தானே தோன்றுகின்ற ஒரு வாழ்க்கை நெறியே சமயம் என்பர். அச்சமயம் பண்பாட்டு மரபோடு தொடர்புடையது. வழிபாடு என்பது சமயத்தின் ஒருபகுதி பக்தனுக்கும், அவன் விரும்பித் தொழுகின்ற தெய்வத்துக்கிடையேயும் உள்ள அந்தரங்க ஒப்பந்தம். இது மௌனத்தை மொழியாக உடைய தியானமாயிருக்கலாம். பண்டைத் தமிழர்களில் பெரும்பாலோர் கடவுள் நம்பிக்கை உடையவர்களாக இருந்தனர். அறிவு நிரம்பிய ஆன்றோர்களும், புலவர்களும் தெய்வங்களை வணங்கினர். பொதுமக்களும் அவ்வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி நம்பிக்கை கொண்டிருந்தனர்.

சங்க கால மக்கள் கொண்டாடிய திருவிழாக்கள் அனைவரையும் இணைக்கும் பாலமாகத் திகழ்கின்றன. ஒரு குறிப்பிட்ட நன்னாளில் மனைவி, மக்கள், சுற்றத்தார், உற்றார், உறவினர் ஆகிய அனைவரும் கூடி மகிழ்வதைத் திருவிழாக்கள் என்றும் பண்டிகைகள் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மேலும் சமயங்களில் வழியாகத் தமிழரின் பண்பாட்டு மரபினை விளக்கும் வகையில் இவ்வியல் அமைக்கப்பட்டுள்ளது.

கல்தோன்றி மண்தோன்றாத காலத்திலிருந்தே மனிதனிடம் கடவுள் நம்பிக்கை என்பது இருந்து வந்துள்ளது. ஆலமரத்தின் பழத்தினைக் கிள்ளினால், அதன் உள்ளே சிறுசிறு விதைகள் இருக்கும். அந்த விதைகளில் ஒன்றை எடுத்துக் கிள்ளிப் பார்த்தால் அதற்குள் ஒன்றுமே இருக்காது. ஆனால் அந்த விதைக்குள் நம் கண்ணுக்கு தெரியாமல் இருக்கும். சூட்சுமப் பொருள்களே இலைகளும், கிளைகளும், விழுதுகளும் கொண்ட ஆலமரமாகிறது. மிகப் பெரிய ஆலமரம் முழுவதும் அந்த சிறு விதையில் கண்ணுக்கு தெரியாமல் அடங்கியிருக்கிறது. அதுபோல உலகம் முழுவதும் கண்களுக்கு தெரியாத சக்தியில் இருந்து சமயம் உண்டாயிற்று. அந்தச் சக்தியே இறைவன் அதை நம்பி வாழ வேண்டும்; அப்படி வாழ்வது தான் வாழ்க்கை. கண்ணுக்குப் புலப்படாத, ஆழம் காண முடியாத ஒரு பெரும் சக்தியே உலகை ஆட்டி வைக்கிறது என்பதை உணரக்கூடியதாக இருக்கின்றது.

## சமயம் விளக்கம்

சமை என்பதற்கு நிரம்பு, ஆயத்தமாகு, பொருத்தமாகு, பக்குவப்படு, சமைத்தல், நிரம்புதல், ஆயத்தமாதல், பொருத்துதல், பக்குவப்படுதல் எனப் பொருளாகும். உண்பதற்கு ஏற்றவாறு காய்கறிகளைப் பக்குவப்படுத்தும் கலையே சமையல் கலை என்று கூறுகிறோம். பெண் வயதிற்கு வரும்போது சமைந்துவிட்டாள் என்கிறார்கள். அதாவது குடும்ப வாழ்க்கைக்கு அவள் பக்குவப்பட்டுவிட்டாள் என்பதாகும். இவ்வாறே சமயம் என்பது பக்குவமான கொள்கைகளின் சாரமாகும். சான்றோர்களால் பக்குவப்படுத்தப்பட்டு சமைக்கப்பட்டதே சமயம் ஆகும்.

நன்னெறியான நல்லொழுக்க கொள்கைகளின் சாரமே சமயமாகும். சமயம் மனிதனுக்கு நல்லனவற்றை எடுத்துரைத்து, நல்வழிபடுத்தக்கூடிய ஒரு மார்க்கமாகும் என ஆன்றோர்கள் கருதியுள்ளனர். சமயம் கடவுளையும்,

மனிதனையும் இணைக்கும் ஒரு பாலம், மனிதர்களை இன்ப வாழ்விற்குப் பக்குவப்படுத்துவதால் முன்னோர்கள் சமயம் எனப் பெயர் வைத்தார்கள் எனலாம். சமயம் சமுதாயத்தின் இன்ப வாழ்விற்குப் பக்குவப்படுத்தும் சக்தியாக விளங்குகிறது.

## சமயம் பற்றி அறிஞர்களின் கருத்து

மாக்ஸ் முல்லர் கூறுவது "சமயம் என்பது ஓர் வளர்ச்சிதான் ஒரு மனச்சார்பு புலன் உணர்வுக்கும், அறிவாராய்ச்சிக்கும் அப்பாற்பட்டது. பல்வேறு பெயர்களுடன் பல்வேறு தோற்றங்களுடனும் எல்லையற்ற பரம்பொருளை மனிதன் அறிந்து கொள்ள உதவுவது"[1] என்கிறார்.

"உடைமை அனைத்தையும் தெய்வீகக் கட்டளையாகக் கருதிப் போற்றுவதே சமயம்"[2] என்று தத்துவ அறிஞர் காண்ட் கூறுகிறார்.

எமிலி தார்கைம் "சமயம் என்பது புனிதமான ஒன்றைப் பற்றிய நம்பிக்கைகளும், செயல்முறைகளும் அடங்கிய ஓர் ஒழுங்கு அமைந்தமுறை"[3] என்கிறார்.

## மதம்

மதம், சமயம், கொள்கை, நெறி என்பன ஒரு சொற்கள். வடமொழி சொற்களில் சமஸ்கிருதம் பிறமொழிகளிலிருந்து கடன் கொள்ளாத தேவமொழி என்று நம்பிக்கை இடைக்கால தமிழர் எண்ணத்தில் பதிக்கப்பட்டிருந்தாலும் மதம், சமயம் என்னும் இரு சொல்லும் வடமொழி சொல்லே என்றும் இன்றும் நம்மால் கருதப்பட்டு வருகிறது.

***“எழுவகை மதமே உடன்படன் மறுத்தல்***

***பிறர்தம் மதமேற்கொண்டு களைவே***

***தாசு ணாட்டித் தனாது நிறுப்பே***

***இருவர் மாறுகோள் ஒரு தலை துணிவே***

***பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்***

***பிறிதொரு படாஅன் தன்மதங் கொளலே”[4]***

என்று நன்னூல் குறிப்பிடுகிறது. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் தமிழகத்திற்கு வந்த வேதகால ஆசிரியர்கள் மக்களுடன் நெருங்கிப் பழகவில்லை. தமிழகத்தை ஆண்ட மன்னர்களுடன் மற்றும் அரண்மனை அதிகாரிகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தனர்.

தமிழர்களின் நிலத் தெய்வங்களுள் சேயோனும், மாயோனும் தவிர மற்ற தெய்வங்கள் அதாவது இந்திரனும், வருணனும் ஒதுக்கி வைக்கப்பட்டனர். ஆசிரியர்களின் ஆதிக்கம் அரண்மனைக்குள் ஊடுருவியதால், குறிஞ்சி நில தெய்வமான சேயோன் முருகனாய் மாறினான். முல்லைக்குரிய தெய்வமான மாயோன் மகாவிஷ்ணுவாய் மாற்றம் பெற்றான். இவர்களுடன் பிறவாயாக்கை பெரியோனாக சிவனும் சேர்ந்து கொண்டான். கடைச்சங்க காலம் முடியும்போது தமிழர்களின் தெய்வங்களாய் இருந்ததே மூவர். அவர்கள் சிவன், மகாவிஷ்ணு, முருகன் ஆவார். தெய்வம் உண்டென்று கொள்வது போன்றே புறக் கண்ணால் காணப்படாது பொருளாதலாலும் மக்களின் தெய்வம் உண்டென்று கொள்வதும் மதமாகும். ஆகவே, நம்புமதம் நம்பாமதம் என இருவகையுள்ளன. அவற்றுள் பல திறப்பட்டுள்ளது. நம்பும் மதம் பிரிவுகளே பற்பல சிறந்தனவாயுள்ளவை.

## சமயம் தோற்றம்

சமயத் தோற்றம் குறித்து எழுந்த கருத்துக்களைப் பற்றி நோக்கும்போது, உலகம் என்பது இயற்கைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியின் கட்டுப்பாட்டில்

இயங்குவது என்றும், அந்தச் சக்தியை வழிப்பாட்டின் மூலம் திருப்திபடுத்தி நமக்கு உதவி புரியச் செய்யலாம் என்றும், அந்தச் சக்தியை ஞானத்தால் அல்லாமல் பக்தியால் மட்டுமே அறியமுடியும் என்பதெல்லாம் அனுமானம், கற்பனைக் கொண்டு அதன் அடிப்படையில் உருவாகும் நம்பிக்கைகளும், நடைமுறைகளும் அடங்கிய ஓர் அமைப்பைச் சமயம் என்று குறிப்பிடலாம்.

சைவம், வைணவம் உள்ளிட்ட இந்து சமயம், இசுலாம், கிறித்துவம், பௌத்தம், சமணம் போன்ற பல சமயங்கள் உலகில் உள்ளன. இத்தகைய சமயங்களின் தோற்றம் குறித்து பல்வேறு அறிஞர்களால் ஆராயப்பட்டுள்ளன. இது குறித்து பல்வேறு கோட்பாடுகளும் காணப்படுகின்றன. இவ்வறிஞர்கள் முன்வைத்த முக்கியக் கோட்பாடுகள் வருமாறு:

1. ஆவி வழிபாடு
2. உயிர்பாற்றல் வழிபாடு
3. இயற்கை வழிபாடு
4. குலக்குறி வழிபாடு
5. போலியுரு வழிபாடு
6. முன்னோர் வழிபாடு

அவ்வழியான கோட்பாட்டை 19ம் நூற்றாண்டைச் சார்ந்த மானிடவியல் அறிஞர் எட்வார்ட் பர்னட் டைலர் வகுத்தார். “சமயம் ஆவிகளின் பால் ஏற்பட்ட நம்பிக்கைகளிலிருந்து தோன்றியது என்பது இவருடைய கருத்து”[5] பெருஞ் சமயங்கள் அனைத்தும் ஆவிவுலக நம்பிக்கை என்னும் நிலையைக் கடந்தே வளர்ச்சி பெற்று வந்துள்ளன என்று டைலர் பின்வரும் படிம வளர்ச்சி நிலையைக் காட்டுகிறார்.

- கனவுகள்
- பேய் பிசாசுகளின் ஆவிகள்
- ஆவி வழிபாடு
- பல கடவுள் வழிபாடு
- ஒரு கடவுள் வழிபாடு

“ஆவி உண்டெனப்பதை அறவே நம்பாத சில பழங்குடியினர் மனிதன், பொருள், இயற்கை முதலானவற்றைச் சாராத மனா (உயிர்ப்பு தன்னுடைய ஆற்றல்) என்னும் ஆற்றலில் நம்பிக்கை கொண்டுள்ளனர். இவ்வகை நம்பிக்கை-யிலிருந்து தொன்மைச் சமயம் தோற்றம் பெற்றது என ஆர். ஆர். மாரட் என்னும் மானிடவியல் அறிஞர் கருதுகின்றார்”.[6]

சமயத்தின் தோற்றமானது மக்கள் ‘புனிதம்’ புனிதம் சாராதது பற்றிச் சிந்திக்கத் தொடங்கியதால் ஏற்பட்டது ஆகும். மேலும் சமய நம்பிக்கைகள் அனைத்தும் குலக்குறி நம்பிக்கையிலிருந்து வளர்ச்சி பெற்றவை. ஒவ்வொரு குலமும் ஏதாவது ஓர் இயற்கை பொருளுடன் மரம் அல்லது மிருகத்துடன் தொடர்புபடுத்திக் கொண்டது, இவ்வாறு தொடர்புபடுத்தப்பட்ட மரமோ விலங்கோ அந்தக் குலத்தினுடைய குலக்குறியாகக் கொண்டிருப்பார்கள். அக்குலக்குறி-யிலிருந்து அக்குலம் தோன்றியதாகக் கருதப்படும். மேலும் குலக்குறியாக அமைந்த விலங்கு அல்லது தாவரத்தை உண்பது விலக்காக உள்ளது. தங்கள் குலத்தைப் பாதுகாக்கும் வலிமை வாய்ந்த சக்தியாக குலக்குறிகள் அமையும் என்று நம்பி அதனைப் பாதுகாக்கின்றனர்.

இயற்கையின் ஆற்றல்கள் சில பொருள்களில் உறைந்துள்ளன பொருள்கள் மந்திர ஆற்றலைக் கொண்டுள்ளன. மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட செயல்களைச் செய்து நற்பலன்களை ஏற்படுத்த வல்லவை

என்று கருதி, அவற்றை வழிபடும் முறை போலி உருவ வழிபாடு எனப்படும். இவ்வழிபாட்டுமுறை ஆவியுலக நம்பிக்கையின் திரிபு அல்லது தொடர்ச்சி என சான்றோர் கூறுவர்.

இறந்தோரின் ஆற்றல் வாழ்வோரின் நலனில் பெரும்பங்கு வகிக்கிறது என்ற உண்மையால் ஏற்பட்டதே முன்னோர் வழிபாடாகும். இதிலிருந்து சமயம் தோன்றியது என்பது ஒரு வகை வாதமாக இருக்கலாம். முன்னோர் வழிபாடு மிகத் தொன்மையானது. தமிழ் நாட்டில் அதிகமாக காணப்படுகின்றன.

சமயத்தின் தோற்றம் குறித்து உலகின் பல்வேறு கோட்பாடுகள் பல்வேறு அறிஞர்களால் கூறப்பட்டுள்ளன. மேற்கூறப்பட்ட அனைத்து வழிபாட்டு மரபுகளையும் உள்ளடக்கிய வழிபாட்டு மரபாக தெய்வ வழிபாடுகள் காணப்படுகின்றன.

பண்பாடு நாட்டின் வரலாற்றோடு நெருங்கியத் தொடர்புடையது. இந்தியப் பண்பாட்டின் மரபில் பல்வேறு மதங்களையும் வழிபாட்டு முறைகளையும் காணலாம். அவற்றுள் பெரும்பான்மையும் போற்றப்படும் மதமாகக் கூறப்படும் இந்துமதம் சைவம், வைணவம் போன்ற பிரிவுகளுடனும் பல்வேறு வழிபாட்டு மரபுகளுடனும் காணப்படுகின்றது. பெரும்பான்மையான மக்களிடம் காணப்படும் தெய்வ வழிபாடுகளை இன்றைய நிலையில் இந்து மதத்தோடு இணைத்து பார்க்கும் போக்கு காணப்படுகிறது.

மனித வாழ்வு எவ்வளவு சிறப்புடையதாயினும் ஆன்மீக நெறியுடன் ஒன்றுபடும்போதுதான் அவ்வாழ்வு நெகிழ்வும் நிறைவும் பெறுகிறது. சங்க காலத்திலிருந்தே மனித சமுதாயம் ஐவகை நிலத்திற்கேற்பக் கருப்பொருள் வகுத்துத் தெய்வத்தைச் சுட்டி, வழிபாடுகள் நடத்தியமை புலப்படும்.

குறிஞ்சிக்கு முருகனும், முல்லைக்குத் திருமாலும், மருதத்துக்கு வேந்தனும், நெய்தலுக்கு வருணனும், பாலைக்குக் கொற்றவையும் தெய்வங்களாக வணங்கப்பெற்றனர். மேலும் சிறு தெய்வங்கள், நடுகல் தெய்வங்கள், பேய்ப்பெண்டிர் முதலியோரை வழிப்பட்ட குறிப்புகளும் சங்க அக இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன.

ஐவகை நிலத் தெய்வங்களுள் 'சிவபெருமான்' வழிபடு கடவுளாக இல்லை எனத் தெரியவரினும் சிவபெருமான் பரம்பொருளாகக் கருதப்பட்டமை புலப்படும். செம்மை என்ற சொல்லில் பிறக்கின்ற செம்பொருள் எனும் சொல் பரம்பொருளாகிய சிவனைக் குறிப்பதாகும். சங்க இலக்கியங்களில் சிவன் என்ற பெயர் குறிப்பிடப்படவில்லையாயினும் முக்கண்ணன், நீலமிடற்றன், கண்டங் கரியன் என்னும் பதங்கள் சிவனையன்றி வேறு யாரைக் குறிப்பதாக அமையும்.

## பரம்பொருள்

பரம்பொருள் என்னும் ஒருவரேதான் அந்தப் பரம்பொருளே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் இவ்வுலகத்தில் நடத்த மூன்று உருவங்களைக் கொண்டுள்ளார். அந்நிலையில் பிரம்மன், விஷ்ணு, உருத்திரன் என்று மூன்று பெயர்களைக் கொள்கிறார். தாம் செய்கின்ற இந்த மூன்று தொழில்களுக்கேற்ப மூன்று குணங்களையும் பெறுகிறார். படைக்கும் பிரமனாக இருக்கும்போது ரஜோ குணத்தையும் பெறுகிறார், காக்கும் விஷ்ணுவாக இருக்கும்போது ஸத்துவ குணத்தையும், அழிக்கும் உருத்திரனாக இருக்கும்போது தமோ குணத்தையும் மேற்கொள்கிறார். ஒரே மனிதன் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப பல குணங்களைக் காட்டுவது போன்றது இது. மனிதர் இயற்கையாகவே இந்த குணங்களைப் பெற்றே உள்ளனர்; இறைவனோ வேண்டுமென்றே தானாகவே கொள்கிறான்.

இறைவனே பல வடிவங்களில் பல செயல்களைச் செய்வதாகக் கொள்ள வேண்டும். ஒரு மனிதனையே தந்தை, கணவன், பாட்டன் என கூறுவதுப் போல, பிரம்மம் செய்யும் தொழில்களின் அடிப்படையில், பிரம்மா, விஷ்ணு, சிவன் என்று அழைக்கப்படுகிறது. இந்த மூன்று முக்கியத் தொழில்கள் அனைத்தையும் செய்யும் இறைவனையே ஓம் (அ+உ+ம்) எனும் குறியால் அறிகிறோம்.

அதில் ‘அ’ என்பது விஷ்ணுவையும், ‘உ’ என்பது சிவனையும், ‘ம்’ என்பது பிரம்மாவையும் குறிக்கும்.

## பிரம்மா

பிரம்மா - மும்மூர்த்திகளில் முதலிடம் பெறுபவர். படைத்தல் தொழிலைச் செய்பவர். நான்கு கரங்களும், நான்கு புஜங்களும் உடையவராகச் சித்தரிக்கப்படுகிறார். இவருடைய நான்கு தலைகளும் நான்கு திசைகளைக் குறிக்கின்றன. நான்கு புஜங்களும் நான்கு வேதங்களைக் குறிக்கின்றன. தாமரை மலரில் வீற்றிருப்பவர், கல்விக் கடவுளான சரஸ்வதியே பிரம்மாவின் தேவி ஆவார்.

## திருமால்

மும்மூர்த்திகளில் இரண்டாம் தெய்வம் திருமால் ஒற்றுமையை வலியுறுத்தும் தெய்வமாகக் கருதப்படுபவர் விஷ்ணு. மேலும் உலகத்தை காப்பவராகவும் சித்தரிக்கப்படுகிறார். விஷ்ணுவை வணங்குபவர் வைணவர் என்று அழைக்கப்படுகின்றனர் கடலில் இருந்து வெளியே தெரியும் பாம்பின் மேலிருந்து காட்சி அளிக்கிறார் விஷ்ணு. அவர் தொப்பில் கொடியிலிருந்து தாமரைப்பூ ஒன்று வெளிவருகிறது. கையில் சங்கு ஒன்றைப் பிடித்துக் காட்சி அளிக்கின்றார். இந்தச் சங்கு ஐம்பெரும் பூதங்களான நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், பூமி ஆகியவற்றைக் காட்டுகிறது.

திருமால் அனைத்து மக்களாலும் வணங்கப்படுபவர். அடியார்களின் பேரின்ப உணர்வுகளைப் போற்றி வளர்ப்பவர். சமயம் வைணவம் திருமால் 24 அவதாரங்கள் எடுத்துள்ளதாக வைணவர்கள் நம்புகின்றனர். அவற்றில் மிகவும் முக்கியமானவை இந்தப் பத்து அவதாரங்கள் பற்றி அனைவரும் நன்கு அறிவர் 1. மச்ச (மீன்) அவதாரம் 2. கூர்ம அவதாரம் (ஆமை) 3. வராக அவதாரம் (பிரம்ம அவதாரம்) 4. நரசிம்ம அவதாரம் (பாதி மனிதன் பாதி சிங்கம்) 5. வாமன அவதாரம் (குள்ளமான வடிவம்) 6. பரசுராம அவதாரம் 7. இராம அவதாரம் 8. பலராம அவதாரம் 9. கிருஷ்ண அவதாரம் 10. புத்தர் அவதாரம் உலகத்தை அழிக்க விஷ்ணு கடைசியாக எடுக்கப் போகும் அவதாரம் கல்கி அவதாரம்.

அவர் சக்கரத்தைக் கையில் தாங்கியுள்ளார். இது மனத்தைச் சித்தரிக்கிறது. கையில் வில் வைத்து இருப்பது அதிகாரத்தைக் குறிக்கிறது தாமரை உலகத்தைக் குறிக்கிறது. அதர்மம் தலை தூக்கும் போது அதை அழிக்கவும் நல்லது நடந்தால் அதை பாதுகாப்பதாகவும் ஆண்டவன் அவதரிக்கிறார். உலகத்தில் எப்போதெல்லாம் அநீதி நடக்கிறதோ அப்போது திருமால் மனிதனாக பிறப்பெடுத்து நீதியை நிலைநிறுத்துவார் என்று நம்புகிறார்கள். அப்படிப்பட்ட திருமாலை வணங்குவதை பண்பாட்டு மரபாக கொண்டிருந்தார்கள். 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்றாற்போல் முல்லை நிலக்கடவுளாகிய திருமாலை வணங்குவதை அகநானூறு சுட்டுகிறது.

***"செவ்வழி நல் யாழ் இசையினேன் பை யெனக்***
***கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்ந்திறுத்"***[7]

என்ற அடியானது, தலைவன் பிரிந்து சென்ற காலத்தில் வருந்திய தலைவியானவள், தன் எதிரே சென்ற பாணனைப் பார்த்து இக் கார்காலத்து மாலைப் பொழுதில் நம் தலைவர் வாராது இருப்பாராயின், காலைப் பொழுதை

நான் எவ்வாறு ஆற்றுவேன் என கேட்கிறாள். அதற்கு பாணன், தன் செம்மையான நல் யாழினை இசைத்து தங்கள் நிலத் தெய்வமாகிய திருமாலை பல நறுமணப் பூக்களினால் அர்ச்சித்து வணங்கி வாழ்த்தி வருத்தத்துடன் தலைவன் இருக்கும் இடம் நோக்கிச் சென்றான் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது.

மனிதனுக்கு வருத்தம் நிகழும்போது இறைவனை நாட வேண்டும். மனிதனை பண்படுத்தி நெறிப்படுத்தக் கூடிய ஒன்று இறையுணர்வு என்று பாணன் கூறுவது இங்கு குறிப்பிடத்தக்கது. அந்நிலையே இன்னும் நம் பண்பாட்டு மரபில் நிலவி வருகின்றது. மனிதன் தன் இன்பச் சூழலில் இறைவனை தேடிச் செல்கிறான் என்பது நாம் அறிந்த உண்மையாகும்.

***“அண்டர் மகளிர் தண்டழை உடீஇயர்***
***மரஞ்செல மிதித்த மா அல்போலப்”[8]***

என்ற தொடரானது ஆண் யானையானது, தன் பெண் யானை உண்ணுவதற்கு ஏற்றவாறு அழகிய தளிரையுடைய மாமரத்தின் கிளையை மிதித்துக் கொடுத்ததாம். இச்செயலானது, யமுனையாற்றின் துறையிடத்தில் ஆயர் பெண்கள் குளிக்கும்போது அவர்களின் ஆடைகளைக் கவர்ந்த கண்ணன் அங்கு இருந்த மரத்தில் ஏறி அமர்ந்தான். அவ்வேளையில் நம்பி மூத்தபிரான் அங்கு வர, அப்பெண்கள் தம்மை மறைப்பதற்கு வழிதெரியாமல் தவிக்க, அதைக் கண்ட கண்ணபிரான் தான் ஏறி நின்ற குருந்த மரத்தின் கொம்பைத் தாழ்தி கொடுத்தார். அதற்குள்ளே அடங்கி மறைவாய் நின்றனர் என்று கண்ணனின் விளையாட்டுப் பண்பினையும் பிறருக்கு இரங்கும் அருட் பண்பினையும் இங்கு வெளிப்படுத்துகிறார். இதனை,

***“உயர்கொள் சோலைக் குருதொசித்து***
***முட்பட மற்றும் பல ..........”[9]***

உணர்த்துகிறது.

## சிவன்

மும்மூர்த்திகளில் மூன்றாம் இடம் பிடிப்பவர் சிவபெருமான் ஆவார். அதிக சக்தியும் துடிப்பான ஆற்றலும் படைத்தவர் சிவன். சைவத்தின் முழுமுதற்கடவுள் என்பதனைத் தமிழரின் வழிபாட்டு முறைகள் குறிப்பிடுகின்றது. அதனாலன்றோ தென்னாடுடைய சிவனே போற்றி என திருவாசகம் எடுத்தியம்புகின்றது. சிவன் நடனராஜன், நடராஜர் என்றும் அழைக்கப்படுபவர். தீய சக்திகளை அழிக்கக் கூடியவர். சுடுகாட்டை ஆட்சி செய்பவர். சுடுகாட்டுச் சாம்பலை உடலெங்கும் பூசி மகிழ்பவர். கங்கை நதியை சடையிலும், கழுத்தில் பாம்பையும், தலையில் பிறை நிலவையும் தாங்கிக் காட்சி அளிப்பவர். உருவான அண்டம் என்றாவது ஒருநாள் அழிந்துதான் தீர வேண்டும் என்ற நோக்கோடு, அழிக்கும் தொழிலை செய்பவர் சிவன். பார்வதியை மணந்து விநாயகருக்கும், முருகருக்கும் தந்தை ஆனவர்.

பரமசிவன்; அவருடைய கொடி காளைக் கொடி பார்வதியுடன் வீற்றிருப்பார். அவர் கொன்றை மலர் மாலையை அணிந்தவர் உடையாக புலித்தோலை அணிந்தவர். கொடிகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்னும் கூத்துக்களை ஆடியவர்.

சிவனைப் பற்றிய வரலாற்றைப் பரிபாடலில் காணலாம். அவர் திரிபுரத்தை எரித்த வரலாறு சுட்டப்படுகின்றன. சிவபெருமான் முப்புரம் ஆகிய அரக்கரை அழிக்கப் புறப்பட்டபோது பூமியைத் தேராகவும், வேதங்களை அத்தேரில் பூட்டப்பட்ட குதிரைகளாகவும் கொண்டு, நான்முகனைத் தேர்ப் பாகனாக்கிச் செலுத்தச் செய்தான். நான்முகன் முறையாகச் செலுத்திய அத்தேரில் ஏறி இமயமலையையே வில்லாகவும், வாசுகி என்ற பாம்பினை நாணாகவும் கொண்டு ஒரு தீய அம்பினால் சிவபெருமான் முப்புரங்களை எரித்தான் என்னும் தொன்மச் செய்தி

***“ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ,***
***வேத மா பூண் வையத் தேர் ஊர்ந்து,***
***நாகம் நாணா, மலை வில்லாக,***
***மூவகை ஆர் எயில் ஓர் அழல் அம்பின்***
***மாதிரம் அழல எய்து அமரர் வேள்விப்***
***பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்”[10]***

என்னும் இப்பரிபாடலில் சிவபெருமானைப் பற்றித் தெரிந்துக் கொள்ளலாம்.

மேலும் சிவனைப் பற்றிய மற்றொரு செய்திகளாக அகநானூற்றில் ‘காப்பு’ பாடலாகிய வாழ்த்தில் சிவபெருமான் போற்றிப் பாடப்பட்டுள்ளார்.

***“முதிராத் திங்களொடு சுடருஞ் சென்னி***
***மூவாவரைரும் முனிவரும் பிறரும்***
***யாவரும் அறியாத் தொன்முறை மரபின்***
***வரிவிலார் வாணான் உரிவை தைஇய***
***யாழ்கெழு மணிமிடற்றந்தணன்***
***றாவில் தான்நிழல் தவிர்ந்தன்றால் உலகே”[11]***

என்பது கார்காலத்தில் மலர்ந்த கொன்றை மலர்களால் கட்டப்பட்ட மாலையினையும் இளம்பிறையோடு விளங்கும் சென்னியையும் மூவாத தேவரும் முனிவரும் பிறகும் முற்கூறிய யாவரும் தன்மையை அறியாத, பழமையான மரபினோடு விளங்கி வெற்றி பொருந்திய புலியது தோலை இடையிற் கச்சாகக் கட்டியவன், சாமவேதம் பாடிய நீலமணி போலும் நிறத்தை உடைய மிடற்றினையுமுடையவன் அவ்வந்தணனது குற்றமற்ற திருவடி நிழலில் உலகம் நீங்காமல் தங்கிற்று, ஆதலால், இவ்வுலகினுக்கு ஓர் இடையூறும் இல்லை என்று சிவனின் புகழைப் போற்றுகின்றார் புலவர்.

சிவபெருமானின் திருவடியின் நிழலில் இவ்வுலகம் நிலைபெற்றால் மக்களுக்கு எவ்வித துயரங்களும் நிகழாது என்றும், அத்தகைய துன்பங்களை போக்கி நம்மைப் பாதுகாப்பான் என்றும் சிவனைப் போற்றி வணங்கினர்.

எனவே சங்ககால இலக்கியங்களில் சமயங்கள் இருந்ததெனினும் சமய ஆதிக்கமில்லை. 'சிறியன எல்லாம் சிறுமையானவை அல்ல' என்றதன்படி, காதல், வீரம் விரிவாகப் பேசப்பட்ட நிலையில், வழிப்பாட்டுப் பாடல்கள், சிறிய அளவில் பாடப்பட்டு வந்தன. ஆகவே தான் பாடுவது அகப் பொருளாயினும், வீரமாயினும் தெய்வத் தொடர்பான கதைகள் இடம்பெற்று தெய்வ வழிபாட்டின் சிறந்த இடத்தைப் புலப்படுத்துகின்றன.

## வழிபாடு

"வழிபாடு எனும் சொல் 'வழிபடு' என்ற சொல்லிலிருந்து தோன்றுகிறது. வழி - இறைப்பேற்றிற்குரிய, பாடு - அடைவதற்குரிய செயல்முறைகளே வழிபாடு எனப்படும் என்று தமிழ் அகராதி குறிப்பிடுகின்றது. வழிபடுதல் என்னும் இரண்டு சொற்கள் ஒன்றாக இணைந்து வழிபாடு என்றாயிற்று என்றும் குறிப்பிடலாம்".[12] "வழிபாடு என்னும் சொல்லிற்கு வழியிற் செல்லுகை, பின்பற்றுதல், வணக்கம் வழக்கம் எனத் தமிழ்ப் பேரகராதி சமயக் கோட்பாடுகளைத் தருகிறது."[13]

"வழிபாடு என்பது ஆண்டவன் வழியிலோ ஆன்றோர் வழியிலோ படுதல் என்பதாகும். படுதல் என்ற தொழிற் பெயரில் உள்ள முதல் எழுத்து நீண்டு பாடு என்றாகி வழிபாடு என்றாயிற்று. இறைவனை வழிபடுதல், குருவழிபடுதல், பெற்றொர் வழிபாடு போன்றவைகள் மட்டும் வழிபாடு அல்ல, செய்யும் செயல்கள் முறைமையோடு ஆற்றப்படி அதுவும் சிறந்த வழிபாடு ஆகும். இதனையே கர்ம யோகம் என்று கீதையில் கண்ணன் உரைக்கின்றார்."[14] என வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

வழிபாடு என்பது மக்கள் வாழ்வில் இன்றியமையாத இடத்தினைப் பெற்றுள்ளது. எந்த ஒரு செயலையும் தொடங்குமுன் இறைவனை வழிபடுவது தொன்றுதொட்டு வழங்கி வரும் ஒரு செயலாக இன்றுவரை நடந்து வருகிறது. வழிபாடு ஆன்மாவை அமைதிப்படுத்தும் ஓர் வழிமுறை எனலாம். இவ்வழிபாட்டினை செய்யும் போது சில வழிமுறைகள் கடைபிடிக்கப்படுகின்றன. இவ்வழிபாட்டு முறைகளைப்பற்றி சங்க அக இலக்கியங்கள் பல செய்திகளை இயம்புகின்றன.

## வழிபாட்டின் தோற்றமும் வரலாறும்

மனிதன் முதன்முதலில் இயற்கையையே வழிபட்டு கடவுளாக வணங்கினான் என்பர். பெரும் இயற்கைச் சீற்றங்களையும் இடர்களையும் கண்டு அஞ்சியும், வியந்தும் அவை தம்மைப் பாதித்துவிடக் கூடாது எனக் கருதி மனிதன் இயற்கையை வணங்கத் தலைப்பட்டான் என்று அறியலாம். அச்சம், வியப்பு மட்டுமல்லாமல் நல்ல உணர்வு காரணமாகவும் இயற்கை வழிபாடு தொடர்ந்தது என்று குறிப்பிடலாம். தம்மைக் காத்து வாழ்வளித்த சூரியன், பூமி, சந்திரன் மற்றும் உணவு அளித்த மரங்கள், பயிர்கள் அவை வளரக் காரணமான மழை இவற்றையெல்லாம் நன்றி உணர்வின் அடிப்படை-யிலேயே அவன் வணங்கினான் என்பது பொருந்துவதாகும்.

“இனக் குழுவாக மனிதன் வாழ்ந்த காலத்தில் ஒரு குழுவின் உறுப்பினர்களைப் பிற குழுக்களிடமிருந்து கொடிய விலங்குகளிடமிருந்து காத்த வலிமையுடைய வீரன் ஒருவனைத் குலக்கடவுளாக தம் குழுவின் தெய்வமாக வணங்கிய நிலை அடுத்த வழிபாட்டு நிலையாகும்.”[15] என்று ஜான் பீட்டர் குறிப்பிடுகிறார்.

நம்மைப் படைப்பதும் காப்பதும், அழிப்பதும், கடவுளின் செயல்களே என நினைத்து ஒவ்வொரு தொழிலுக்கும் ஒவ்வொரு கடவுளை உருவாக்கி அக்கடவுளர்களுக்கான வழிபாட்டு முறைகளையும் புராணங்களையும், ஆகமங்களையும் உருவாக்கி மதங்கள், நிறுவனங்களாக உருவான தன்மை அடுத்த நிலையிலான வழிபாட்டு முறையாகும்.

பழங்காலங்களில் வழிபாடு என்பது இயற்கையைச் சார்ந்தே இருந்தது. ஏனெனில் இயற்கை விளைவித்த சீரழிவுகளிலிருந்து தப்புவதற்காக அவற்றினை (மழை, சூரியன், காற்று, சந்திரன்) வணங்கத் தொடங்கினான் எனலாம்.

இவை மட்டுமின்றி தொல்லை தரும் உயிரினங்களையும் வணங்கினான். (பாம்பு, யானை, குரங்கு) இவற்றை தொடர்ந்து முன்னோர் வழிபாடு தோன்றிய அவை தலைமை வழிபாட்டு முறையாக இன்றளவும் இருந்து வருகிறது. தன் குடும்பத்தில் இனத்தில் ஊரில் அல்லது பெரும் செயலினைச் செய்த தலைமகளை தெய்வமாகக் கொண்டு வழிப்பட்டனர். இத்தகைய தெய்வங்கள் கிராமங்கள் தோறும் இன்றும் இருக்கின்றன.

வழிபாட்டினைச் சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு என்று இரண்டாக வகைப்படுத்துவர். முனி, கருப்பன், வீரனார், அய்யனார் முதலியன சிறு தெய்வங்கள் என்றும், சிவன், பெருமாள், விநாயகர், முருகன், காளி முதலியன பெருந் தெய்வங்கள் என்றும் கூறுவர். மனிதன் விலங்கு நிலையில் இருந்து மனித நிலைக்கு உயர்ந்த குழுவாக இணைந்து நின்றபோது, சிந்திக்க தொடங்கியதன் வெளிப்பாடே வழிபாடு ஆகும்.

வழிபாட்டைப் பற்றிக் கூறும்போது ஆய்வாளர் அமுதா, “தொடக்ககால மனிதரின் வாழ்வு பல்வேறு இயற்கை அபாயங்களால் சூழப்பட்டிருந்தது. அதற்கான காரணங்களைப் புரிந்துகொள்ள இயலாத நிலையில் இருந்த மனிதன்,

தன் சொந்த உடலின் இயக்கத்தையே பல்வேறு மாதிரிகளாகக் கொண்டு ஒவ்வொரு இயற்கைகளையும் வழிபட்டால் அது தன்னை ஒன்றும் செய்யாது என்றும்; நன்மை செய்யும் என்றும் நம்பினான். இயற்கை விளைவிக்கும் பல்வேறு தாக்குதலிலிருந்து தம்மை காத்துக்கொள்ளவும், மனிதன் தன் அறிவின் மூலம் பல்வேறு சாதனங்களை கண்டுபிடித்துவிட்டாலும் இயற்கைச் சக்திகளாகிய பஞ்ச பூதங்களைத் தெய்வங்களாக வழிபட்டு வந்து, மரபுவழி வந்து, புராதனக் கடவுள் வழிபாட்டுக் கொள்கையில் தன்னுடைய பலமான சுவடுகளை பதித்துக் கொண்டிருப்பதை இன்றைய நடைமுறையில் காணமுடிகிறது என்று கூறுகிறார்."[16]

## இறை வழிபாடு

சங்ககாலத் தமிழ் மக்கள் உயர் பண்பாட்டு மரபு உடையவர்கள் என்பதனை அவர்கள் கொண்டிருந்த இறை நம்பிக்கையை காட்டுகிறது. கடவுள் என்னும் சொல்லே அவர்கள் கடவுளைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தினை நன்கு விளக்கும். 'கடவுள்' என்றால் உள்ளத்தை கடந்தது என்பதாகும். உள்ளத்தாலும் உணர இயலாத இயல்பினது 'கடவுள்' என்பதுதானே கடவுளைப்பற்றிய உண்மைக் கொள்கையாகும். இதனை நன்கு தெரிந்திருந்தனர் என்பதனைக் 'கடவுள்' என்னும் சொல் புலப்படுத்துகின்றது.

ஆகவே சங்ககால மக்கள் அச்சத்தால் பாம்பையும் மின்னலையும் இடியையும் பேயையும் வழிப்பட்டனர் என்னும் கூற்று உண்மையோடு பொருந்தாதாகின்றது. கடவுளை அருவப் பொருளாகவே அறிந்து என்றும் கடவுள் உணர்வுடையவர்களாகவே வாழ்ந்தார்கள்.

யாவரும் இவ்வுலகில் உயிர் வாழ்வதற்கு உணவே இன்றியமையாதது என்பதனை அறியாதார் ஒருவரும் இலர். உணவுக்குப் பிறகுதான் ஏனைய

ஆயினும் சங்ககாலத் தமிழ் மக்கள் உணவினும் முதன்மையாகக் கடவுளைக் கருதி வாழ்ந்தனர்.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தில் பாடற்பொருள் முதல், கரு, உரி என வகுக்கப்பட்டுள்ளது. கருப்பொருள் பற்றிய நூற்பா,

***"தெய்வம் உணவே மாமரம் புட்பறை***
***செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ***
***அவ்வகை பிறவும் கருவென மொழிப"[17]***

என அமைந்துள்ளது. இதில் உணவுக்கு முன்பு தெய்வத்தை வைத்துள்ள சீர்மையை ஓர்ந்து உணர்விலும் தெய்வமே முதன்மையாகப் போற்ற வேண்டிய பண்பாட்டு மரபு ஒன்று என்று அன்று கருதியிருந்தனர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இன்றும் முதற் பொருளாம் நிலம் பற்றிக் கூறும்போது, நிலத்துக்குரிய பிற சிறப்புகளை விரித்துக் கடவுட் சிறப்பையே தொடர்புப்படுத்திக் கூறியுள்ளமையாலும், கடவுட் கொள்கைக்கு அக்கால மக்கள் வைத்திருந்த உயர்வினை எளிதில் அறியலாம். இதனைத் தொல்காப்பியர்,

***"மாயோன் மேய காடுறை உலகமும்***
***சேயோன் மேய மைவரை உலகமும்***
***வேந்தன் மேய தீம்புனல் உலகமும்***
***வருணன் மேய பெருமணல் உலகமும்***
***முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்***
***சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"[18]***

என்று கூறப்பட்டுள்ளது. முல்லைக்கு மாயோனும் குறிஞ்சிக்கு முருகனும் மருதத்திற்கு இந்திரனும், நெய்தலுக்கு வருணனும் கடவுளர்களாகக் கூறப்பட்டுள்ளனர்.

சங்க காலச் சமயம் சகிப்புத்தன்மை மிக்கது என்றும் குறிப்பிடலாம். பல சமயத்தைச் சார்ந்தவர்கள் வேறுபாடு இல்லாமல் அன்பையே இறைவனாகக் கருதி வாழ்ந்து இருந்தனர். எந்நிலத்தில் வாழ்ந்தவராயினும் அவர்கள் அன்பின் உண்மைத் தத்துவத்தை உணர்ந்தவர்களாக இருந்தனர். தாம் வாழும் நிலத்தின் தெய்வத்திற்குக் கோயில் கட்டினர்; விழா நடத்தினர்; மாலைகள் சூட்டி மனதார வாழ்ந்தனர் என்றும் குறிப்பிடலாம்.

கடவுளை உள்ளங் கடந்து உரைக்கும் அப்பாற்பட்ட அருவப் பொருளாகக் நினைத்த போதிலும் அதற்குப் பல்வேறு உருவங்களைக் கற்பித்துப் பல்வேறு வடிவங்களில் பல்வேறு முறைகளில் வழிபட்டனர். தம் குறை நீங்கவும் பிறர் குறை நீங்கவும் கடவுளைப் போற்றியுள்ளனர். பூவும் நெல்லும் படைத்துப் வழிப்பட்டனர். மக்களின் அறிவுநிலை, பண்புநிலை, மரபுநிலை முதலியவற்றிற்கு ஏற்ப கடவுள் வழிபாட்டு முறையும் அமைந்துள்ளது. மேலும் தமிழர்களின் பண்பாட்டின் அடிப்படை மரபாக இறைவழிபாடு உள்ளது. எந்த ஒரு நல்ல காரியங்களைத் தொடங்கும் முன்பு இறைவழிபாடு செய்த பின்பு தொடங்குவது என்ற நம் முன்னோர்களின் வழக்கத்தினை இன்றும் உள்ள நம் தமிழர்கள் கடைப்பிடித்து வருகின்றனர். ஐந்து நிலங்களில் கூறப்படும் இறை வழிபாடு பற்றி இங்கு காணலாம்.

## குறிஞ்சி நில வழிபாடு

குறிஞ்சி நில மக்கள் முருகக் கடவுளுக்குப் பலி கொடுத்து வழிபடும் முறை காணப்படுகிறது. தலைவிக்கு ஏற்படும் நோய்க்குக் காரணம்

என்னவென்று அறியாத தாய் ஒருவள் கட்டுவிச்சியை அழைத்துக் குறி கேட்கிறாள். கழற்சிக்காய்க் கொண்டு குறி சொல்லும் கட்டுவிச்சி தலைவிக்கு ஏற்பட்ட இந்நோய் முருகு அணங்கியதால் என கூறுகிறாள். இதனால் முருக வழிபாடு நடத்தும் வேலனை அழைத்து முருகனின் கோபம் தணிய பல வழிபாடுகள் நிகழ்த்தப்படுகிறது. அப்போது வேலன் ஆட்டுக்குட்டி ஒன்றின் கழுத்தை அறுத்து மலைப்பகுதியில் அதிகம் விளையும் தினை அரிசியை அதில் கலந்து பலவகை இசைக்கருவிகளும் ஒலிக்க முருகனுக்குப் படைக்கிறான். இதனைக் குறுந்தொகை,

***"மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்***
***செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்க***
***வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி"[19]***

எனக் குறிப்பிடுகிறது.

அகப்பாடல்களில் வருகின்ற முருக வழிபாடு என்பது பெரும்பாலும் வெறியாட்டுடன் தொடர்டையதாகவே அமைகிறது. வெறியாட்டு மற்றும் வழிபாட்டில் கடவுளுக்குப் பலியிட்ட செய்தி குறித்து அகப்பாடல்கள்,

***"பலி பெறு கடவுட் பேண்மார்"[20]***
***"நெடு வீழ் இட்ட கடவுள் ஆலத்து***
***உகுபலி அருந்திய தொகுகருங் காக்கை"[21]***
***"மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித்***
***தேம்பலிச் செய்த"[22]***

என்று குறிப்பிடுகின்றன. பழந்தமிழரின் வழிபாட்டு முறையில் பலியிடுதல் தமிழிரின் பண்பாட்டு மரபாகவும் கடைப்பிடிக்கப்படுகிறது.

## முல்லை நில வழிபாடு

முல்லை நில மக்களின் தெய்வம் 'திருமால்' எனத் தொல்காப்பியர் கூறுவதாலும் கண்ணன் இடைக்குலத்தில் பிறந்தவன் என்ற வரலாற்றாலும் அறியப்படுகிறது. மால், மாயோன் என்ற பெயர்கள் திருமாலைக் குறிப்பதாகும். வடக்கே உள்ள யமுனை ஆற்றங்கரையின் துறையில் நீராடிய ஆயர் மகளிர் தலையுடை உடுத்த விரும்பிய போது கண்ணன் குருத்த மரத்தை வளைத்துக் கொடுத்தான் என்னும் செய்தியினை மதுரை மருதன் இளநாகன் என்னும் புலவர்,

***"..............வாடா அது***
***வண்புனற் றொழுநை வார்மண் லகன்றுறை***
***யண்டர் மகளிர் தண்டழை யுடீயர்***
***மரஞ் செல மிதத்த மாஅல் போல"[23]***

என்று குறிப்பிடுவதால் அறியலாம்.

## மருதநில வழிபாடு

இங்கு வாழும் மக்கள் இந்திரனை தமது முழுமுதற் தெய்வமாகக் கொண்டு வழிபட்டனர். சங்க இலக்கியங்களில் இந்திரன் பற்றிய குறிப்பு இரண்டு நூல்களில் மட்டுமே காணப்படுகிறது. புறநானூற்றில் ஒள்ளிய தொடியினையும், வச்சிராயுதத்தையும் உடைய இந்திரனுக்குக் கோயில் கட்டி எழுப்பினர் என்பது பற்றியும் ஐங்குறுநூற்றில் இந்திரனுக்கு விழா எடுக்கப்பட்ட நிகழ்வு பற்றியும் பேசப்படுகிறது. இணை ஐங்குறுநூற்றில்,

***"இந்திர விழாவிற் பூவினன்ன"[24]***

எனக் குறிப்பிடுகிறது.

## நெய்தல்நில வழிபாடு

இங்கு வாழும் பரதவ மக்களின் தெய்வம் 'வருணன்' என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. தொகை நூல்களில் வருணன் பற்றிய குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை. பரதவ மக்கள் கடல் தெய்வத்தின் கோபம் தணிய உயிர்பலியிட்ட செய்தியை புறநானூறு குறிப்பிடுகின்றது. 'வருணன்' வழிபாடு தொல்காப்பியர் காலத்திற்கு முந்தையதாகவும் சங்க காலத்தில் அதன் செல்வாக்குக் குறையப் பெற்றதாகவும் கருதப்படுகிறது

## பாலை நில வழிபாடு

பாலை நில மக்களின் தெய்வமாக கொற்றவை கருதப்படுகிறது. குகைகளையும், பிளவுகளையும் உடைய மலைப்பக்கத்தில் வீற்றிருக்கும் வெற்றி தெய்வமாகிய கொற்றவைக்குப் பலியிட்ட செய்தியை குறுந்தொகை,

***"விடர் முகை யடுக்கத்து விறல்கழு சூலிக்குக்***
***கடனும் பூணாம்"***[25]

இறை வழிபாடு என்பது பண்டைய தமிழர்களிடம் முக்கிய இடம் பெறுகின்றது. தமது வாழ்வில் ஏற்படும் இன்ப துன்ப நிகழ்வுகள் அனைத்தும் தெய்வத்தால் உண்டானது என நம்பினர். நம்பிக்கைதான் வாழ்க்கை என்ற நிலையில் தமிழர்கள் இருந்தனர்.

ஐவகைச் சமுதாய மக்களும் தமக்கென தனித்தனியாக கடவுளர்களை வழிபட்டனர் அவர்களுக்கான தனித் தெய்வங்களும் இருந்தனர். முருகன், திருமால், இந்திரன், வருணன், கொற்றவை, சிவன் போன்ற பெருந்தெய்வங்களும், மலையுச்சி, நீர்த்துறை, மரம் போன்றவற்றில் குடியிருப்பதாகக் கருதப்படும் சிறு தெய்வங்களும் பழந்தமிழரின் இறைச் சிந்தனையை, நம்பிக்கையை நாளும்

நாளும் வளர்த்து வந்தன என்பதில் ஐயமில்லை. எனவே தமிழரின் சமயப் பண்பாட்டு மரபுகளில் இறைவழிபாடு முக்கிய இடத்தைப் பெறுகிறது.

## வழிபாட்டின் வளர்ச்சிக்கான மூலங்கள்

ஆதியில் மக்கள் இவ்வுலகை இயக்கும் சக்தி ஒன்று உண்டு என்றும் அதுவே இறைவன் என்றும் நம்பினர். இதனால் கட்புலனுக்கு எட்டாத இறைவனைப் பற்றிய எண்ணம் மேலோங்கி இயற்கையை வழிபட செய்தது. உருவமில்லாத இயற்கையில் மனநிறைவு பெறாத மக்கள் தனது மனநிறைவிற்காக கற்பனையும் தான் பயன்படுத்திய கருவிகளையும் நட்டு வழிபாடு செய்தனர். அதன் பொருட்டே பல தெய்வ நம்பிக்கை உருவாயிற்று. இவ்வாறு வழிபடுவது அந்தந்த சமயப் பண்பாட்டு மரபாகும் எனலாம்.

மனிதன் சிந்திக்க தொடங்கிய காலக்கட்டத்தில் அவன் சில பொருள்களை தனக்கு நன்மை செய்யும் சக்தியாகவே வழிப்பட்டிருக்க வேண்டும். மனிதன் இருண்ட காலக்கட்டத்தில் பல இன்னல்களைக் சந்தித்து இருக்க வேண்டும். அவ்வாறு சந்தித்த பொருள்களை, இடையூறு செய்வனவற்றையும், நன்மை செய்வனவற்றையும் அவன் வணங்கியிருக்க வேண்டும். அவ்வாறு வணங்கியவற்றை நாம் காணலாம்.

## இயற்கை வழிபாடு

1. சூரிய வழிபாடு
2. அக்னி வழிபாடு (நெருப்பு)
3. மர வழிபாடு
4. நீர் வழிபாடு
5. அணங்கு வழிபாடு
6. பூத வழிபாடு

7. தாய் தெய்வ வழிபாடு

8. நடுகல் வழிபாடு

9. கந்துடைத் தெய்வ வழிபாடு

10. இல்லுறை தெய்வ வழிபாடு

11. பத்தினி வழிபாடு

12. திருவிளக்கு வழிபாடு

இந்த வரிசையில் மனிதன் தனது வழிபாட்டைத் தொடங்கி இருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஆதிமனிதன் தோற்றம் கொண்ட நாள் முதல் அவன் வழிபாட்டை தொடங்கி இருக்க வேண்டும். ஏதோ ஒரு உணர்வு அவனை நிலைகுலையச் செய்திருக்க வேண்டும். அந்த உணர்வு பயத்தின் அடிப்படையில் உருவாகி இருக்கலாம். தனி மனிதனை பயமே முதலில் ஆட்டிப்படைக்கும். வழிபாடு தோன்ற அவனுடைய அச்ச உணர்வே முதன்மைக் காரணமாக இருக்கலாம். பின்பு அவனைச் சார்ந்த பின்புலங்களைக் கண்டு அஞ்சியிருக்க வேண்டும். ஏதாவது ஒரு நிகழ்வை எதனுடனாவது ஒப்பிட்டு அந்த நிகழ்விற்குக் காரணம் இது தான் என்று ஒன்றை ஒன்றுடன் தொடர்புபடுத்தி அவன் வாழ்ந்திருக்க வேண்டும். நாளடைவில் அவன் எண்ணங்களில் முதிர்ச்சியினால் அவன் அதனை சார்ந்த சிலவற்றை வணங்கி இருந்திருக்க வேண்டும். அப்படி தொடர்புப்படுத்திய பொருட்களையும் வணங்கிய, பயந்த சில வழிபாடுகளையும் காணலாம்.

## இயற்கை வழிபாடு

சங்க கால மனிதன் முதலில் இயற்கையை தான் வழிப்பட்டிருக்க வேண்டும். அவன் வாழ்ந்த வாழ்க்கையில் அதிகமாக மழை, இடி, மின்னல்,

காற்று முதலிய இயற்கை சக்திகள் வணங்கப்பட்ட நிலையிலிருந்திருக்கிறது. இவற்றுள் அக்னி (நெருப்பு) மிகவும் போற்றப்பட்டிருக்கிறது. எந்தவித வசதிகள் ஏதும் இல்லாத போது இரவும், இருளும் படுபயங்கரமாக இருந்திருக்கும். அப்போது கண்டறியப்பட்ட நெருப்பு மிக பயனுள்ளதாக அனைவருக்கும் இருந்திருக்கும்.

மக்கள் தங்களைச் சுற்றிலும் காணும் இயற்கைப் பொருள்களில் எண்ணற்ற தெய்வங்கள் உறைவதாக நம்பினர். மலை, காடு, மரம், நீர்நிலை, கடல் முதலியவற்றிலெல்லாம் தெய்வங்கள் உள்ளன என நம்பும் பண்பாட்டு மரபாக இருந்தனர். இத்தெய்வங்கள் மக்களை வருத்தும் இயல்பின என்றும் கருதினர்.

***“அணங்கொடு நின்றது மலை”*** [26]

என்று குறிப்பிடுகிறது.

## சூரிய வழிபாடு

சங்க கால மனிதன் இரவு வரும்போது வெளிச்சத்தை விரும்பினான். இருளைக் கண்டு அஞ்சினான். சூரியனால் வெளிச்சம் வந்தவுடன் மகிழ்ச்சி அடைந்து அதனைத் தெய்வமாக வணங்கினான். இச்சூரிய வணக்கம் மக்களிடையே நிலைபெற்ற வழிபாடாக வழிவழி வரக்கூடிய பண்பாட்டு மரபாகவும் உள்ளது. சூரியனைப் போற்றுவது தொன்மையான வழிபாடாகும்.

***“ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்”*** [27]

என்று சிலம்பு கூறுகிறது.

## கடவுள் வடிவில் சூரியன்

"சூரியனை வழிபடுவதனால் முக்கியமாகக் குஸ்டம் எனப்படும் பெருவியாதியிலிருந்து குணமடையலாம். கண் சம்மந்தமான நோய்களும் அவ்வாறு வழிப்பட்டு வந்தால் அவர்களுக்கு வராது என்றும் நம்பப்படுகிறது. இவை மரபாகவும் கடைப்பிடிக்கப்படுகிறது. தினமும் சூரிய வணக்கம் செய்து வந்தால் ஆரோக்கியமாக இருக்கலாம்".[28] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

## நெருப்பு வழிபாடு

"நெருப்பு மனிதன் வாழ்வில் மிகவும் இன்றியமையாத இடத்தினைப் பெறுகின்றது. நெருப்பின் பயனால்தான் மனிதன் நாகரீக வாழ்வினை அடைந்தான். தீ மனிதன் வாழ்விற்கு வெளிச்சமாக உள்ளது. தீயின் பயனால் மனிதன் உணவினைச் சமைக்கக் கற்றுக்கொண்டான். மனிதன் நாகரீகமடைந்தவுடன் நெருப்பு புனிதப்பொருள் எனக் கருதப்பட்டமையால் சமயச் சடங்குகளின்போது நெருப்பை வழிபடும் பண்பாட்டு மரபு ஏற்பட்டது. அதனோடு நெருப்பு அழிக்கும் ஆற்றலையும், தூய்மைப்படுத்தும் ஆற்றலையும், வெப்பம், ஒளி ஆகியவற்றைக் கொடுக்கும் ஆற்றலையும் கொண்டுள்ளதால் தொடக்கக் காலத்தில் நெருப்பு வழிபாட்டுக்கு உரியதாயிற்று. தொன்மை கிரேக்கர்களும் உரோமானியர்களும் உலகின் முதன்மையான கூறுகளும் நெருப்பையும் ஒன்றாகக் கருதினர். சில அமெரிக்க இந்திய பழங்குடியின் புத்தாண்டின் முதல் நாளன்று நெருப்பை உண்டாக்கி வழிபட்டனர்."[29] என க. வெள்ளைவாரனார் குறிப்பிடுகிறார்.

தமிழகக் கிராமங்களில் நடைபெறும் சில திருவிழாக்களின் போது தீ மிதித்தல் சடங்கு நடைபெறுகிறது. வேண்டுதலுக்காக மக்கள் இச்சடங்கினை விரதமிருந்து மேற்கொள்கின்றனர். இங்ஙனம் நெருப்பு வழிபாடு பிறப்பு, இறப்பு, திருமணம், ஏற்பு சடங்கு போன்ற அனைத்திலும் மேற்கொள்ளப்படுகின்றது.

## மர வழிபாடு

மரங்களை மனிதன் தெய்வமாகவும் எண்ணுகிறான். மரத்தினால் மனிதனுக்குப் பெரும்பயன் கிடைக்கின்றது. மரத்தின் மூலம் தான் மனிதனுக்குக் காய்கனிகள் கிடைக்கின்றன. மரத்தினால் அடுப்பெரிக்க விறகுகள் மற்றும் அவன் வாழும் குடிசைக்கு மரமாகவும் பயன்படுகிறது.

"மரங்களைத் தெய்வமாகக் கருதி வழிபடுவது பாரதப் பண்பாட்டு ஆகும். மரபு பலவகையான மரங்களில் ஐந்து மரங்கள் மிகவும் சிறப்பானதாகக் கருதுவது உண்டு. அவை அரசமரம், அத்திமரம், அசோகமரம், ஆலமரம், வில்வமரம் என்பவையாகும். இவற்றை பஞ்சவடி என்று சொல்வது பழக்கம்".[30] என விக்டர் குறிப்பிடுகிறார்.

ஐம்பூதங்களால் நிகழக்கூடியனவற்றைக் கண்டு அஞ்சி மக்கள் வழிபட ஆரம்பித்தனர். ஐம்பூதங்கள் பற்றித் தொல்காப்பியர்,

***"நிலம், தீ, நீர், வளி விசும்போடைந்தும்***
***கலந்த மயக்கம் உலக மாதலின்"[31]***

என்று குறிப்பிடுகிறார்.

தமிழ்நாட்டில் பண்டைய நாளில் மரங்களில் இறைசக்தி இருந்ததாகக் கருதி வழிப்பட்டமையை அறியமுடிகிறது. கடவுள் என்ற சொல் இத்தகைய தெய்வ சக்தியைக் குறிப்பதாக உள்ளது. நாட்டில் உறையும் கடவுள் மரஞ்செடி கொடிகளிலும் மலர் மண்டிகிடக்கும் சோலைகளிலும் உறைதல் வியப்பன்று. இதனை அகநானூற்றில்,

***“தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்”[32]***

ஆலமரம், மாமரம், ஓமை, பனை, கள்ளி என்றும் மரங்களில் கடவுள் உறைதல் குறிப்பிடப்பட்டுள்ளது. மரங்களில் கடவுள் உறைதல் கடவுள் பிறர்க்கு அச்சம் செய்தலின் முதிர்ந்த இயல்புடையதாகும்.

## நீர் வழிபாடு

இயற்கையின் அருளால் கிடைக்கக்கூடிய நீரினை முன்னோர்கள் பண்பாட்டு மரபாக வழிப்பட்டனர். அருவிகளையும் சுனை, ஆறு, கடல் போன்றவற்றை வழிபட ஆரம்பித்த மக்கள் பின்பு இந்நீர்துறைகளில் தெய்வம் உறைவதாக எண்ணி வழிபட்டதனைச் சங்கப் பாடல்களில் விளக்குகின்றன.

***“உண்துறை அணங்கு இவள்”[33]***

***“துறை எவன் அணங்கு”[34]***

***“அருந்திறற் கடவுள் அல்லன்”[35]***

என வரும் ஐங்குறுநூற்று அடிகள் மகளிரை வருத்தும் நீர்த்துறைத் தெய்வங்களைச் சுட்டிக் காட்டுகின்றன.

***“கடவுள் கற்சுனை”[36]***

***“சூர்ச் சுனை”[37]***

என்பன சுனை உறை தெய்வத்தைக் குறிக்கும். மரங்களில் உறையும் கடவுளர்களுக்கு மறி பலியிட்டு, கள், கண்ணி முதலியவற்றைக் காணிக்கையாகச் வெலுத்துதல் போலவே நீரையும் கடவுளுக்கும் வழிபாடு செய்யும் வழக்கமும் இதன்வழி தெரிய வருகிறது. இதனை,

*“கள்ளும் கண்ணியும் கையுறையாக*

*நிலைகோட்டு வெள்ளைநால் செவிக்கிடா அய்*

*நிலைத்துரைக் கடவுட்கு உள்பட ஒச்சி”[38]*

எனவரும் அகநானூற்றுப் பாடற்பகுதியில் காணலாம்.

## அணங்கு வருத்தும் தெய்வம்

‘அணங்கு’ என்ற சொல் ‘வருத்தும் தெய்வம்’ என்ற பொருளில் குறிக்கிறது. அணங்குதல் வருந்துதல். மக்களைத் தீண்டி வருத்தும் இயல்புடைய அணங்குகளைத் ‘தாக்கு அணங்கு’ என்று புலவர்கள் குறிப்பிடுகின்றனர்.

*“முப்புடை முது பதிதாக்கு அணங்கு உடைய*

*காப்பும் பூண்டிசின் கடையும் போகலை”[39]*

தாக்கு அணங்கு தம்மை எதிர்ப்பட்டார்களைத் தாங்கும் என்பதும், சிறப்பாகக் கன்னி மகளிரைத் தீண்டி துன்புறுத்தும் என்பதாகும். வருத்தந் தரக்கூடிய மற்றொரு தெய்வம் சூர் என்பதும், மலைநாட்டில் உள்ள வழிகளில் செல்லுவதற்கு கொடுமை செய்யும் சூரும் உண்டு என்பதனை,

*“உருகும் சூரும் இரைதேர் அரவமும்”[40]*

என்ற குறுந்தொகை மூலம் அணங்கு வருத்தக்கூடிய தெய்வம் என்றும், இவை பிறரைக் கொன்று துன்பம் செய்வன என்றும் இதன்வழி அறிய முடிகிறது.

## பூத வழிபாடு

*“பூதம் தந்த பொரிஅரை வேங்கை”[41]*

என்பது பூதம் குடிகொண்டுள்ள இடம் வேங்கை மரம் என்பதாகும். இப்பூதங்கள் காளி கோயிலின் வாயிலின் நின்று காவல் புரிதலும் தெரிய வருகிறது. காளியின் படைகளில் பேய்ப்படையைப் போல இப்பூதப்படைகளும் அவளுக்குத் தொண்டு புரிந்து வருவன.

## தாய்த் தெய்வ வழிபாடு

பெண்களைத் தெய்வமாக வழிபடும் பண்பாட்டு மரபு நம் முன்னோர்களிடையே காணப்படும் அவை இன்றும் தொடர்கின்றன. இத் தாய்த் தெய்வ வழிபாடு மிகவும் சிறப்பிற்குரியன ஆகும். 'ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே' என்று பெரியோர்கள் கூறுவர். மொகஞ்சதாரோவிற் கிடைத்துள்ள பெண் வடிவங்களில் காண்போர் அஞ் சத்தக்க முகத்தோற்றமுடைய பெண் வடிவங்களும் காணப்படுகின்றன. மேலும், இவை பெண் தெய்வத்திற்குரிய ஆக்கல், அழித்தல், காத்தல் என்னும் மூன்று தொழில்புரியும் சக்தியின் நிலையைக் குறிப்பன ஆகும்.

"அயிரை மலையிற் கோயிற் கொண்ட இத்தெய்வம் எழுந்தருளிய காட்டினைக் 'கடவுட் பெரின கானம்' எனவும் பெருங்குன்றூர் கிழார் குறித்துள்ளார். தொல்காப்பியனார் கொற்றவை என்னும் தெய்வத்திற்கு நிலம் வகுத்திலர். காடும் மலையும் கூடிய நிலப்பகுதியிலே கொற்றவை வழிபாடு நிகழ்ந்தமை கடைச் சங்கச் செய்யுட்களில் குறிக்கப்பெற்றுள்ளது. எனவே முல்லையும் குறிஞ்சியும் வேனில் வெப்பத்தால் வளம் குன்றிய வழியாகிய சுரத்திலே வாழும் மறவர்கள் தம் குலத்தெய்வமாகக் கொற்றவையை வழிபட்டமையால் நடுநிலைத் திணையாகிய பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்னும் பொருளிலக்கண மரபு கடைச்சங்க காலத்தில் உருவாகியுள்ளதெனக் கூறமுடிகிறது. முல்லைநிலத் தெய்வமாகிய மாயோனுக்கு தங்கையும், குறிஞ்சி நிலத் தெய்வமாகிய சேயோனுக்குத் தாயாகவும் கொற்றவையை முல்லையும்

குறிஞ்சியும் திரிந்து பாலையாகிய சுரத்திற்குத் தெய்வமாகக் கருதினர்".[42] என ஆசிரியர் க. வெள்ளைவாரணார் தாய்த்தெய்வ வழிபாடு குறித்துக் கூறுகிறார். இவள் காடுகளில் வாழும் மறவர்களால் போற்றப்படும் வெற்றி மகள் என்பதை,

***"ஓங்கு புகழ் கான் அமர் செல்வி"[43]***

***"பெருங்காட்டுக் கொற்றி"[44]***

என்று சங்க அக இலக்கியப் பாடல்கள் கொற்றவை குறித்துப் பாடியுள்ளன.

## நடுகல் வழிபாடு

பழங்காலத்தில் நடுகல் வழிபாடு மிகச் சிறப்புடன் விளங்கியது. மேற்குறிப்பிட்ட வழிபாடுகளைப் போன்ற நடுகல் வழிபாடும் சிறப்புடன் நடைபெற்றது. இதற்கான சான்றுகள் சங்கஅக இலக்கியங்களில் காணப்படுகின்றன.

பண்டையக் காலத்தில் போர்க்களத்தில் பெருவீரங்காட்டிப் போர்புரிந்து வீரமரணம் அடைந்த வீரனுக்கு அவன் வீழ்ந்த இடத்தில் நடுகல் நட்டு வழிபடும் வழக்கம் பண்பாட்டு மரபாக இருந்தது. இதனை வீரக்கல் நடுதல் என்றும் குறிக்கின்றனர். இன்றும் சில இடங்களில் இறந்தோரின் நினைவுச் சின்னமாக நடுகல் நட்டு வழிபடுவதைப் பார்க்க முடிகிறது.

போர்க்களத்தில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு மட்டுமின்றி வடக்கிலிருந்து உயிர் நீத்தவர்களுக்கும், உடன்கட்டை ஏறிய மாதர்களுக்கும் கோயில் கட்டியவருக்கும், கால்வாய் வெட்டியவருக்கும், நரபலியாக வெட்டுண்டவர்க்கும், நற்காரியத்தின் பொருட்டுத் தற்கொலை செய்து கொண்டவர்களுக்கும், நிரைகவர்தல், நிரைமீட்டல் ஆகிய போர்களில் ஈடுபட்டு இறந்த வீரர்களுக்கும் நடுகற்கள் எடுக்கப்பட்டன. இவ்வாறு இறந்த வீரர்களின்

பெயர் பொறித்த வீரக்கல் எடுக்கப்பட்டது. விலங்குகளிடமிருந்து ஊர் மக்களை காக்கும் பொருட்டு அதனுடன் போர் புரிந்து இறந்த வீரர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டது. புலியுடன் போரிட்டு மாண்ட வடுகன் என்னும் வீரனுக்கு எடுக்கப்பட்டதாக மொத்தக்கல் என்னுமிடத்தில் உள்ள நடுகல் கல்வெட்டு கூறுகிறது. மனிதர்களுக்கு மட்டுமின்றி விலங்குகட்கும் நடுகல் எடுக்கப்பட்டது. 'கோவிவன்' என்ற நாய்க்கும் எடுக்கப்பட்டதாக நடுகல் கல்வெட்டைக் குறிப்பிடலாம்".[45] என வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

நடுகல் வழிபாட்டில் கடைப்பிடிக்கப்பட வேண்டிய சடங்குகள் குறித்துத் தொல்காப்பியம்,

***"காட்சி, கால்கோள், நீர்ப்படை நடுகல்***
***சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்"[46]***

என வரிசைப்படுத்துகிறது.

தாம் வாழும் நாட்டினைக் காப்பாற்ற வீரர்கள் போரில் வீரமரணம் அடைகின்றனர். அவர்களுக்கு நடுகல் நட்டு வழிபடுவது தமிழரின் பண்பாட்டு மரபாகும் என்பது நம்மால் உணர முடியும். வழிச் செல்வோருக்கு நிழல்தரும் வகையில் சிறு வழிகளிலும், பெரு வழிகளிலும் நெடுங்கல்லாக நடப்பெற்றன என்பதை,

***"பலர்க்கு நிழலாகி யுலகமிக் கூறூர்த்***
***தலைப் போகன்மையிற் சிறுவழி மடங்கி***
***நிலைபெறு நடுகல்ளாகிய கண்ணும்"[47]***

எனவும்,

***“எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்***

***அருஞ்சுரக் கவலை”[48]***

எனவரும் பாடலில் இனிது விளங்கும்.

வீரர்களின் பெயரும் பெருமையும் பொறிக்கப்பட்ட இந்நடுகல்லின் மேல் ஆறலைக் கள்வர்கள் அம்புகளை வைத்துத் தீட்டுவதால் அக்கல்லும் தேய்ந்து எழுத்துகளும் அழிகின்றன. இந்நிலையில் வழி செல்வோர் நடுக்கல்லிற் பொறிக்கப்பட்ட எழுத்துக்களைப் படித்து நடுக்கல்லாகிய வீரனது பெருமையை அறிய முயல்வர் என்ற செய்தியும் காணப்படுகிறது.

தமிழக மக்களிடையே இறந்தோர்க்கு செய்யும் இறுதிச் சடங்குகளில் நெடுங்காலமாக நிலைபெற்று வருவது சருக முடிவிற் கல்நிறுத்தி நீர்ப்படை செய்யும் இறுதிச் சடங்காகும். முன்னோர்கள் கொண்ட இவ்வழிபாட்டினை எதிர்கால தலைமுறையினர் நினைவுபடுத்துகின்றனர்.

## கந்துடைத் தெய்வ வழிபாடு

பண்டை மக்கள் கற்களில் தெய்வம் இருப்பதாக என எண்ணி அதனை நிறுத்தி வழிபட்டனர். சதுக்கம், சந்தி, மன்று, பொதி போன்றவற்றில் தெய்வங்கள் இருப்பதாக நம்பி அதனை வணங்கினர். இவற்றுள் சதுக்கம் என்பது நாற்சந்தி, சந்தி என்பது முச்சந்தி; ஐஞ்சந்தி என்பது மக்கள் கூடும் மரத்தடி மன்றம் ஆகும். பொதியில் என்பது எழில் அம்பலம் என பரிபாடல் சான்று பகரும். பொதியில் ‘கந்து’ எனப்படும் தறியை நட்டு வழிபாடு செய்தனர். இதுபோல பொதியிலின் சுவரில் கடவுள் உருவத்தை எழுதியும் வழிபட்டனர். இச்சுவர் தெய்வம் ‘எழுது அணி கடவுள்’ எனப்படும். இங்குள்ள தெய்வத்திற்குப் பெண்கள் வழிபாடு செய்து வந்ததைக் காணமுடிகின்றது. இதனை,

*“கொண்டி மகளிர் உண்; துறை மூழ்கி*

*அந்தி மாட்டிய நந்தா விளக்கின்,*

*மலர்அணி மெழுக்கம், ஏறிப்பலர் தொழ*

*வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்”*[49]

என்று பட்டினப்பாலை குறிப்பிடப்படுகிறது.

## இல்லுறை தெய்வ வழிபாடு

இல்லத்தில் உறையும் தெய்வங்கள் இல்லுறை தெய்வங்கள் எனப்படும். இல்லத்தில் உள்ள கதவு, நிலை, தூண், மாடம் என இவற்றில் உறைவதாக மக்கள் நம்பினர். இல்லுறை தெய்வம் மகிழும் பொருட்டு வாசலில் மலர் அணிதல், கொடிகளைக் கட்டுதல், மாலை வேளையில் விளக்கு ஏற்றி நெல்லும் மலரும் கொண்டு தூவி பலி செலுத்தி வழிபாடு செய்வதைப் பண்பாட்டு மரபாகவும் கொண்டனர். இல்லத்தில் மகளிர் வழிபடும் தெய்வங்களுள் ஒன்று பாவை என்பது, இது சுவரில் ஓவியமாக வரையப்பட்டு வழிபடப் பெற்றுவரும்.

*“தாழியும் மலர்பல அணியர், கேழ் கொளக்*

*காழ்ப் புனைந்து இயற்றிய வனப்பு அமைதோள் சுவர்ப்*

*பாவை பலி எனப் பெறாஅ”*[50]

என்பதாகும்

## பத்தினி வழிபாடு

பத்தினிப் பெண்ணைத் தெய்வமாகக் கருதி வழிபடும் வழிபாடு பத்தினி வழிபாடு என்று அழைக்கப்படுகின்றது.

சேரன் செங்குட்டுவனால் தொடங்கி வைக்கப்பட்டுள்ள இப்பத்தினி வழிபாடு, இளங்கோவடிகளால் இலக்கியத்தின் மூலம் பரப்பப்பட்டது. சங்க

வழிபாட்டின் ஒரு பகுதியாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது என்பதை இதன்வழி அறிய முடிகின்றது.

## திருவிளக்கு வழிபாடு

இறைவனுக்கு முன்னால் ஏற்றப்படும் விளக்கு திருவிளக்கு எனப்படும். இன்றைய தமிழர் வாழ்வியலில் திருவிளக்கு ஏற்றி வழிபாடு செய்வது ஒரு வகை சமயப் பண்பாட்டு மரபாக இருந்து வருகிறது. விழாக்களைத் தொடங்குகின்ற போதும் நற்செயல்களைச் செய்கின்ற போதும் குத்து விளக்கேற்றுதல் சிறப்புமிகு வழக்கமாகும் வீட்டின் உள்ளே திருவிளக்கு ஏற்றி வழிபாடு செய்வதும் மனையுறை தெய்வத்தைக் குலதெய்வத்தை வழிபாடு செய்யும் முறையாகவும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## திருவிழாக்கள்

ஒரு குறிப்பிட்ட நாளில் மனைவி, மக்கள், சுற்றத்தார், உற்றார், உறவினர் ஆகிய அனைவரும் கூடி மகிழ்ச்சியாக இருப்பதைத் திருவிழாக்கள் என்றும், பண்டிகைகள் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகிறது. இத்திருவிழாக்களில் தமிழரின் வழிவழியாக வரக்கூடிய பண்பாட்டு மரபினை எடுத்துக் கூறுகிறது. இவை பெரும்பாலும் சமய சார்புடையனவாக நடத்தப்பட்டு வருகின்றன.

“மனித சமுதாயம் பல்வேறு காரணங்களால் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்திருந்த போதிலும், அச்சமுதாயம் ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்களாகும். ஆண்டு முழுவதும் உழைத்த மனிதன் ஓய்வு நேரத்தில் மகிழ்ச்சியாக இருக்க விரும்புவது இயல்பு. தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் திருவிழாக்கள் நடைபெற்று வருவதை அறிகிறோம். சமுதாய மாற்றத்தால் புதிய திருவிழாக்களும் தோன்றுகின்றன. இவ்விழாக்கள் மூலம் கலையும், கலையனுபவமும் மேலோங்கி வளர்கின்றன. கலைகளின்

வளர்ச்சிக்கே திருவிழாதான் மூல காரணமெனின் அது மிகையாகாது. திருவிழாக்கள் அனைத்தும் கோயிலுடன் பின்னிப் பிணைந்துள்ளன. கோயில் என்றாலே திருவிழா; திருவிழா என்றாலே கோயில் விழாக்கள். சமயத்தின் கூறாக மட்டுமின்றி கலைகளின் வளர்ப்புப் பண்ணையாகவும் திகழ்கின்றன. திருவிழாக்கள் பண்பாட்டு உறவை வளர்க்கவும், ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்கவும் பயன்படுகின்றன"[51] என டாக்டர் சு. சக்திவேல் குறிப்பிடுகிறார்.

சங்க கால மக்கள் கொண்டாடிய திருவிழாக்கள் மக்களின் மன ஒற்றுமையையும், ஆன்மநேய பண்பாட்டு மரபையும், கலைகளின் வளர்ச்சி நிலையினையும் ஒன்றுசேர வெளிப்படுத்துகிறது.

சங்கப் பாடல்களில் 'விழவு' என்னும் சொல் மிகையாகக் காணப்படுகின்றது. விழைவு, விளைந்து என்னும் சொல் வடிவங்கள் விழவு என்பதன் காரணமாக அமைந்திருக்கலாம். பண்டைய தமிழர் வாழ்வியலில் விழாக்கள் மற்றும் பண்டிகைகள் என்பன இறைவழிபாட்டின் காரணமாகவே பெரும்பாண்மையாக கொண்டாடப்பட்டன எனலாம். 'விழா' என்ற சொல் கலித்தொகையில் முருகபெருமானுக்கு நடைபெறும் வழிபாட்டு நிகழ்வைக் குறிக்கின்றது.

"இந்து சமயத்தில் இன்று பல்வேறு வகுப்புகளும் சாதிகளும் மலிந்து தனித்தனி சமூகம் போல காட்சி தரும் நிலையில், திருவிழாக்களின் போது இந்து சமயம் சார்ந்த அனைத்து மக்களும் சாதி வேறுபாடுகளை மறந்து ஒரே இடத்தில் குழுமி இறைவனை வழிபடுகின்றனர். ஏழை-பணக்காரன் என்ற வேறுபாடு திருவிழாக் காலங்களில் தெரிவதில்லை."[52] என இரத்தின சண்முகனார் குறிப்பிடுகிறார்.

பழங்காலத் தமிழர்கள் தாம் வழிபடும் தெய்வங்களுக்கு விழாக்கள் எடுத்துப் பேணுதலை ஒரு பண்பாட்டு மரபாகக் கொண்டிருந்தனர். இத்தகைய விழாக்கள் மக்களின் சமூக உறவை வளர்த்தன திருவிழாக்களில் ஆடல், பாடல், கூத்து போன்ற நிகழ்வுகளும் இடம்பெறும். மக்களின் மனமகிழ்ச்சியும் இவ்வழி புலப்படும். இவ்விழா பற்றிப் புலவர் செந்துறை முத்து,

"திருவிழா என்பது தெய்வத்திற்கு எடுக்கப்படும் விழா ஒன்றனையே குறிப்பதாகும்".[53] என்கிறார்.

என்னும் செய்தி இங்குக் குறிப்பிடத்தக்கது. ஊரில் விழா ஒருவன் நடைபெறுவதற்கு முன்பே நொச்சி மாலையைச் சூடிய ஊர்க்குயவன், விழா இன்ன நாள் நடைபெற உள்ளது அனைவரும் வந்து திருவிழாவைக் காணுங்கள் எனவும் தெருக்களின் வழியாக மக்கள் பலரும் கேட்குமாறு கூறிச் செல்வான். இந்நிகழ்வை நற்றிணையில் கூடலூர்ப் பல்கண்ணனார் என்னும் புலவர்,

***"............ அகல்நெடுந் தெருவில்***
***சாறு என நுவலும் முதுவாய்க் குயவன்"***[54]

என குறிப்பிடுகின்றார். இந்தப் பண்பாட்டு மரபைப் பின்பற்றியே இன்றளவும் கிராமப்புறங்களில் நடைபெறும் விழாவினை முன்கூட்டியே ஒருவர் மூலம் அறிவிக்கும் வழக்கம் இருந்து வருகின்றது.

இதன் மூலம் அக்காலத்தில் திருவிழா என்பது மகிழ்ச்சி நிறைந்ததாகவும் ஒரு பெரும் விழாவாகவும் கொண்டாடப்பட்டு தமிழரின் சமயப் பண்பாடு மரபினைக் கடைப்பிடித்தும் வருகின்றது. இனி எவ்வகையான திருவிழாக்கள் பண்டையத் தமிழர்களால் கொண்டாடப்படுகிறது என்பதைப் பற்றி இனி காணலாம்.

## மழையைப் போற்றுதல்

சிற்றூர்களில் மழை பெய்வதற்காகவும், மழை நிற்பதற்காகவும் இறைவனிடம் வேண்டி குருதிப்பலி, மலர்ப்பலி செலுத்தி நேர்த்திகடன் செய்தனர். பெருந்தெய்வக் கோயில்களில் நாட்பலி அந்திவிழவு என்னும் பெயர்களில் வழிபாடு நிகழ்த்தினர்.

## ஆடிப்பெருக்கு

நீர்விழா என்னும் பெயரில் ஆடிப்பெருக்கு விழா கொண்டாடப்படுகின்றது. பதினெட்டாம் பெருக்கு எனவும் கூறுவர். வளம் பல தந்த காவிரி ஆற்றுக்கு நன்றி கூறும் விதமாகக் கொண்டாடப்படுகின்றது. மகளிர் பெருக்கு முன் பத்து நாட்களில் முளைப்பாலிகை ஏற்பாடு செய்து அதில் அவரை, துவரை முதலிய ஒன்பது வகைதானியங்களால் முளைப்பாலிகை அமையும் ஆற்றங்கரையில் முளைப்பாலி, சர்க்கரை கலந்த பச்சரிசி, மாவிளக்கு, காதோலை கரியமணி, மஞ்சள் கயிறு முதலியவை வைத்துப் படையல் இட்டு காவிரியாற்றை பெருமையோடு வணங்குவர். வெள்ளப்பெருக்கில் தன் கணவனை இழந்து ஆதிமந்தி தேடியக் கதையினை,

> ***"ஆதிமந்தி பேதுற்று இனைய***
> ***சிறை பறைந்து உரைஇச் செங்குணக்கு ஒழுகும்***
> ***அம்தண் காவிரி போல"*** [55]

என்னும் பாடல் வரிகள் தமிழர் வழக்காற்றில் இருந்த நீர் விழாவிற்கு சான்றுகளாக அமைகின்றன.

## கார்த்திகைத் திருநாள்

பழங்காலத்திலிருந்தே தமிழர்கள் கார்த்திகைத் திருநாளை திருவிழாவாக கொண்டாடி மகிழ்ந்துள்ளனர். சங்க கால தமிழர்கள் கொண்டாடிய

சமய விழாக்களில் குறிப்பிடத்தக்கது இக்கார்த்திகைத் திருவிழாவாகும். கார்த்திகைத் திருநாளன்று வீதிகளிலும், வாசலிலும் விளக்கேற்றி வைத்து, அங்கு மலர் மாலைகளையும், பூந்தோரணங்களையும் கட்டித் தொங்கவிட்டு மகிழ்ந்துள்ளனர் என்பதை,

> ***"குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து,***
> ***அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்"[56]***

என்று அகநானூறு சுட்டுகிறது. இத்தீபத் திருநாளின்போது கோயில்களின் முன்பாக சோளத் தட்டை, பனை ஓலை போன்றவற்றை குவியலாகக் கட்டி அதைத் தீயிட்டு எரிப்பர். பின்பு அவ்வாறு எரிந்து போன சாம்பலை எடுத்துக் கொண்டு தங்கள் நிலங்களில் இடுவர். அவ்வாறு இட்டால் உழவுத்தொழில் வளர்ச்சி அடையும் என்ற நம்பிக்கையும் இவை யாவும் தமிழர்களின் சமயப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கிறது.

## பொங்கல் திருநாள்

உழவின் மேன்மைக்கும், நிலத்தின் மேன்மைக்கும், பூமி வளர்ச்சியை காரணமான கதிரவன் செயலுக்கும் நன்றி செலுத்தும் விதமாகவும் பொங்கல் விழா தமிழர்களால் இன்றும் கொண்டாடப்படுகின்றது. தை முதல் நாளில் சூரியனுக்குரிய பெரும் பொங்கலும், மறுநாள் மாட்டுப் பொங்கலும், அதற்கு மறுநாள் காணும் பொங்கலும் என பண்டைத் தமிழர் தொன்றுதொட்டு பண்பாட்டு மரபாகக் கொண்டாடி வருகின்றனர்.

## பாவை விழா

தை மாதத்தில் பெண்கள் நோன்பு மேற்கொண்டு ஆற்றங்கரைகளில் மணலால் ஆகிய பாவை உருவத்தைச் செய்து வைத்து வழிபட்டு நீர்த்துறையில் நீராடி மகிழ்வர். 'தைந் நீராடுதல்' என்னும் பண்டிகையைப் பண்டைத் தமிழ்

மக்கள் கொண்டாடி மகிழ்ந்தனர். இவ்விழா சங்க இலக்கிய நூல்களில் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இச்செய்தியினை,

***"தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்***
***வண்டற் பாவை உண்துறைத் தரீஇத்***
***திருநுதல் மகளிர் ................"*[57]**

என்ற பாடலில், இளம்பெண்கள், தைமாதத்தின் இறுதியில் மழை பெய்து குளிர்ச்சி மிகுந்த நாட்களில், வண்டல் விளையாட்டுக்கு வைத்திருக்கும் பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து நீராட்டி மகிழ்ந்து பாவை விழாவினைக் கொண்டாடினர் என்ற குறிப்பு இடம்பெற்றுள்ளது.

## புனல் விழா

புனல் விழா பற்றிய குறிப்புகள் சங்க பாடல்களில் அதிக இடங்களில் இடம்பெற்றுள்ளன. குறிப்பாக, ஆட்டனத்தியின் புனல் விழா பல பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

***"ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரள***
***கருங்கச்சி யாத்த காண்பின் அவ்வயிற்***
***றிரும்பொலம் பாண்டின் மணியொரு தெளிர்ப்பப்***
***புனையந்தாடு மந்தியணி நயந்து"*[58]**

என்று அகநானூற்று பாடல் அத்தியின் புனல் விழாவினைச் சுட்டுகிறது.

## பூந்தொடை விழா

படை பயிற்சி பெற்ற இளைய வீரர்களுக்கு செய்யும் அரங்கேற்று விழாவாக இதனைக் கொண்டாடுவார்கள். 'மழவர் விழா' என்றும் இதனைக்

கூறுவார்கள். பகைவர்களைப் போர்களத்தில் வீழ்த்துகின்ற, விரைவாக செல்லக்கூடிய குதிரைகளைக் கொண்ட வீரக் கழலணிந்த மழவர்கள் பூந்தொடை விழாவினைக் கொண்டாடி மகிழ்வார்கள். தெருக்களிலும், வீதிகளிலும் குளிர்ச்சி பொருந்திய மணல் கொட்டப்பட்டிருக்கும். பூந்தோரணங்களும் கட்டப்பெற்று அந்நகர் திருவிழாப் போல் காட்சியளிக்கும் என்பதை,

***"வார்கழற் பொலிந்த வன்கன் மழவர்***
***பூந்தொடை விழவின் றலைநாளன்ன***
***தருமணல் நெமரிய திருநகர்"[59]***

என்ற அகநானூற்றுப் பாடல் சுட்டுகிறது. சங்க கால சமுதாயத்தில் விழாக்கள் சிறந்ததொரு இடத்தினைப் பெற்றிருந்தது. மக்கள் தனது வாழ்நாளில் விழாக்களுக்கு முக்கியத்துவம் அளித்திருந்தனர். எல்லோரும் ஒன்றுக் கூடி மனம் மகிழும் மன்றமாக திருவிழாக்களைப் போற்றியும், கொண்டாடியும் தமிழர்களின் பண்பாட்டு மரபைத் தெரிவிக்கின்றன.

## இளவேனில் விழா

இளவேனில் விழா என்பது இளவேனில் கால காம வேளுக்குரியதாகக் கொள்ளப்படும். வில்லவன் விழா என்பது காமனை வேண்டிச் செய்யும் விழாவாகும். தலைவி ஊரில் காமவேள் விழா நடைபெற்றதைக் கண்டால் கலங்குவான் எனக் கருதி அதனால் தலைவன் வந்ததாகத் தோழி குறிப்பிடுகின்றாள். இதனைக் கலித்தொகை பாடலானது,

***"காமவேள் விழாவாயின் கலங்குவன் பெரிதென***
***ஏமுறு கருந்திண்டேர் கடவி***
***நாம் அமர் காதலர் துணை தந்தார்"[60]***

எனவும் காமவேள் விழாவின்போது காதலர்கள் மகிழ்ச்சியாக விளையாடுவார்கள் என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

## தை நீராட்டு விழா

தைத் திங்களில் மகளிர் ஆறு குளங்களில் நீராடுவது சில செய்யுட்களில் குறிப்பிடப்படுகிறது. பின்னர் இதனை மார்கழி நீராட்டு விழா என்று அழைத்தனர். இதனை,

***"தையில் நீராடிய விழா தவந்தலைப் படுவாளோ"[61]***

மகளிர் கூட்டமாக நீராடுவர் என்பதனை,

***"நறுவி ஐம்பால் மகளிர் ஆடும்***
***தைஇத் தண்கயம் போலப்***
***பலர்படிந் துண்ணும்நின் பரத்தை மார்பே"[62]***

***"தை இத்திங்கள் தண்கபம் படியும்***
***பெருந்தோட் இறுமகள்"[63]***

என்ற பாடல்களின் வழி தமக்கு கிடைக்கும் கணவன்மார் நல்ல பண்பு உள்ளவனாக வர வேண்டும் என வேண்டிப் பெண்கள் எடுத்த இந்த நோன்பு பிற்காலத்தில் சமயப் பண்பாட்டு மரபாக தொடர்பு பெற்றதை ஆண்டாள், மாணிக்கவாசகர் பாடல்களால் அறிகின்றோம். அம்பாவால் என்று பரிபாடல் இதனைக் குறிப்பிடும்.

## நீர்விழா

பரிபாடல் வழியே வைகை ஆற்றில் வெள்ளம் வந்தபோது மக்கள் நீராடி மகிழ்ந்ததாக பரிபாடல் வழி அறிகின்றோம். மலர்களும், பொன் மீன்களும் கொண்டு வைகையாற்றுக்கு நீராடச் சென்றனர். சான்றாக, முற்காலத்தில்

மன்னர்களும் இவ்விழாவில் கலந்துக் கொண்டனர் என்பதற்கு அகநானூற்றுப் பாடலானது,

***“உரவு உரும் ஏறொடு மயங்கி***

***இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்தன் ஆறே”*[64]**

என்று குறிப்பிடுகிறது.

## இந்திரவிழா

இந்திரனைப் பற்றிய சில குறிப்புகள் சங்கப் பாடல்களில் கிடைக்கின்றன.

***“இந்திர விழாவிற் பூவின் அன்ன”*[65]**

என்று உவமையாகக் கூறும் அளவுக்கு இந்திர விழா சிறப்புற்றிருந்தது.

சிலம்பு, மணிகேலைக் காலத்தில் இந்திரவிழாவானது அரசாங்க விழாவாகவே அன்று கொண்டாடப்பட்டது. கற்பகக் கோட்டத்தில் வேள்ளானை கொடியேற்றப்பட்டது. பல தெய்வங்களுக்கு பூசையிடப்பட்டது. இசையும், கூத்தும் கலந்து மக்களுக்கு இன்பம் தந்தன. மேலும் நகரம் முழுவதும் அணி செய்யப்பட்டதை மணிமேகலை விழாவறைக் காதை தெளிவாக்குகிறது. அறிஞர்கள் கூடியிருந்த பட்ட மண்டபத்தில் வாதிட்டனர். தூங்கெயி லெறிந்த தொடிந்தோட் செம்பியன் இதனைத் தொடங்கினான் என்று அறிகின்றோம். இவ்விழா புகழோடு தொடர்புடையதாக இருந்தாலும், மதுரையிலும் கொண்டாடப்பட்டதாகச் சின்னமனூர்ச் செப்பேட்டாலறிகின்றோம்.

## உள்ளி விழா

கொங்கர்கள் உள்ளி விழாவாகக் கொண்டாடினர். சுற்றிலும் மணியைக் கட்டிக் கொண்டு தெருவில் ஆடுவார். இதனை,

*“உள்ளவிழவின் அன்ன*

*அலரா கின்றது பலர்வாய்ப்பட்டே”*[66]

என்கிறது அகநானூற்று பாடல்.

## வெறியாட்டு விழா

பண்டைய காலங்களில் பெருவாழ்க்கையாக இருந்தது வெறியாட்டு விழாவாகும். முருகனுக்காக எடுக்கப்பட்ட இவ்விழாவில் வேலன் கையில் வேலேந்தி ஆடுவான். இன்னிசை கருவிகள் முழங்கப்படும். தினையரிசியும் மலர்களையும் தூதுவர், ஆட்டுக்கிடாயை அறுத்துக் குருதியைச் சிந்துவர். இவ்விழாவைப் பற்றிய முழு விபரம் திருமுருகாற்றுப்படையில் இடம் பெறுகின்றது.

## திருவோணப் பெருவிழா

திருமாலுக்குரிய விண்மீன் திருவோணமாகும். பண்டைய மக்கள் ஆவணி மாதத்தில் நடக்கும் ஒண நாளைச் சிறப்பாகக் கொண்டாடியுள்ளனர். தற்காலத்தில் கேரளாவில் இவ்விழா மிக விமர்சையாகக் கொண்டாடப்படுகின்றது. மேலும் பண்டைத்தமிழ் மக்கள் திருமாலை நினைவுகூர்ந்து விழாக்கள் நிகழ்த்தியுள்ளனர் என்பதனை,

*“ஏமம் ஆகிய சீர்கெழுவிழவின் நெடியோன்”*[67]

என பரிபாடல் கூறுகின்றது. இதன்வழி சமயப் பண்பாட்டு மரபாகவும் இவ்விழா கொண்டாடப்படுகிறது.

## பங்குனி விழா

பங்குனி மாதத்தில் நிறை மதியோடு கூடிய உத்திரப் பெருநாளில் சோழர் தலைநகரான உறையூரில் பங்குனிவிழா கொண்டாடப்படுகின்றது. இவ்விழா பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது. இதனை,

***“உருவ வெண்மணன் முருகு நாறு தண்பொழிற்***

***பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்”***[68]

உறையூர் மக்கள் பங்குனி உத்திர விழாவின்போது விடியும்வரை விழாக் கோலம் கொள்வர். அடுப்புகள் அமைத்து தீமூட்டி உணவு சமைத்து உண்டு களிப்பர். மறுநாள், மக்கள் நடமாட்டம் இன்றி விழா நடைபெற்ற இடம் காணப்படும்.

## திருப்பரங்குன்றத்து விழா

குறிஞ்சி நிலத்துக் கடவுளான முருகனுக்கு ஆறுபடை வீடுகளிலும் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன என்ற போதும், குறிஞ்சி நிலமக்கள் முருகனுக்குச் சிறப்பாக விழா எடுத்து வழிபட்டதனை,

***“ஆலமர் செல்வன் அணிசால் மகன் விழாக்***

***கால் கோன் என்று ஊக்கி”***[69]

எனவரும் கலித்தொகைப் பாடலடிகளும்,

***ஆலமர் செல்வன் மகன் விழாக் கால் கோள்***

***காண்மினோ எனக் கண்டு நிற்குநரும்”***[70]

என்னும் மணிமேகலை அடிகளும் சான்று தந்து நிற்கின்றன.

திருப்பரங்குன்றத்தில் முருகப் பெருமான் வள்ளியை மணந்து கொண்ட நிகழ்வை விழாவாக மக்கள் கொண்டாடினர். இந்நிகழ்வில் பாண்டிய மன்னன் தன் பரிவாரங்களுடன் கலந்து கொண்டான் என்பதை,

*“சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்*

*புடை வருசூழல் - புலம் மான் வழுதி*

*மடமயில் ஓரும் மனயவரோடும்*

*கடன் அறி காரியக் கண்ணவ ரோடும்”*[71]

என்றும் பரிபாடல் குறிப்பிடுகிறது. எனவே விழா என்றாலே தமிழர்களின் பண்பாட்டு மரபினைக் காட்டுவதாகவே இன்றும் அமைந்துள்ளது.

## தொகுப்புரை

ஆதிகாலத்தில் இருந்தே மனிதனிடம் கடவுள் நம்பிக்கை இருந்துவந்துள்ளது. அதன் வெளிப்பாடே சமயமாகும். இவ்வியலில் சமயம், சமயம் பற்றிய அறிஞர்களின் கருத்து, மதம், சமயம் தோற்றம் போன்றவை பற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளது. பரம்பொருள் ஒருவரேதான் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தொழில்களையும் இவ்வுலகத்தில் நடத்த மூன்று உருவகங்களை கொண்டுள்ளார். பிரம்மன், விஷ்ணு, உருத்திரன் எனவும், வழிபாடு, வழிபாட்டின் தோற்றமும் வரலாறும், இறை வழிபாடு, ஐவகை நில வழிபாடு போன்றவைகளும், வழிபாட்டின் வளர்ச்சிக்கான மூலங்கள், இயற்கை வழிபாடு. இவ்வழிப்பாட்டின் வழியாகத்தான் மனிதன் தனது வழிப்பாட்டைத் தொடங்கி இருக்கலாம் என இதன்மூலம் அறியமுடிகிறது. மனித சமுதாயம் பல்வேறு காரணங்களால் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்திருந்த போதிலும் அச்சமுதாயம் ஒன்றிணைந்துக் கொண்டாடுவது திருவிழாக்களாகும். இத்திருவிழாக்கள் பற்றியும் மேலும் எவ்வகையான திருவிழாக்கள் இலக்கியங்களில் உள்ளன என்பனவற்றையும் பண்பாட்டு மரபோடு இவ்வியலில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

# குறிப்புகள்

1. சுந்தரரேசன், காலந்தோறும் இந்துமதம், ப.2.
2. மேலது., ப.2.
3. மேலது., ப.3.
4. நன்னூல், நூ.11.
5. லக்ஷ்மணன், இந்திய தத்துவ ஞானம், ப.18.
6. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.493.
7. மயிலம் வே. சிவசுப்ரமணியன், அகநானூறு, பா.14:15-16.
8. மேலது., ப.59:6-7.
9. நம்மாழ்வார், திருவாய்மொழி, பா.6:4-6.
10. பரிபாடல், பா.5:1-6.
11. அகநானூறு, காப்பு.
12. செ. வைத்தியநாதன், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, ப.635.
13. தமிழ்ப்பேரகராதி, ப.531.
14. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 7, ப.336.
15. அ. ஜான் பீட்டர், திருவாரூர் மாவட்ட இடப்பெயர்கள், பக்.151-153.
16. வே. அமுதா, கோநகர் நாட்டின் சிறுதெய்வ வழிபாடு, ப.45.
17. தொல். பொருள்., நூ.20.
18. மேலது., நூ.5.
19. குறுந்தொகை, பா.263:1-3.
20. நற்றிணை, பா.251:8.
21. மேலது., பா.343:4-5.
22. ஐங்குறுநூறு, பா.259:3-4.
23. அகநானூறு, பா.59:3-6.

24. ஐங்குறுநூறு, பா.62:1.

25. குறுந்தொகை, பா.218:1-2.

26. நற்றிணை, பா.165 : 3

27. சிலம்பு., பா.1:1.

28. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி, ப.806.

29. க. வெள்ளைவாரணார், சைவசித்தாந்த சாத்திர வரலாறு, ப.36.

30. விக்டர், சிந்துவெளி நாகரிகம், ப.172.

31. தொல். மெய்., நூ.254.

32. அகநானூறு, பா.309:4.

33. ஐங்குறுநூறு, பா.28:1.

34. மேலது., பா.53:1.

35. மேலது., பா.82:3-4.

36. நற்றிணை, பா.34:1.

37. அகநானூறு, பா.91:4.

38. மேலது., பா.156:13-15.

39. அகநானூறு, பா.7:4-5.

40. குறுந்தொகை, பா.255.

41. அகநானூறு, பா.365:12.

42. க. வெள்ளைவாரணார், சைவ சித்தாந்த சாத்திர வரலாறு, ப.37.

43. அகநானூறு, பா.354:3-4.

44. கலித்தொகை, பா89:8.

45. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 11, ப.189.

46. தொல். புறத்., நூ.5.

47. ஐங்குறுநூறு, பா.352.

48. மேலது., பா.53.

49. பட்டினப்பாலை, பா.246.

50. அகநானூறு, பா.39:6-8.

51. டாக்டர் சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.235.

52. இரத்தின சண்முகனார், தெய்வ வழிபாடுகளும் விரதங்களும், ப.13.

53. சு. சதாசிவம், பழந்தமிழர் வாழ்வும் வரலாறும், ப.89.

54. நற்றிணை, பா.200:3-4.

55. அகநானூறு, பா.76.

56. மேலது., பா.341:7-8.

57. மேலது., பா.269:14-16.

58. மேலது., பா.376:7-10.

59. மேலது., பா.187:7-9.

60. கலித்தொகை, பா.27:24-26.

61. நற்றிணை, பா.22.

62. ஐங்குறுநூறு, பா.84.

63. நற்றிணை, பா.86.

64. அகநானூறு, பா.222:14-15.

65. ஐங்குறுநூறு, பா.62:1

66. அகநானூறு, பா.360.

67. பரிபாடல், பா.25:38

68. அகநானூறு, பா.137:8-9

69. கலித்தொகை, பா.18.

70. மணி., காதை 3:144-145.

71. பரிபாடல், பா.19:1-4.

# இயல் 5

## சமூகப் பண்பாட்டு மரபு

### முன்னுரை

சங்க அக இலக்கியத்தில் சமூகப் பண்பாட்டு மரபு என்று பார்க்கும்போது உணவு, உடை, இருப்பிடம், தொழில்கள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள் எல்லாம் சேர்ந்ததுதான் சமூகப் பண்பாடு மரபு ஆகும். பண்டைய சமூகப் பண்பாட்டு மரபு எப்படி இருந்தது என்பதை, சங்க காலத்தில் மனிதன் தன் உடலாலும் அறிவாலும் பற்பல வேலைகள் செய்து வந்துள்ளான். காதல், வீரம் என்றில்லாமல் பொருள் தேடுவதையும், உணவைச் சுவையாகச் சமைத்து உண்ணுதலையும் கற்று வைத்திருந்தான். வகைவகையான ஆடைகளும் ஆபரணங்களும் அவர்களது வாழ்க்கையில் பயன்பாட்டிற்கு வந்தன. தன்னுடைய பாதுகாப்பிற்கு அரண் அமைத்தும், மாட மாளிகைகளிலும், புல்லால் வேயப்பட்ட குளிர்ச்சி பொருந்திய குடிசைகளிலும் வாழ்ந்து வந்துள்ளான். மேலும், விளையாட்டுக்கள், நம்பிக்கைகள், தொழில்கள், பழக்கவழக்கங்கள் பழந்தமிழ் இலக்கியங்கள் வழியாக மனிதனின் பண்பட்ட வாழ்க்கையை எடுத்துரைப்பதைக் காணமுடிகிறது.

### சமூகம்

சமூகம் என்பது ஒரு வரையறுத்த தொடர்ச்சியான வாழ்க்கைமுறையை அல்லது பண்பாட்டைப் பெற்று ஒரு கூட்டமாக தமக்குள் ஒற்றுமையுடையவராக வாழும் மக்கட் தொகுதியைக் கொண்டது. ஆகவே சமூகவியல் என்பது ஒத்த பண்பாட்டை உடைய மக்களின் வரலாற்றையும் பண்பாட்டையும் உட்கொண்டதாக அமைகிறது. பழங்காலத்திலிருந்து இன்றைய காலம்வரை நிகழ்ந்துவரும்

பண்பாட்டு வளர்ச்சிக்கான காரணங்கள், அவற்றின் விளைவுகள் ஆகிய எல்லாவற்றையும் ஆராய்ந்து கூறும் ஓர் அறிவியல் துறையாகச் சமூகவியல் என்னும் துறை விளங்குகிறது.

சமூகம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் ஒன்றுசேர்ந்து வாழ்வதற்காக மக்கள் கூட்டம் ஏற்படுத்திக்கொள்ளும் ஒரு அமைப்பாகும். சமூகம் என்பது அன்றைய நிலையில் திரள் என்ற ஒரு பொருள் பெற்ற ஒருங்கிணைந்த மக்கள் கூட்டம், கூட்டு வாழ்க்கைக்குழு, ஒரு மனப்போக்குடைய மக்கள்குழு என்ற கருத்து அடிப்படையாலான பல்வேறு விளக்கங்களைப் பெறும்வகையில் கையாளப்பெற்றுள்ளது. அதுவே இன்று சமூகவியல், சமூக மொழியியல், சமூக அறிவியல் என வழங்கப்பட்டு வருகிறது. உலகின் பிற பகுதியில் மக்கள் நிலையான வாழ்வின்றி அமைதியற்று வாழ்ந்த காலத்திலேயே தமிழர்கள் நல்ல அரசியல் அமைப்பினையும், சமுதாய ஒருமைப்பாட்டினையும், வணிகச் சிறப்பினையும், இலக்கியச் செல்வத்தினையும் பெற்று வாழ்ந்தார்கள் என்பதற்குச் சங்க இலக்கியங்களே சிறந்த சான்றாகும். மனிதன் பிறப்புமுதல் இறப்புவரை இயற்கையோடு தொடர்ச்சியான தொடர்புகொள்கின்றான். ஏனெனில் இயற்கை, மக்களின் உயிரியல், உளவியில், வாழ்வியல் சார்ந்த அனைத்து தேவைகளையும் நிறைவு செய்கிறது. எனவே குடும்பம் என்னும் அமைப்பு இடம், காலம் அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகளாவிய பண்பாகத் திகழ்கிறது. மனிதன் ஓர் உயிரியல் விலங்கு மட்டுமல்ல சமுதாய விலங்குமாவான் என்பார் அரிஸ்டாட்டில்.

சமூகவியல் நூல்களை மொழிபெயர்ப்போரும், சமூகவியல் குறித்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதுவோரும் 'Society' என்ற சொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல்லாக சமூகம் என்ற சொல்லையே கையாண்டுள்ளனர். காலப்போக்கில் சமூகம் என்ற சொல் சமுதாயம், கூட்டு வாழ்க்கைக் குழு,

நவநாகரிகக்குழு என்று எல்லாம் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது ‘சம்’ என்ற வடமொழி சொல்லிலிருந்து தோன்றிய சமூகம், சமுதாயம் ஆகிய இரு சொற்களுமே ‘மக்கள் கூட்டம்’ என்ற பொருள்படும். இலத்தின்மொழிச் சொல்லான ‘சொசைட்டி’ என்பதற்கும் கூட்டம் என்பதே பொருள்படும்.

சமுதாயம் என்பது தனி ஒருவன் மட்டுமின்றி அனைவரும் சேர்ந்த ஒரு அமைப்பு ஆகும். சமுதாயத்தை ‘மன்பதை’ என்பர். ‘மன்பதை’ என்னும் சொல் மக்கட் பரப்பை உணர்த்தும் என்று திவாகர நிகண்டு கூறுகிறது. மேலும் ஒரு சமுதாயத்தின் பண்பாட்டுச் சிறப்பை உணர்த்திநிற்பது குடும்ப அமைப்பாகும். மனிதனின் சமூக வாழ்வென்பது குடும்பத்திலிருந்தே தொடங்குகிறது. தனிமனிதன் சமுதாயத்தோடு கொள்ள வேண்டிய உறவிற்கும் குடும்பம் அடித்தளமாக விளங்குகிறது. சமுதாயத்தில் நடந்துகொள்ளவேண்டிய முறைகளையும் குடும்பம் கற்றுத் தருகிறது. எனவே சமுதாயத்தில் அச்சாணி குடும்பம் ஆகும். மனிதன் சமூகமின்றி வாழ முடியாது. சமூகமும் மனிதரின்றி அமையமுடியாது. மனிதர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் தேவைகளுக்கு மற்றவர்களைச் சார்ந்தேதான் இருக்கிறார்கள், சார்ந்தேதான் வாழ்கிறார்கள். ஒரு குழுவினர் இன்னொரு குழுவினரைச் சார்ந்து வாழ்கின்றனர். பல சமூகங்கள் ஒன்றோடு ஒன்று சார்ந்தும் சேர்ந்தும் வாழ்வது சமுதாயம் ஆகும்.

## உணவு

உணவு என்பது தமிழரின் சமூகப் பண்பாட்டு மரபில் முக்கிய இடம் பெறுகிறது இவ்வுணவினை, சங்க காலத்தில் அடிசில், அயனி, அவிழ், கூழ், சொன்றி, நிமிரல், புழுக்கல், புன்கம், பொம்மல், மிதவை என்ற சொற்கள் சோற்றைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவை பல்வேறு முறைகளில் தயார்செய்யப்பெற்று உணவாக உட்கொள்ளப்பட்டுள்ளன. இவ்வுணர்வுகள்,

1. சைவ உணவுகள்

2. அசைவ உணவுகள்

3. திரவ உணவு வகைகள்

என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.

## உணவுமுறை

தொடக்க காலத்தில் மனித சமூகம் வேட்டைச் சமூகமாக இருந்தது. மனிதன் இயற்கையாகவே கிடைத்தவற்றை உண்டு வாழ்ந்தான். உணவிற்காக வேட்டையாடுவதும் உண்டு. இவற்றை மட்டும் அறிந்திருந்த மக்கள் சற்று வளர்ச்சிபெற்று உழுது பயிர்செய்யும் வேளாண்மைச் சமூகத்தினாராக மாறினார். பண்டைய தமிழர் வாழ்வியலை வகைப்படுத்தி விளக்குகின்ற தொல்காப்பியம்,

***"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை***

***செய்தி யாழின் பகுதியோடு தொகைஇ***

***அவ்வகை பிறவும் கருவென மொழிப"[1]***

எனத் தெய்வத்திற்கு அடுத்த நிலையில் உணவைக் குறிப்பிடுகிறது.

தமிழர்கள் உணவில் அரிசியே சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. 1. காடைக் கண்ணியரிசி 2. குதிரை வாலியரிசி 3. சாமையரிசி 4. தினையரிசி 5. வரகரிசி என்னும் ஐந்து வகை அரிசி இருந்ததாகவும் கூறப்படுகிறது. உணவு என்ற சொல் சங்க இலக்கியங்களில் பல்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ளது. உணா, உண்டி, உண்டிகை போன்ற சொற்கள் உணவைக் குறிப்பதற்காகவே பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஓரறிவுயிராகிய நுண்ணுயிர்முதல் ஆறறிவு படைத்த மனிதன்வரை எல்லாம் உயிர்களுக்கும் உணவு தேவைப்படுகிறது. ஓய்வில்லாத உடலுக்கு

சக்தி மிகவும் தேவையான ஒன்றாக உள்ளது. மனிதனுக்கு அந்த சக்தியைத் தருவது உணவாகும். உணவு பற்றிய கருத்து சமூகத்தில் முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தன.

## உணவு வகைகள்

உணவுப் பொருள்களைப் பொதுவாக திட உணவுகள், திரவ உணவுகள் என்று இரு வகையில் பிரிக்கலாம். திட உணவுகளைத் தாவர உணவுகள், புலால் உணவுகள் என்ற வகையில் அடக்கலாம். தானியங்கள், பயிறுகள், காய், கனிகள், கொட்டைகள் திட உணவு வகையில் அடங்கும்.

திரவ உணவாகிய பால், தயிர், நெய், கள், மது போன்றவை திரவ உணவுகளில் அடங்கும். திட மற்றும் திரவ உணவு வகைகளைப் பண்டைய தமிழர் உண்டு மகிழ்ந்துள்ள செய்திகளைப் பண்டைய இலக்கியங்கள் கூறுகின்றன.

## சமையல் நுணுக்கம்

சங்க காலத் தமிழ்மக்கள் கையாண்ட சமையல் முறைகளையும், சமையல் தொழில்நுட்பத்திறனையும் சங்கஅகப் பாடல்கள்வழி அறியமுடிகிறது. பண்டைய முறைகளில் முக்கியமானவையாகக் கருதப்படுவது சுடுதல், அவித்தல், வேக வைத்தல், புழுக்குதல் போன்ற முறைகளாகும். நாகரிகம் வளர்ச்சிப்பெறாத காலத்தில் உணவினை நெருப்பில் சுட்டும் உண்ணும் வழக்கம் சமூகப் பண்பாட்டு மரபாக இருந்தது.

அரிசி உணவையோ, தானிய உணவையோ தமிழர்கள் தனியாக உண்ணாமல் கறியை உடன் இணைத்து உண்டனர். மரக்கறி, புலால் உணவு என்னும் இரண்டையும் தமிழர் உண்டாலும் புலால் உணவையே விரும்பி உண்டனர். வெள்ளாடு, செம்மறியாடு, மான், முயல், மீன் வகைகள், நண்டு,

கோழி, காடை போன்றவற்றின் இறைச்சியை தனியாகவோ, பாலும் இறைச்சியும் சேர்த்தோ சமைத்து உண்டனர். நெல்லை இடித்து ஆண் பன்றிக்குத் தீனியாகக் கொடுத்து அதைக் கொழுக்கவைத்து தனியாகக் குழிகளில் வீட்டில் வளர்த்து பிறகு அதன் மாமிசத்தை சமைத்து உண்டனர். இக்காலத்து மக்களைப் போலவே பழந்தமிழரும் மாமிசத்தை உப்புக்கண்டம் போட்டு அதனை இரும்புக் கம்பிகளில் கோர்த்து நெருப்பில் வாட்டி உண்டனர்.

உணவுக்குத் தேவையான வெப்பத்தைச் செலுத்திப் பக்குவப்படுத்தும் முறையாக இக்கால சமையல் உள்ளது. இதுபோன்று அக்கால சமையல் முறையும் இருந்தது. ஐவகை நிலத்தில் வாழ்ந்த மகளிர் சமையல்முறைகளில் கைதேர்ந்தவர்களாகவே விளங்கினர். வெளி உலகில் இருந்து திரும்பும் தலைமகனுக்கு அறுசுவை உணவை வழங்கி மகிழ்விப்பது மனைவியின் கடமைகளுள் ஒன்றாக இருந்தன. இதனைச் சங்ககால மகளிர் மிகச் சிறப்பாக செய்தனர்.

தலைவி கெட்டித் தயிரைப் பிசைந்து புளியும் சேர்த்து உணவு சமைக்கிறாள். அவ்வுணவு மணமாக இருப்பதற்கு தாளிக்கவும் செய்கிறாள். அந்த உணவு மேலும் சுவையோடும் மணமுடனும் மணம் பரப்புகிறது. அதனைத் தலைமகன் உண்டு அச்சமையல் முறையையும், உணவையும் மனமுவந்து பாராட்டுகிறான். இதனை

***“கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ***
***குவளை யுண்கன் குய்ப்புகை கழுமத்***
***தான் துழந்து அட்ட திம்புளிப் பாகர்***
***இனிதெனக் கணவன் உண்டலின்***
***நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே”[2]***

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் விளக்குகின்றன.

**உணவு சமைத்தல்**

அறுபத்து நான்கு கலைகளில் சமையல் கலையும் ஒன்றாகும். சங்ககால மக்கள் பல்வேறு காய்கறி உணவுகளையும், அசைவ உணவுகளையும் செய்து உண்டனர். சங்ககாலத் தலைவி கருணைகிழங்கு பொறியல் செய்து செந்நெல்லால் சோறாக்கி விருந்து படைத்தாள் என்பதனை,

***"கருங்கண் கருணைச் செந்நெல் வெண்சோறு"[3]***

என்று நற்றிணை ஆசிரியர் கூறுகின்றார். பட்டினப்பாலையில் அதனுடைய நகரச் சிறப்பை கூறும்போது,

***அறம் நிலைஇய அகன் வுட்டில்***
***சோறு வாக்கிய கொழுங் கஞ்சி***
***யாறு போலப் பரந்து ஒழுகி[4]***

காவிரிம்பூம்பட்டினத்தில் அகன்ற உணவுச் சாலைகள் இருந்தன எனவும், அங்கு எப்பொழுதும் இல்லை என்று சொல்லாத அளவுக்கு நெல்லைக் குற்றிச் சோறாக்க உலையானது எப்போதும் கொதித்துக்கொண்டே இருந்ததாகவும், அப்போது அங்கு வடிகின்ற கஞ்சியானது நீண்ட தெருக்களில் ஆறுபோல் ஓடியது என்று கூறும்போது அங்கு உணவின் சிறப்பையும் சமூகப் பண்பாட்டு மரபினையும் அறிந்துகொள்ள முடிகிறது.

ஓரிடத்தில் இருந்து வேறோர் இடம் செல்லும் மக்கள் தாங்கள் செல்லும் வழியில் அமர்ந்து சாப்பிட வெண்மையான பனை ஓலையால் முடையப்பட்ட வெண்குடையில் உணவினைக் கட்டி வருவார்கள் என்பதை,

*“ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடை”[5]*

என்று அகநானூறு கூறுகிறது.

## தேன், தினை கலந்த உணவுகள்

மருத்துவத்தில் தேன் முக்கிய பொருளாக உள்ளது. சிறியவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் உண்ணக்கூடிய சுவைமிகுந்த இந்தத் தேனைப் பற்றிய குறிப்புகள் சங்கஅக இலக்கியத்தில் காணப்படுகின்றன. இதனை,

*“கரும்பு உண விரிந்த கருங்கால் வேங்கைப்*
*பெருஞ் சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅல்*
*புள்ளுற்றுக் கசித்த தீம்தேன் கல்அளை”[6]*

என்ற நற்றிணை அடிகளில், வேங்கை மரத்தில் கூடுகட்டியிருக்கும் தேனீக்கள் தன்னுடைய தேனடைகளை எப்போதும் மொய் எனச் சுற்றிவந்துகொண்டே இருக்கும். முற்றிப்போன தேனடையானது வழிந்து கீழே உள்ள பாறையில் விழும். அப்போது குறமகளின் பிள்ளைகள் அதனைக் கையால் எடுத்து உண்பார்கள் என்னும் செய்தி மரபாக இடம்பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

ஒரு சங்க காலத்தில் தினைச்சோறும், தினைமாவும் மனிதர்களின் அன்றாட உணவு வகையில் ஒன்றாக இருந்துள்ளது என்பதை,

*“உணங்கு தினை துழவும் கை போல்”[7]*

என்ற நற்றிணைப் பாடல் காட்டுகின்றது. இப்பாடல் கூறும் செய்தி காட்டில் உள்ள தினையை அறுத்து எடுத்து வந்து தனியாகப் பிரித்து அதை வெளியில் உணர்த்திக் காய வைத்துச் சோறாக்கி உண்டார்கள் என்னும் செய்தி

இடம்பெற்றுள்ளது. மேலும் அவற்றை உரலில் இட்டு மாவாகச் சமைத்து உண்டதைக் (ஐங் : 285) கூறுகின்றன.

## சைவ உணவுகள்

சைவ உணவுகளில் நெல்சோற்றோடு காய்கறிகளின் குழம்பு ஊற்றி கீரை மற்றும் கிழங்கு வகையைச் சேர்த்து இலையில் இட்டு உன்பது இன்னும் நம்மிடையே உள்ள வழக்கம். இவ்வழக்கம் பழங்காலத்திலும் இருந்ததைப் பின்வரும் அகநானூற்றுப்பாடல் விளக்குகிறது.

***"கனவக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி***
***கவட்டு அடிபொருத பல்சினை உதிர்வை***
***அதன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ***
***வரியணி பனைத்தோள் வார்செவித் தன்னையர்"[8]***

என்னும் பாடலடியில், நீண்ட வளர்ந்த காதுகளுடைய குலப்பெண்கள் கொல்லையில் உள்ள வரகினை எடுத்துவந்து அதனை திரிகையில் இட்டு அரி-சியாக்கினர். இந்த வரகரிசியை முறத்தால் புடைத்துத் தண்ணீர் ஊற்றி ஊற வைத்து மண்ணால் செய்த பானையை எடுத்து அருவியில் இருந்து விழும் சுனைநீரை ஊற்றி பின்பு சோறாக்கி தாம் உண்பதுடன் வழிப்போக்கர்களுக்கும் கொடுத்து உள்ளதைக் காட்டுகின்றது. எனவே சங்க காலத்திலேயே உணவினை நெருப்பு மூட்டி சமைக்கும் வழக்கம் காலப்போக்கில் சமூகப் பண்பாட்டு மரபாக இருப்பதை அறியமுடிகிறது.

## நெல் உணவு

நெல்லைக் குற்றிச் சோறாக்கி உண்பது சங்க காலத்தில் அரிதாகவே காணப்படுகிறது. செல்வந்தர்கள் மட்டும் நெல் உணவே உண்டுள்ளனர். சாதாரண மக்கள் திணை மற்றும் கூழ் உணவையே உண்டனர். வயலில்

இருந்து கொண்டுவரப்பட்ட நெல்முதலிய கூலங்கள் களத்திலே குவித்து வைக்கப்பட்டிருந்த செய்தினை ஐங்குறுநூறு,

***"ஐவனச் சிறுகிளி கூடியும் நாட"[9]***

என்று எடுத்துரைக்கிறது. இதன்வழிப் பழங்காலத்தில் ஐவனநெல் உணவிற்காகப் பயரிடப்பட்டதை அறியமுடிகிறது. மேலும் மூங்கில் நெல் உணவிற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை நற்றிணைப் பாடல்கள் (7, 26, 60) காட்டுகின்றன.

## பழஉணவு

மனித சமூகம் நாகரிகம் அடைவதற்கு முன்பாக நாடோடி வாழ்க்கையைக் கொண்டிருந்த காலக்கட்டத்தில் பழ உணவே மனிதனின் உணவு தேவையைப் பெரிதும் நிறைவு செய்தன. மா, பலா, வாழை என்பவை முக்கனிகளாக சுட்டப்படுவதன் மூலம் மனிதன் பழ உணவிற்கு அளித்த முக்கியத்துவத்தை உணரலாம். இவை பற்றிய குறிப்புகள் சங்கஅக இலக்கியங்களில் அதிகம் காணப்படுகின்றன. ஐங்குறுநூற்றில்,

***"அத்தப் பலவின் வெயில் தின்சிறு காய்***
***அருஞ்சுரம் செல்வோர் அருந்தினர் கழியும்"[10]***

என்ற அடிகள் வறட்சி மிகுந்த பாலை நிலத்தில் செல்லக்கூடியவரிகள் பசியைப் போக்க பலாப்பழத்தை உணவாகக் கொண்டதைக் காட்டுகின்றது.

## அசைவ உணவுகள்

வயிற்றுப் பசிக்காக உண்ணுகின்ற மனிதன் முதலில் பழங்களையும், பின்னர் கிழங்கு மற்றும் தானிய வகைகளையும் உண்டிருக்க வேண்டும்.

நெருப்பைக் கண்டறிந்த பின்னர் கிழங்குகளை நெருப்பில் போட்டு வேகவைத்து அதன் சுவையை அறிந்திருக்க வேண்டும் காட்டில் மூங்கில்கள் ஒன்றோடு ஒன்று உரசித் தீப்பற்றி எரிந்தபோது அங்கு வாழும் விலங்குகள் சில நெருப்பில் சிக்கி இறந்தன. அவற்றைப் பார்த்த மனிதன் கிழங்கு என்றெண்ணி இறைச்சியை உண்டிருக்கலாம். கிழங்கு இல்லை இறைச்சி தான் என்று அறிந்த பழங்கால மனிதன் அதன் சுவையின் காரணமாக அதனை விரும்பித் தின்றிருக்க வேண்டும். இவ்வாறு படிப்படியாக மனிதன் சைவ உணவில் இருந்து அசைவ உணவுக்கு வந்திருக்கலாம். சைவ உணவை விட அசைவ உணவில் சக்தியும், வலிமையும் அதிகமாக இருப்பதாக இன்றளவும் மக்களிடையே ஒருவித எண்ணம் இருப்பதைக் காணலாம்.

## மீன் உணவு

நெய்தல் நில மக்களின் முக்கிய உணவு மீன் உணவாகும் மீனை உணவாக உண்பதன் மூலமாக பல்வேறு புரதங்கள் உடலில் சேர்கின்றன. நெய்தல் நிலத்தில் பெறப்பட்ட இவ்வுணவு அனைத்து நிலங்களுக்கும் கொண்டு செல்லப்பெற்று விற்பனை செய்யப்பட்டுள்ளது. ஆற்றிலே நன்கு கட்டப்பட்ட தூண்டில் கோலினால் பாண்மகள் மீன்பிடிக்கும் காட்சியினைப் பின்வரும் பாடல் சுட்டுகிறது :

***"நாண்கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்***
***தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்"***[11]

என்ற பாடல் அடிகளில் வஞ்சி ஒருத்தி விறகினால் மீனைச்சுட்டு தன் தந்தைக்குக் கொடுப்பதைப் பண்பாட்டு மரபாகவும் காணமுடிகிறது.

மேலும் புல்லரிசிச் சோற்றினைக் கருவாட்டோடு சேர்த்துத் தம் சுற்றத்தாருடன் உண்ணும் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர் என்பதை,

*“முரவு வாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி*

*வாராது அட்ட வாடுஊன் புழுக்கல்”*[12]

என்று குறிப்பிடுகிறது.

## ஆட்டுறைச்சி

ஆடு, மான், காடை, முயல், செம்மறி ஆடு, உடும்பு, கானங்கோழி போன்றவற்றையும் மனிதன் உணவாக உண்டு மகிழ்ந்திருக்கின்றான். இதனை நற்றிணை,

*“மை ஊன் தெறிந்த நெய் வெண் புழுக்கல்”*[13]

என்கிறது. ஆட்டினை வெட்டி அதன் இறைச்சியோடு பசும்நெய் கலந்து வெண்மையான சோற்றிலே இட்டு சுடச்சுட வழிப்போக்கர்களுக்கு விருப்பமொடு தருவதை சங்க அகப் பாடல்கள் கூறுகிறது. பழங்கால மனிதர்கள் காடையுடன் தேனும், கலியும் கலந்து உண்டதைக் குறுந்தொகை (389) பாடல் விளக்குகிறது.

## ஆடை

‘ஆடை இல்லா மனிதன் அரை மனிதன்’ என்னும் தமிழ்மொழி ஆடையின் சிறப்பை உணர்த்துகிறது. நாகரிகமும், பண்பாட்டு மரபும் மனித சமூகத்தின் அடிப்படை சொத்துகளாக வளர்ந்தபோது ஆடைகளும் ஆடை தொடர்பான பண்பாட்டு உணர்வுகளும் வளர்ச்சி பெற்றது. மேலும் ஒரு நாட்டினர் அணியும் ஆடைகளே அந்நாட்டு மக்கள் நாகரிகத்திற்கும் வளர்ந்த பண்பாட்டிற்கும் அடையாளமாக இருக்கின்றன. பழந்தமிழர்கள் மிகச் சிறந்த ஆடை வகைகளைப் பயன்படுத்தி பண்பாட்டிலும் நாகரிகத்திலும் உயர்ந்த நிலை-யினை எட்டி இருந்ததைத் தமிழரின் சமூகப் பண்பாட்டு மரபில் இடம்பெற்று இருந்ததை சங்கஅக பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

உடை, தழை, துகில், கலிங்கம், அறுசுவை, சிதார், தானை, காழகம், மடி, பட்டு, ழுங்கரை, கச்சை, கோடி, நீவி, கலை, நீலம், தூசு, புட்டகம், கம்பல், நூல், வாலிது, கச்சு, மெய்ப்பை, போர்வை, கவசம் என்று பல்வேறு பெயர்களால் ஆடையை வழங்கினர். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் தம் உரையில் 36 வகையான ஆடைகளைச் சுட்டுகிறார். அவை கோசீகம், பிதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம் வடகம், வஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலா, கோபடம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், புலியாட்டம், காசு, தேவங்கம், புங்கர்க்காழகம், சில்லிதை, தூரியம், பங்கம், நந்தியம், வண்டை, கவற்றுமடி, நூல்யாப்பு, தேவகிரி, காத்தூலம், இறைச்சி செம்பொத்தி, பணிப்பொத்தி என்பவனவாகும்.

முதன்முதலில் மனிதன் தழை, மரவரி, தோல் போன்றவற்றை உடையாகப் பயன்படுத்தினான். பிறகு பட்டு, பருத்தி போன்றவற்றால் ஆன ஆடைகளைப் பயன்படுத்தினான். தழையில் தொடங்கியவன் நெசவுமுறையைக் கற்றுக்கொண்டான். முல்லை நில மக்கள் ஆடுகளை வளர்த்து அவைதரும் மயிர்கொண்டு கம்பளங்கள் நெய்துள்ளனர். மருத நிலத்தில் உழவுத் தொழிலும், நெசவுத் தொழிலும் நடைபெற்றன.

இயற்கையாக அமைந்த ஐந்திணையில் ஒவ்வொரு திணையிலும் அரசன், வீரன் காவலன், ஏழை, துறவி என்று ஒவ்வொருவரின் ஆடைகளும் பிரித்து வைக்கப்பட்டுள்ளது. கலிங்கம், பாடகம், துகில், அறுவை, கச்சு, கச்சை, வடகம், வெண்பட்டு, உதரியம் முதலியவை அரசரின் உடைகளாகவும், கஞ்சை, கவசம் விட்டு முதலியன போர் வீரர்களது உடைகளாகவும், பட்டை, குப்பாயம், தைப்பை போன்றவை காவலர் உடைகளாகவும் இருந்துள்ளன.

## ஆடை நெய்த முறை

ஆடைகள் மிகமிக நுண்ணிய நூற்களினால் நெய்யப்பட்டன. அவற்றுள் தனித்தனி இழைகள் கண்ணுக்குப் புலப்படாத புகையைப் போல விளங்கின. முன்பு தழையாலும், மலராலும் ஆடைகள் இருந்ததை,

***“அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை***
***தித்திக் குறங்கி னூழ்மா றலைப்ப***
***வருமே சேயிழை யந்திற்***
***கொழுதற் காணிய”[14]***

என்ற குறுந்தொகை பாடல் பரத்தை ஒருத்தி தழையுடை அணிந்துகொண்டு தலைவனைக் காணவந்ததைக் கூறுகிறது. தன் காதலிக்கு அசோகின் தழையால் ஆடை செய்துகொடுத்ததை,

***“திருந்திழை யல்குற்குப் பெருந்தழை யுதவிச்***
***செயலை முழுமுத லொழிய”[15]***

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகிறது.

***“தழையணி யல்குல்”[16]***

என்ற குறுந்தொகை பாடல் வரியைக் கொண்டு மலைச்சாரலில் வளைந்த தழை-யினைக் கொண்டு மக்கள் உடை செய்து உடுத்தினர் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர் என்பதை உணரமுடிகிறது.

## ஆடைகளைத் தூய்மைப்படுத்துதல்

‘கந்தையானாலும் கசக்கிகட்டு’ என்பது பழமொழி. தமிழர் தாம் பயன்படுத்தும் ஆடைகளை தூய்மையாக வைத்திருந்தனர். ஆடைகளைச்

சுத்தம் செய்து பின் கஞ்சியிலே தோய்த்து மிக நேர்த்தியாக உலர்த்தப்பட்டுள்ளது என்பதை,

> ***"நலத்தைப் புலத்திபசை தோய்த்து எடுத்துத்***
> ***தலைப் புடைப் போக்கி தண்கயத்து இட்ட***
> ***நீரில் பிரியாப் பரூ உத்திரி கடுக்கும்"[17]***

என்ற குறுந்தொகைப் பாடல் மூலம் அறியலாம்.

## தழையாடை

பண்டைய தமிழர்களின் முக்கிய ஆடையாக தழையாடை இருந்து வந்தது. இந்த தழையாடையானது பெரும்பாலும் மகளிர் உடுத்திக் கொண்டிருந்தனர். தழை ஆடை என்பது இலை மற்றும் பூக்களால் உருவாக்கப்பட்டன. இவ்வகை ஆடைகள் பெண்களின் இடையைச்சுற்றி உடுத்தப்பட்டன.

கழை என்று சொல்லக் கூடிய ஒருவகைத் தாவரத்தின் தண்டினை முறையாகக் கட்டி அதனுள் ஒன்றாகத் தொடுத்த நெய்தல் பூவினை அழகுற அமைத்து உருவாக்கப்பட்ட தழையாடையை உடுத்திச் சமூகப் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர். இதனைப் பின்வரும் பாடல் எடுத்துரைக்கிறது.

> ***"கொடுங்கழி நிவிந்த நெடுங்கால் நெய்தல்***
> ***அம் பகை நெறித் தழை அணி பெறத்தைஇ"[18]***

என்னும் பாடலடியில் நெய்தல் நிலத்தைச் சார்ந்த தலைவி தனது உடலில் நெய்தல் பூவால் தொடுக்கப்பட்ட தழையாடை உடுத்திய செய்தி இடம்பெறுவதை அறியமுடிகிறது. இளம்பெண் ஒருத்தி அழகிய தளிர்களாலும் பூக்களாலும்

செய்யப்பட்ட உடையை அணிந்துகொண்டு நீலமணி போன்ற புள்ளிகளை உடைய பூக்களைப் பறிக்கச் செய்ததை,

***"அணிந்தழை நுடங்க ஓடி மணிப்பொறிக்***
***குரல்அம் குன்றி கொள்ளும் இளையோன்"*** [19]

என்ற பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

தழைகளையும் கொன்றை மலர்களையும் ஒன்றாகச் சேர்த்துக் கட்டி தழையுடையாக ஆக்கி விளையாடி மகிழ்ந்தார்கள் என்பதை,

***தழையும் கோதையும் இழையும் என்று இவை***
***தைஇயினர் மகிழ்ந்து நிறைஇ விளையாடும்*** [20]

என்று கலித்தொகை கூறுகின்றது.

## கூரைப்புடவை

அந்தக் காலம்முதல் இந்தக் காலம்வரை பெண்களின் உடையாக இடம்பிடித்து இருப்பது புடவைதான். பின்னர் கால மாற்றத்தால் அவர்களது உடையில் வட இந்திய உடை வகைகளும், மேற்கத்திய உடை வகைகளும் நுழைய ஆரம்பித்தன. ஆனால் இன்றும் திருமணம், நல்ல நிகழ்ச்சி கோயிலுக்குச் செல்லுதல் போன்ற முக்கிய நிகழ்வுகளுக்குச் செல்லும்போது நாகரிக நிலை-யிலுள்ள நகரப் பெண்கள் புடவைகட்டிச் செல்வதைப் பண்பாட்டு மரபாகவும் கொண்டனர். திருமண நிகழ்ச்சியின்போது மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாருக்குக் கொடுக்கக் கூடியது. இந்தக் கூரைப்புடவை கூரை என்பதற்கு புதிய புடவையாகும் என்பதை ஐங்குறுநூற்றிலே,

***“ஒண்தழை அயரும் துறைவன்***

***தண்தழை விலை என”[21]***

என்று ஆசிரியர் கூறுகின்றார். வசதி இல்லாதவர்கள் அதன் மதிப்புடைய ஒரு தழையாடையைக் கொடுப்பார்களாம். இதனை 'முலைவிலை' என்று கூறினர் பண்டையோர். சிறுவளை விலை (நற்:300), பாசிழை விலை (அகம் : 90) என்றும் கூறினர். ஒவ்வொரு திருமண நிகழ்ச்சிகளிலும் இது ஒரு சடங்கு போலவே தமிழகம் முழுவதும் நடந்து வந்தது எனலாம். தற்போது இந்தப் பழக்கம் கூரைப்புடவை என்பது சிவப்பு நிறத்தில் கதர் ஆடையாக மாறி மணமகள் விட்டார் மணமகள் விட்டார்க்கு எடுத்துக் கொடுத்து வருகிறார்கள். ஆனால் வசதிக்கு ஏற்ப இந்த புடவைகள் வேறுபட்டும் இருக்கின்றன. கூரை என்பது ஆடை இச்செயல் இப்போது வழக்காற்றில் இல்லை. ஆனால் முற்காலத்தில் அது பழகு தமிழில் வழங்கிய சொல். பாட்டிலும் உரையிலும் வழங்கிய சொல்,

***இம்மை யேதரும் சோறும் கூறையும்***

***ஏத்த லாம்இடர் கெடலுமாம்[22]***

என்னும் அடிகள்வழி அறியமுடிகிறது.

## ஆண்கள் உடை

ஆண்கள் இடுப்பில் ஒரு ஆடையும், மேலே ஒரு துண்டும் அணிந்திருந்தார்கள் செல்வந்தர்கள் மட்டும் இடையில் பஞ்சு போன்ற துணிகளால் வேட்டியைக் குறுக்கும் நெடுக்குமாகக் கட்டியிருந்தனர். மேலும் சட்டை போன்ற துணியையும், நீண்ட துண்டினைப் போர்வைபோல் உடுத்தி இருந்தனர். அரசனுக்கு உதவியாய் இருந்த யவனர்கள் சட்டை அணிந்திருந்தனர் என்றும் உடைவாள் செருகப்பட்ட இறுகிய ஆடையினை அணிந்திருந்தவர்கள் (முல்லை : 65) என்றும் கூறுகின்றன.

மற்றவர்கள் தங்களது தொழிலுக்கு ஏற்ப உடை அணிந்திருந்தனர் அகநானூற்றில் தழையுடை அணிந்து தலைவன் வந்ததாக (அகம் : 189) கூறுகிறது. “ஆடு, மாடு மேய்க்கும் இடையர்கள் இடுப்பில் ஒரு துணியை மட்டும் அணிந்து இருந்தார்கள். அவர்கள் மேலுடையை நிராகரித்தார்கள். பல பகுதியிலும் இந்நிலையே ஏற்பட்டது. வேடர்கள், விறகு, வெட்டிகள் மீனவர்கள் ஆகியோர் குறைந்த ஆடையோடு இருக்க விரும்பினர்.”[23] என டாக்டர் ந. சுப்பிரமணியன் கூறுகிறார்.

“ஆடவர், கீழாடை, மேலாடை முதலிய நாகரிகம்வாய்ந்த உடைகளை அணிந்திருந்தனர்.[24] என்று காமாட்சி குமாரசாமி கூறுகின்றார். இவைமட்டும் இல்லாமல் போர்க்காலங்களில் மறவர்கள் அணியும் உடையையும் ரா.பி. சேதுப்பிள்ளை அவர்கள் கூறியுள்ளார். “ ‘வட்டுடை’ என்ற உடையும் முன்னாளில் இருந்ததாகத் தெரிகின்றது. போர்க்களம் செல்லும் வீரர்கள் இடுப்பிலிருந்து முழந்தாள் வரை உடுக்கும் உடையே வட்டுடை என்று பெயர் பெற்று இருந்தது எனக் கூறுகின்றார்.”[25]

சங்க காலத்தில் அணிந்த ஆடைகள் தற்காலத்தில் காணமுடிவதில்லை. மானத்தைக் காத்தலில் மட்டுமில்லாமல் அவனுடைய அழகை உயர்த்திக் காட்ட எண்ணியதுதான் இதற்குக் காரணமாக உள்ளது.

## அணிகலன்

தமிழர்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர். இயற்கையில் கலந்துள்ள அழகுணர்ச்சியைக் கண்டு மகிழ்ந்தனர். தொடக்க காலத்தில் பலவகையான தளிர்களையும், மொட்டுகளையும், மலர்களையும், செடி கொடிகளையும் காதுகளில் செருகியும் கழுத்தில் அணிந்துகொண்டும் கைளிலும் தலையிலும் சுற்றிக் கொண்டும் தம்மை அலங்கரித்துக் கொண்டனர்.

நாகரிகம் வளர தமிழகத்தில் கிடைத்த பொன், வெள்ளி முதலிய உலோகங்களைக் கொண்டும் முத்துப் பவளம் முதலிய மணிகளை கொண்டும் அணிகலன் செய்து அணிந்தனர். பூண், அணி, பணி, இழை, கலன், நகை முதலிய சொற்கள் தமிழில் வழங்குவதைக் கொண்டு தமிழர்களின் சமூகப் பண்பாடு மரபில் அணிகலன்களின் பயன்பாடு இருந்ததை அறியமுடிகிறது.

பொன்னுக்கு அடுத்த நிலையில் வெள்ளி இருந்தது. காலில் அணியப்படும் தண்டை, சதங்கை, சிலம்பு போன்ற அணிகள் வெள்ளியால் செய்யப்பட்டன. ஆண்கள் பெண்கள், சிறுவர் ஆகிய மூவரும் தலையணிகள், கழுத்தணிகள், கையணிகள், கைவிரலணிகள், பாத அணிகள் போன்றவை அணிந்தனர். இடையணி, துடையணி என்னும் இரண்டும் பெண்களுக்கு சிறப்பு செய்யும் அணிகலன்களாக இருந்தன.

## காதணி

காதில் அணியப்படும் அணிகள்களில் காதணி ஆகும். பழங்கால மகளிர் தம் காதுகளில் பூவேலை செய்யப்பட்ட பொன்னால் ஆன குழைகளை அணிந்தனர் இதனை,

***"யாங்கா குவன்கொல் பூங்குழை***
***................. கனங்குழை மகளிர்"***[26]

என்ற அடிகள் உணர்த்துகின்றன. பிற்காலத்தில் மக்கள் வயிரம் பதித்த 'நிலக்கு தப்பையை' அணிந்ததாகச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது. இக்கால மகளிர்கள் காதில் பலவகையான பொன், வைரம் முதற்கொண்டு பல்வேறு உலோகங்களால் செய்யப்பட்ட அணிகலன்களை அணிந்து தம்மை அழகுபடுத்திக் கொண்டனர். தோடு, ஒட்டு, ஒலை, சிமிக்கி, குண்டு, வளையம் போன்ற காதணிகளைப் பயன்படுத்திப் பண்பாட்டு மரபோடு வாழ்ந்தனர்.

## வளையல்கள்

வளைந்து இருப்பதால் வளையல் எனப் பெயர்பெற்று இருக்கலாம். பெண்களின் அணிகலன்களில் ஒன்றாக விளங்குகிறது. செல்வந்தர்கள் தங்கம், பிளாட்டினம் போன்ற விலையுயர்ந்த நகைகளை அணிந்துள்ளர்கள். ஆனால் சங்க காலக் கிராம மக்கள் கடலில் இருந்து எடுக்கப்பட்ட சங்கை அறுத்துக் செய்யப்பட்ட வளையல்களையே அதிகமாக உபயோகித்து வந்துள்ளனர் என்பதனை,

***"கோடு ஈர் இலங்குவளை நெகிழ நாளும்"[27]***

***"கடற்கோடு அறுத்த அரம்போழ் அவ்வளை"[28]***

எனச் சங்க இலக்கிய நூல்கள் நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறது. மேலும் (குறுந் : 31), (அகம் : 5), (குறுந் : 238) போன்ற பாடல்களில் வளையல் பற்றிய குறிப்புகளை அறியலாம்.

## முத்து

கடலில் குதித்து மூச்சடக்கி சிப்பியைக் கொன்று முத்து எடுப்பதை செய்யும் ஒரு வம்சமே சங்க இலக்கியத்தில் இருந்து வந்துள்ளது. இப்படிக் கடினப்பட்டுப் பெறும் இந்த முத்து விலை மதிக்க முடியாததாக அமைகின்றது. ஏழைகளின் கையில் இந்த முத்தானது இல்லை. பணக்காரர்களின் வீடுகளில் நிறைந்து இருந்தது எனலாம். அகநானூற்றுப் பாடல் ஒன்றில்,

***"கொள்கை அம் பெரும்துறை முத்தின் அன்ன"[29]***

எனக் கூறப்பட்டுள்ளது. கொற்கை நகரின் பெருந்துறைப் பட்டினத்தில் முத்து கொட்டிக் கிடக்குமாம். அங்கு சென்றால் தங்களுக்கு வேண்டிய முத்தைப்

பெற்றுக்கொள்ளலாம் எனக் கூறுகிறது. இதே போல் (அகம் : 116) அகநானூற்றுப் பாடலிலும் கூறப்பட்டுள்ளது.

கலித்தொகையில் தலைவி ஒருத்தி வீதியிலே நடந்து செல்கின்றாள். தலைவன் அவளின் அழகை நோக்காமல் அவள் கழுத்திலே அணிந்திருக்கக் கூடிய மூன்று வடமாகிய முத்து மாலையை பார்க்கின்றான் என்பதை

***"பயந்து எம்கண் ஆரயாம் காண நல்கி***
***திகழ் ஒளிமுத்து அங்கு அரும்பாகத் தைஇப்***
***பவழம் புனைந்த பருகி சுமப்ப"[30]***

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவன் அந்த முத்து மாலையில் செய்யப்பட்டுள்ள கலைநயத்தை உற்றுநோக்குகின்றான். ஒளி திகழும் முத்துகளை விளிம்பிலே பதித்து பவளத்தால் சக்கரம் செய்யப்பட்டு இருந்த அணிகலனை அணிந்திருந்தான் என்று அப்பாடல் கூறுகிறது.

## அழகிய அணிகலன்கள்

மகளிர் தங்கள் கூந்தலில் பலவகையாகப் பின்னலிட்டுக் கொள்வதுண்டு அவற்றில் "தங்களது கூந்தலில் ஐந்து பகுதியாக்கி அணிந்தனர். குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்பன அவை"[31] என டாக்டர் ந. சுப்பரமணியன் கூறுகிறார். கட்டுவிச்சி ஒருத்தி சங்கை மணிகளாக ஒரே கோவையாகக் கோர்த்து வெண்ணிறமுடைய நீண்ட கூந்தலைக் கொண்டிருந்தார் என்பதை,

***"மனவுக் கோப்பு அன்ன நல்நெருங் கூந்தல்"[32]***

எனக் குறுந்தொகை ஆசிரியர் கூறுகின்றார். இதேபோல் பூக்களுடன் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன்களைத் தலையிலே சூடினாள் தலைவி (குறுந் : 21) எனச் சங்கஅக இலக்கியம் கூறுகிறது. மேலும் குறுந்தொகையில்,

***“இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்***

***புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்”[33]***

எனச் சுட்டப்பட்டுள்ளது. தெருவில் விளையாடும் தலைவன் ஐந்து வகையால் அழகுற முடியப்பட்டுள்ள தலைவியின் கூந்தலைப் பற்றி இழுத்தானாம் என்று பொருள் கூறப்படுகிறது.

“பெண்கள் அழகிய தலைக்கோலம் செய்து கொண்டனர் என்பதையும், பலவகை அணிகலன்கள் அணிந்தாலும் மூக்கணி எதுவும் அணியவில்லை என்பதும் சித்தன்னவாசல் ஓவியங்களால் அறியப்படுகின்றன”[34] என்று பா. இறையரசன் கூறுகின்றார் ஆக மகளிர் கூந்தலில் பலவகையாகப் பின்னவிடும் முறை இருந்து வந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது. பெண்கள் காதில் தோடு அணியும் பழக்கம் இருந்து வந்துள்ளது என்பதை,

***“வாள்போல் வாய கொழுமடற் றாழை”[35]***

என்ற குறுந்தொகைப் பாடல் கூறுகிறது.

## ஆடவர் அணிகலன்கள்

ஆடவர்கள் தன் கால்களில் கழல் அணியும் வழக்கத்தினைப் பண்பாட்டு மரபாகவும் கொண்டிருந்தனர். அகநானூற்றில் “கழற்கால்”[36] எனக் கூறுகின்றது. ஆனால் இன்று யாரும் காலில் அணியவில்லை. மேலும் கூர்மை மிக்க அம்பினால் கொடும் தொழில் செய்யும் மறவர்கள் கையில் வீரவளை அணிந்திருந்தார்கள். வீரமறவர்கள் போரிடும் போது,

***“நன்கூட்டு அவிர்குழை மலைந்த நோக்கே”[37]***

என்ற அடி மூலமாக, காதிலே அணிந்த மத்தக அணி என்று சொல்லக்கூடிய குழையினை அணிந்திருந்தனர் என்று அகநானூறு கூறுகின்றது.

## சிறுவர் அணிகலன்

குழந்தைகளுக்கு சிறுவயது முதலே அணிகலன்களைப் பூட்டி மகிழ்வதுண்டு. ஆண், பெண் என்று பாகுபாடு பார்க்காமல் செய்துண்டு. அகநானூற்றில் செவிலித்தாய், தன் மகளின் சிறந்த கால்களில் சிறு சதங்கை கட்டி அழகு பார்த்தாளாம்.

***"பொலன்செய் கிண்கிணி நலம்பெறு சேவடி"***[38]

என ஆசிரியர் கூறுவதிலிருந்து அறியமுடிகிறது. தவளையின் வாய்போன்ற வடிவினை உடைய சிறு சதங்கையினை அணிந்திருத்தல் பற்றி குறுந்தொகை பேசுகிறது கலித்தொகையில்,

***"பொடி அழகற் புறம் தந்த செய்யுறு கிண்கிணி"***[39]

எனக் குறிக்கப்பட்டுள்ளது. பொன்னை உருக்கும்போது அதில் கொஞ்சும் செம்பைச் சேர்த்து, கால் சதங்கையை உருவாக்கினார்கள் என்று கூறுகிறது.

## தலையாய அணிகள்

தலை, காது, கழுத்து முதலிய உறுப்புகளில் அழகிய வேலைப்பாடுகளுடன் அணியப்படும் அணிகள் தலையாய அணிகள் ஆகும்.

***"பொன் செய் புனையிழை கட்டிய மகளிர்***
***கதுப்பிற் ............................"***[40]

என்னும் வரிகள் பெண்கள் மலரையும், தழையையும் பொன் அணியையும் கூந்தலில் அணிகலனாக அணிந்த செய்தினை கூறுகின்றது.

## சிலம்பு

மகளிர் காலில் அணியும் அணிக்குச் 'சிலம்பு' எனப் பெயர். சிலம்பினுள் ஒலி எழுப்பும் விதமாக முத்துகளும், மாணிக்கப் பரவல்களும் வைக்கப்பட்டு-யிருந்தன. பழங்கால மகளிரின் அணிகலன்களிலே சிலம்பு மிகச்சிறந்த அணிகலனாக இருந்ததைச் சிலப்பதிகாரம் கொண்டு அறியலாம். சிலம்பு செய்யப்பட்ட விதம் பயன்படுத்தப்பட்ட உலோகங்கள், இவை பற்றி கருத்துகளைச் சிலப்பதிகாரம் விளக்குகிறது இதனை,

***"......................... தொடியோள்***
***மெல்லடி மேவவுஞ் சிலம்பே"[41]***

என்கிறது.

## இடை அணிகள்

தோள், கை, கைவிரல், இடுப்பு முதலிய இடங்களில் அணியப்படும் அணிகள் இடைத்தர அணிகள் எனப்படும். முழங்கைக்குமேல் தோளில் அணியப்படும் அணி தோளிணி எனப்படும். இதனைத் 'தோள்வளை' எனவும் கூறுவர். இது பொன்னால் செய்யப்பட்டு இருக்கும் இதனை,

***"வணங்க இறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்"[42]***

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகிறது.

## குடியிருப்புகள்

மனிதன் வெய்யிலில் காய்ந்து இருக்க வேண்டும். மழையில் நனைந்து குளிர்ச்சியில் கைகால்கள் நடுங்கி இருக்க வேண்டும். வெயிலின் கொடுமை பொறுக்கமுடியாமல் மர நிழலில் நின்று இளைப்பாறி இருக்க வேண்டும். அதனுடைய சுகத்தைப் பெற்ற மனிதன் தினம்தினம் வெயில் வரும்போது

ஆலமரம், அரசமரம், வேப்பமரத்தடியில் நின்று தன்னை காத்துக் கொண்டிருக்க வேண்டும். அதுபோல மழை வரும்போது குளிர்ச்சி தாங்க முடியாமல் அங்கு இருக்கும் கற்பாறையின் அடியில் சென்று அமர்ந்திருக்க வேண்டும். அப்போது அவன் மழையில் நனையாமல் இருந்திருப்பான். பிறகு மழை வரும்போது எல்லாம் ஓடிச்சென்று பாறையின் அடியிலும் குகைக்குள்ளும் ஒளிந்து தனது சுகத்தைப் பெருக்கிக் கொண்டான்.

இப்படிச் சென்று கொண்டிருந்த மனிதன் மழையில் இருந்து காத்த மரம் இலைகளான குடிசையைப் போட்டு அதில் தங்கியுள்ளான். வெப்பத்தைப் போக்கத்தான் குடிசைச் சுற்றிலும் மரக்கன்றுகளை வளர்த்து வந்தான். இப்படிச் சாதாரணமான முறையில் வளர்ந்த உறைவிடமானது மாடமாளிகைகள், அரண்மனைகள் எனப் பல்வேறு வடிவங்களில் அன்றும் இன்றும் உயர்ந்து சமூகப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கிறது.

## குடிசைகள்

கிராமத்தில் வாழும் ஏழை மனிதர்கள் குடிசையிலே வாழ்ந்து வந்தனர். இதற்கு எட்டுத்தொகையில் நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன. நற்றிணையில்,

***“கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை***
***முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை”[43]***

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நீர்ப்பரப்பு சூழப்பட்ட இடத்தில் தாழை மரங்களை வேலியாக உடைய கொல்லை என்கிற காடு அங்கு முள்ளிச் செடிகளால் வேய்ந்த கூரையை உடைய சிறிய குடி என ஆசிரியர் கூறுகின்றார். மேலும் வீட்டைச் சுற்றிலும் சோலைகளில் காற்று அடிப்பதனால் பனைமரத்தில் இருந்து வீழ்ந்த ஓலைகளை எடுப்பார்களாம். அந்த ஓலையின் அடிப்பாகத்தை வெட்டி

விட்டு வீட்டைச் சுற்றிலும் வேலி அமைக்கும் பழக்கம் இருந்து வந்திருக்கிறது. (நற்:354) என ஆசிரியர் கூறுகின்றார்.

தினைப்புனம் காக்க அமைந்திருக்கக் கூடிய குடில்களை அருவி அடித்துச் செல்லுமாம். அவ்வாறு அவர்கள் நிலத்திலே அடித்து வரப்பட்ட மரம், இலை, தழைகளை கொண்டு வேய்ந்து புதிய குடில்களை உண்டாக்குவார்கள் (குறுந்:284) எனக் குறுந்தொகை கூறுகிறது.

ஏழை எளிய மக்கள் தங்கள் வீட்டினை ஊகம்புல் என்னும் ஒருவகைக் கோரப்புல்லால் தன் குடிசையை வேய்ந்து அதில் தங்குவார்கள் என்பதை

***“குன்றக் குறவன் புல் வேய் குரம்பை”[44]***

என ஐங்குறுநூற்று ஆசிரியர் கூறுகின்றார். மேலும் அகநானூற்றுப் பாடல் ஒன்றில் நான்கு பக்கமும் குடிசை கட்ட முடியாத எயினள் கற்பாறையின் ஒரு பக்கம் வைத்து மற்ற மூன்று பக்கங்களிலும் குடிசை வேய்ந்தாள் (அகம் :129:6) என ஆசிரியர் கூறுகின்றார்.

நெய்தல் நில வாழ் மக்கள் கடற்கரை சார்ந்த நிலப்பகுதிகளில் பெருங்கூட்டமான குடில்களை அமைத்து வாழ்ந்தனர். இதனை,

***“துறைகெழு சிறகுடி”[45]***

***“பரதவர் கானலம் சிறுகுடி”[46]***

என்று நெய்தல் நிலவாழ் மக்களின் குடியிருப்புகள் சுட்டிக் காட்டப்படுகின்றன. நெய்தல் நிலத்தவர் குடியிருப்புகள் ‘சிறுகுடி’ என அழைக்கப்படுகின்றனர்.

இச்சமுதாயத்தினர் வாழ்ந்த இடங்களைச் சேரி, பாக்கம், பட்டினம் என்னும் பெயர்களில் குறிப்பிடுகின்றனர். இதனை,

***"புலாவஞ் சேரிப் புல்வேய் குரம்பை"***[47]

என்ற அகநானூற்று பாடலடி கூறுகின்றது.

## குடியிருப்புகளும் தெருக்களும்

மக்கள் தங்கள் மனதுக்கு பிடித்ததுபோல் வீடுகளைக் கட்டித் தெருக்களையும் அமைத்துக்கொண்டு பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர். இதனை, எட்டுத்தொகை அக இலக்கியங்கள் சான்று கூறுகிறது.

***"புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி***
***மனைமணல் அடுத்து மாலை நாற்றி"***[48]

என்று, விடலையின் தாயானவள் நன்கு அலங்கரிக்கப்பட்ட மதில் போன்ற தன் வீட்டுப் புறச் சுவரில் செம்மண் கலந்து பூசுவாளாம். பிறகு முற்றத்தே மணலைப் பரப்பி மாலைகளைத் தொங்கவிட்டு வீட்டினைக் கோலஞ் செய்வாள் எனக் கூறுகிறது. இதேபோல் வீட்டில் செம்மண் கலந்து பூசும் செய்தி அகநானூற்றில் (394) இடம்பெற்றுள்ளது. சங்க காலத்தில் வீட்டிற்குள் செல்லும்போது குனிந்து சென்றதை,

***"குவிந்த குரம்பை அம்குடிச் சீறூர்"***[49]

என்ற பாடலடிமூலம் அறியலாம்.

## மாடங்களும் மாளிகைகளும்

குடியிருப்புகள் ஒரு புறம் இருப்பினும் மாடமாளிகைகள், கோட்டை கொத்தளங்களும் இருந்தன. மணலால் நிரம்பிய முற்றத்தினை உடைய அழகிய மாளிகை என்பதை,

*"தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்த"[50]*

என நற்றிணை கூறுகிறது. மேலும் கொழுத்த மீனை உண்ணும் மாளிகை (நற் 127), தந்தையின் புகழ்மிக்க மாளிகை (நற் 162) மலையைக் குடைந்து செய்த வானளாவிய உயர்ந்த மாளிகை (அகம் 93) போன்றவை இருந்ததாக ஆசிரியர் கூறுகிறார். "ஒரு நாடு அல்லது நகரம் உயர்ந்து விளங்கும் கட்டிடங்களாலேயே பேரும் புகழும் பெறுகின்றது"[51] எனக் காமாட்சி குமாரசாமி குறிப்பிடுகிறார். பதிற்றுப்பத்தில் சித்திரம் போன்ற அழகுடைய பகைவர்க்கு அச்சம் தரக்கூடிய வகையில் இருக்கும் அரண்மனைகள் இருந்தன.

"அரசனுடைய வீடு மிகப் பெரிதாக இருந்ததால் நகர் எனப்பட்டது. இறைவனின் இருப்பிடமும் நகர் எனப்பட்டது. மேலும் குறிப்பிடுகையில் அரசனின் தலைநகர் அரசிருக்கை, கோநகர், படைவீடு என்னும் பெயர்களுள் ஒன்றால் அழைக்கப் பெற்றது. இவற்றுள் அரசிருக்கை என்பது அரசன் நிலையாக ஆளும் நகரைக் குறிக்கும். கோநகர் என்பது அரச குடும்பத்தினர் இருந்து ஆளும் நகரையும், படைவீடு என்பது படை நிறுத்தப்பெற்று அரசன் நாடு காவல் தங்கக் கூடிய நகரையும் குறிப்பது உண்டு"[52] எனப் பாவாணர் குறிப்பிடுகின்றார். அரண்மனை வீடு, நகர் என்று அழைக்கப்படுவது சுட்டும் பொருளை நாம் அறிய வழி கிடைக்கிறது. மேலும் (அகம் 47, 124) ஆகிய பாடல்களில் கூறப்படுகிறது.

## பேரூர்

பட்டினம், பாக்கம், கூடல், நகர், தலைநகரம் போன்றவை பேரூர் எனப்பட்டது. குறுந்தொகையில் பெரிய ஊர் ஒன்றில் விழா நடந்தது. அதனைப்,

***"பேர்ஊர் கொண்ட ஆர்கலி விழாவில்"[53]***

எனக் குறுந்தொகை ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

மலைப் பகுதியில் கிடைக்கும் பனை ஓலை, புல், நார், மரம் ஆகியவற்றைக் கொண்டு குறிஞ்சி நில மக்கள் கூரைகளை வேய்ந்தனர். அவ்வாறு புல்லால் வேயப்பட்டு இருந்த குடிசையானது நைந்து போய் மழை நாளில் ஒழுகுகின்றது. வெயில் காலங்களில் சூரிய ஒளி உள்ளே நுழைவதற்கு ஏதுவாக அமைகின்றது. இத்தகைய குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கை நிலையை ஐங்குறுநூற்றில்

***"குன்றக் குறவன் புல்வேய் குரம்பை***

***மன்றாடு இளமழை மறைக்கும்"[54]***

என்று ஆசிரியர் கூறுகிறார்.

குறிஞ்சி நில மக்களிடையே புல்லால் வேய்ந்த குடியிருப்புகளை அமைக்கும் பழக்கம் இருந்தது. இவ்வாறு அமைக்கப்படும் கூரை அமைந்த குடில்கள் மலைச் சாரலின்கண் நிறைந்து காணப்பட்டன. இதனைக் குறுந்தொகை,

***"கூரை முற்றும் சாரல்"[55]***

என்று குறிப்பிடுவது மூலம் அறிய முடிகிறது. ஏழைகள் கூரை வீடுகளில் வசிக்க, பணக்காரர்கள் மாளிகைகளை வாழ்ந்தனர் என்பதை,

*“நெடுநகர் ஒரு சிறை”*[56]

என்ற அகநானூற்று பாடல் குறிப்பிடுகின்றது.

## விளையாட்டுகள்

சங்க காலத்தில் விளையாட்டுகள் என்பது பொழுதுபோக்கிற்காகவும், உடல் ஆரோக்கியத்தையும் முன்னிட்டும் நடைபெற்றன. விளையாட்டு என்பது இச்சமூகத்தில் பண்பாட்டு மரபினைக் காட்டுவதாக அமைகிறது. பழந்தமிழ் மக்களிடையே கைப்பந்தாடல், கால் பந்தாடல், ஓரையாடல், ஊசலாடல், சூதாடல் போன்ற விளையாட்டுகள் இருந்தன. ஆண், பெண் இருவரும் இவ்விளையாட்டுகளை விளையாடினர். விளையாட்டு என்பது ஒரு கலைகாகவே அக்கால மக்களால் போற்றப்பட்டது. இதில் பெண்கள் மிகவும் விரும்பும் விளையாட்டாகப் கைப்பந்தாடல் இருந்தது. இது பற்றி இரா. நெடுஞ்செழியன்,

***“பூவினாலோ, துணியினாலோ, நாரினாலோ அல்லது***
***கொடியினாலோ வரிந்து கட்டப்பட்ட பந்தினால்***
***மகளிர் விளையாடுவது பண்டைய வழக்கம்”***[57]

என்ற எடுத்துக் கூறுவது வாயிலாக அறிய முடிகிறது.

புனையப்பட்ட பந்தினைக் கொண்டு மகளிர் விளையாடினர் என்பதை,

***“பந்தொடு பெயரும் பிரிவிலாட்டி”***[58]
***“வரியணி பந்தும்”***[59]
***“.................... பன்மாண்***
***வரியணி பந்தொடுவைஇய செல்வோ”***[60]
***ஆட்டு ஒழி பந்தின் கோட்டு மூக்கி இறுபு”***[61]
***“பந்து நிலத்து எறிந்து”***[62]

என்ற நற்றிணைப் பாடலடிகள் மகளிர் ஆடிய கைப்பந்தாட்டம் பற்றிக் குறிப்பிடுகின்றன.

சங்க காலத்தில் பந்தினைக் காலில் உருட்டி விளையாடும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர் என்பதை,

***"ஓடுபந் துருட்டுநள் போல ஓடி"[63]***

எனும் அடி சுட்டுகின்றது. நுணுக்கமான வேலைப்பாட்டுடன் கூடிய சிறிய பெண் போன்ற உருவினைச் செய்து மகளிர் விளையாடுவர். இது பாவை விளையாட்டு என அழைக்கப்பட்டது இதனை,

***"......................நல்வினைப்***
***பொறியழி பாவையின்"[64]***

என்ற பாடல் மூலம் விளங்குகிறது. பின்பு ஊசல் ஆடல் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்றாகும். கயிற்றின் இருமுனைகளையும் மரக்கிளையில் கட்டி, அதில் மகளிர் அமர்ந்து ஆடுவர். இதனை,

***"வழிநாற் ஊசலின் தூக்கு தொறும்"[65]***

என்று கூறுவதன் மூலம் அக்கால மகளிரின் ஊசலாடலைப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

## ஆண்கள் விளையாட்டு

பொழுதுபோக்கிற்காகச் சிறுசிறு விளையாட்டுக்களை ஆடிய மனிதன் அதன் பெருமைகளை உணர ஆரம்பித்தான். விளையாட்டில் ஆண்கள் விளையாட்டு, பெண்கள் விளையாட்டு, சிறுவர் சிறுமியர் விளையாட்டு எனப்

பிரித்து வைத்தனர். வீரத்தொடு பல விளையாட்டினை விளையாடிப் பண்பாட்டு மரபினைக் காட்டுகின்றனர் என்பதற்குப் பல சான்றுகள் சங்கஅக இலக்கியத்தில் காணப்படுகிறது.

***"நோக்கு அஞ்சான் பாய்ந்த பொதுவினைச் சாக்குத்தி***

***கோட்டினைக் கொண்டு குலைப்பதன் தோற்றம்காண்"***[66]

என்று ஏறுதழுவுதலைப் பற்றிக் கலித்தொகை கூறுகின்றது. புல்லிய நிறத்தைக் கொண்ட ஏற்றின் நோக்கை அஞ்சாது பாய்ந்தான் ஓர் ஆயர் இளைஞன் அவனைச் சாவக்குத்தி, தன் கொம்புகளுக்கு இடையே கொண்டு அவனைக் குலைக்கின்ற எருதுகள் என ஆசிரியரால் குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவியை அடைவதற்காக இந்த வீரவிளையாட்டில் பங்கு பெற்று வந்துள்ளனர் எனக் கலித்தொகைப் பாடல்கள் உரைக்கின்றன.

மேலும் தாய விளையாட்டிலே பத்து தாயம் போட்டவன் வெற்றி பெறுவான் எனக் கலித்தொகை (136) பாடலில் சூதாட்டம் பற்றிய குறிப்பு வருகிறது. தலைவன் பரத்தையருடன் மடுக்களிலே நீராடி விளையாடியதால் கண்கள் சிவந்து போனதை (குறுந்:354) இலக்கியங்கள் கூறுகின்றன.

## மகளிர் விளையாட்டு

மகளிர் விளையாட்டுகள் சங்க அகப் பாடல்களில் அதிகம் காணப்படுகிறது. பந்தாடல், கழங்காடல், ஊஞ்சல், பாவை செய்தல், புனலாட்டம், பூக்களைப் பறித்தல் போன்ற விளையாட்டுகளில் மகளிர் ஈடுபட்டு வந்துள்ளனர். பெண்கள் கூட்டமாக விளையாடச் செல்வர். விளையாட்டு மகளிர் கூட்டத்தை ஆயம், ஓரையாம், பொய்தல் மகளிர் என்று குறிப்பிடுவர்.

## பந்தாடல்

பந்து விளையாடும் போது தனித்து செல்லமாட்டாள் தலைவி என குறுந்தொகை (396) கூறுகிறது. அக்கால மகளிர்கள் பந்து விளையாட்டினை பெரிதும் விரும்பி விளையாடுவது பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது. இதை நற்றிணையில்,

*"செல்வத் தந்தை இடனுடை வரைப்பின்"*[67]

எனக் குறிப்பிடுகிறது. யானை போன்ற செல்வத்தை உடையவன் தலைவியின் தந்தை அவனது அகன்ற இடத்தில் பந்தைக் காலால் உருட்டி ஓடியாடி அங்குமிங்குமாக விளையாடினாளாம் தலைவி என ஆசிரியர் கூறுகிறார். மணப்பருவம் அடைந்துள்ள தலைவி இன்னும் சிறுபிள்ளைத் தன்மையால் புறத்தே பந்தினை எறிந்து விளையாடிக் கொண்டிருந்தாளாம் எனவும் (அகம் 275), மகளிர் வீட்டில் இருக்கும் போது பந்தாடுதல் என்பது வழக்கமான ஒன்றாகும் எனவும் (ஐங் : 295) இலக்கியங்கள் கூறுகின்றது.

## கழங்காடல்

கழங்கு என்பது கழற்சிக்காய் அல்லது சிறுகல் துண்டுகள் இரண்டு பக்கமும் வைத்து ஓடியாடி விளையாடும் விளையாட்டு,

***"பந்தும் பாவையும் கழங்கும் எமக்கு ஒழித்தே"***[68]

பெண்கள் பந்தும் பாவையும் ஆடியது போலவே கழங்கு விளையாட்டை ஆடி வந்திருக்கின்றனர். வீட்டு மனையின் முற்றத்தில் தொடியணிந்த மகளிர் கழங்கு விளையாடினார்கள் (நற் : 79) என்று இலக்கியங்கள் கூறுகின்றன.

## புனலாட்டம்

பெண்கள் நீரிலே குதித்து விளையாடும் விளையாட்டு புனலாட்டம் அல்லது நீர் விளையாட்டு எனக் கூறுவர். ஆறு, அருவி, குளம் போன்ற இடங்களில் ஆடும் ஆட்டமாகும். இதனை நற்றிணை,

***“கடல் ஆடு வியல் இடைப் பேர் அணிப் பொலிந்த”[69]***

என்று கூறுகிறது. மகளிர் கடலிலே சென்று நீராடி விளையாடினர் என ஆசிரியர் கூறுகிறார். கடலில் தோழியுடன் நீராடி மகிழ்தல் (நற் : 245) கடலில் பாய்ந்து மகளிர் நீராடுதல் (நற் : 395) புனல் விளையாட்டு (ஐங் 17, 71, 80) போன்ற பாடல்களில் விளையாட்டைப் பற்றிக் கூறியுள்ளது.

## அலவன் ஓட்டுதல்

ஆற்றோரத்திலும் கடலோரத்திலும் நண்டுகளைத் துரத்துவது பழங்கால மகளிர் விளையாட்டுகளில் ஒன்றாக இருந்துள்ளது.

***“ஓரை மகளிர் ஆராங்கு ஆட்ட***
***ஆய்ந்த அலவன் துன்புறு துணைபரி”[70]***

கடலில் அலைகள் மோதுகின்ற மணலில் விளையாட்டு மகளிர்கள் ஒன்றுபோல் கூடி விளையாடினர் பிறகு இளமையுடைய பெண்கள் நடை தளர்ந்த நண்டினை அலைக்கழித்து விளையாடினர் இவ்வாறு நண்டுகளை அலைக்கழிப்பதும், பூக்களைப் பறித்து விளையாடுவதும் பெண்களின் பொழுதுபோக்குகளாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

## வண்டல் பாவை

வண்டல் மண்ணைக் கொண்டு பாவைசெய்து விளையாடுவதைப் பண்பாட்டு மரபாகவும் கொண்டு விளக்கினர். இதனை, வண்டல் பாவை

விளையாட்டு என்று இதனை ஐங்குறுநூறு (124) கூறுகிறது. கொல்லிமலையில் ஒரு பகுதியில் செதுக்கப்பட்ட பாவை கொல்லிப் பாவை எனப்பட்டது.

*“வண்டற் பாவை வௌவலின்*

*நுண்பொடி அளைஇக் கடல் தூர்ப்போளே”*[71]

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலடியில் வண்டல் மண்ணால் பாவை செய்து அதற்கு மலர்புனைந்து விளையாடுவது இளம் பெண்களின் வழக்கம். இவ்விளையாட்டு மணல்வீடு கட்டி விளையாடுவது போல் ஆகும். பலரும் இறங்கி நீராடுகின்ற துறையிலே பாவையானது நீரிலே அடித்துச் சென்றதனால் தலைவி துன்பப்பட்டாள் என (ஐங் : 69) அக இலக்கியம் கூறுகிறது.

## ஓரை விளையாட்டு

“ஓரை எனும் சொல் ‘விளையாட்டு’ என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது என்றும் ஆய்வாளர் சிலர் கருதுகின்றனர்.”[72] என்ற வெள்ளைவாரணனாரின் கூற்றை மேற்கோளாகக் காட்டுகிறார் கே.கே. பிள்ளை

*“ஓரை மகளிர் அஞ்சி ஈர்ஞெண்டு*

*கடலில் பரிக்கும் துறைவனொடு ஒருநாள்”*[73]

நீர் ஒழுகும் கூந்தலையுடைய ஆய மகளிர்கள் கடலிலே நண்டினை அலைக்கழித்து விளையாடுகின்றனர் என்று குறுந்தொகை கூறுகிறது. ஓரை விளையாடிய நிகழ்வுகளைக் குறுந்தொகை (3,6) எடுத்துக் கூறுகிறது.

## ஊஞ்சலாடுதல்

மரம் போன்றதேனும் உயர்ந்த இடத்தில் கயிற்றைக் கட்டி அக்கயிற்றியில் ஊஞ்சல் ஆடுவது ஒருவித விளையாட்டாகும். சங்க இலக்கியத்திலும் மகளிர் ஊஞ்சலாடும் நிகழ்வுகள் கூறப்பட்டுள்ளன. அகநானூற்றில்,

***"ஒண்தொடி மகளிர்க்கு ஊசலாக***

***ஆடுசினை ஒழித்த கோடுஇணர் கலிய"[74]***

என்னும் அடிகளில், வளையல் அணிந்த மகளிர் காவல் காத்திருந்தனர். அம்மகளிர் ஊசல் ஆடும் பொருட்டுக் கிளைகள் வெட்டப்பட்ட வேங்கை மரத்தில் உள்ள கொம்பில் கயிற்றைக் கட்டி ஆடினார்கள் என்று ஆசிரியர் கூறுகிறார்.

## சிறுவர் விளையாட்டு

குழந்தை பிறந்து வளரும்போது சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடல் வேண்டும். குழந்தை சோம்பி இருப்பது அதன் வளர்ச்சியைக் கெடுக்கும். அதனால் குழந்தைகள் துள்ளி விளையாட வேண்டும் என்பதை,

***"கவழம் அறியா நின்கைபுனை வேழம்***

***பரிபுனை பூங் கயிற்றின் பைபய வாங்கி***

***அரிபுனை புட்டிலின் அங்கண் ஈர்த்து"[75]***

என்ற அடிகளில் கவளம் கொள்ளுதல் அறியாத கையாற் செய்த யானையைப் பரிபுனை பூங்கயிற்றினால் கட்டிப் பைய இழுத்துக்கொண்டு காலில் கட்டிய மணிகள் ஒலிக்க சிறுவர்கள் இழுத்து வருவர் என்று ஆசிரியர் கூறுகிறார்.

***"கல் சிறா அர் நெல்லி வட்டு ஆடும்***

***வில் ஏர் உழவர் வெம்முனைச் சீறூர்ச்"[76]***

என்னும் பாடலில் சிறுவர்கள் பொன்னை உரைத்து மாற்றுப் பார்க்கும் கல்லைப் போன்ற ஆடுகளத்தைக் கீறிக்கொண்டு நெல்லிக்காய்களை வட்டாக வைத்து ஆடுவார்கள் என்று ஆசிரியர் கூறுகிறார்.

சிறுவீடு கட்டிச் சமைத்து விளையாடல் (நற் 9) சிறுவர்கள் பாறையின் மீது வரையப்பட்ட குருவியை உயிருடன் இருப்பதாக நினைத்துக் கொண்டு

குச்சியில் அடிப்பது (நற் : 58), எருமை மாட்டின் பாலைக் கறந்தும் அதன்மீது ஏறி ஊர் சுற்றுவது (நற் : 80), சிறுவர்கள் தேரினை உருட்டி நடைபழகுவதை (கலி 81) போன்றவற்றை சங்கஅக இலக்கியங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

***"கருந்தொழில் வினைஞர் கைவினை முற்றி***

***ஊர்ந்துபெயர் பெற்ற எழில்நடைப் பாகரொடு"***[77]

தச்சர் தொழில் முற்றுப்பெற்ற பின்னர் அத்தேரின் மீது ஏறிப்பார்த்து நல்ல ஓட்டம் உண்டு என்று புகழப்பட்ட நடையை உடைய தேர் என்று சிறுபிள்ளையின் தேருக்குக் கலைஞர் செய்யும் தேரின் வலிமை கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது.

தச்சனால் செய்யப்பட்ட குதிரையைச் சிறுவர்கள் விளையாட்டுக்காக இழுத்து சென்றதையும் (குறுந் 61), சிறுதேர் உருட்டி விளையாடல் (ஐங் 96, 403) போன்றவற்றை சங்கஅக இலக்கியம் எடுத்துக் கூறுகிறது.

உழலை, ஊசல், ஊதல், ஊன்றித் தாண்டல், எண்ணல் விளையாட்டு, எழில் விளையாட்டு, ஒளிதல் விளையாட்டு, ஓடியாடல், ஓரை, வேலன் விளையாட்டு, கழங்கு, களவுக்காய், கவணை, கவறு, கன்னம், தூக்கல், காய்மறை, குத்துச்சண்டை, குரவை, குளிர், கையெறி, கோழிச்சண்டை, சிற்றில், தட்டை, தழல், தழை, பறை, புனலாடல், மிதவை, முதுமொழி, வட்டு, கோட்டு வட்டு, நெல்லிவட்டு , மணிவட்டு, வண்டல், வண்டல் பாவை, வீளை, வேடம் போன்றவை தமிழர்கள் அக்காலத்தில் கொண்ட பொழுதுபோக்கு விளையாட்டுக்களாகும்.

## நம்பிக்கை

மனித இனம் குழுக்களாக வாழத் தொடங்கியபோது தனக்கென சில நெறிமுறைகளை வகுத்துக் கொண்டனர். அத்தகைய மக்கள் தாம்

தங்களை இயக்கும் சக்தி ஏதோ ஒன்று உண்டு என நம்பத் தொடங்கினர். இதன் விளைவாக முதலில் இயற்கை வழிபாடு தோன்றியது. இதனை அடுத்து தங்களை ஆட்டுவிக்கும் மந்திரம், தந்திரம், சடங்கு முறைகள் போன்றவற்றை நம்ப ஆரம்பித்தனர். இந்த நம்பிக்கைகள் அனைத்து மக்களையும் சென்று அடைந்தன. எனவே நம்பிக்கை என்பது அவர்களின் சமூகப் பண்பாடு மரபினைக் காட்டுகிறது.

சங்கப் பாடல்கள் பழந்தமிழர் நம்பிக்கை பற்றிய நிகழ்வுகளை முன் வைக்கின்றது. தன் மகள் பசலை நோயினால் துன்புறுவதை அறியாத நற்றாய் குறி பார்க்கின்றாள். அதன் விளைவாகத் தெய்வக் குற்றம் உள்ளது என்று அறிகின்றாள். உடனே முருகனுக்கு பல்வேறு சடங்குகளை செய்து ஆடு ஒன்றை வெட்டிப் பலியிடுகின்றாள். இவ்வாறு செய்வதால் தன் மகளுக்கு ஏற்பட்ட நோய் தணியும் என்ற நம்பிக்கையை,

***"அணங்கறி கழங்கின் கோட்டம் காட்டி***
***வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து***
***அன்னை அயரும் முருகு....................."*** [78]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

## கடவுள் நம்பிக்கை

பழந்தமிழ் மக்களிடம் கடவுள் குறித்த நம்பிக்கை பண்பாட்டு மரபாகவும் இருந்துள்ளது. தான் வழிபடும் தெய்வத்திற்கு பூ, தானியங்கள், உணவு போன்றவற்றைப் படைக்கவும், விலங்குகளைப் பலியிடவும் செய்தனர். நீர்த்துறை, மலை உச்சி நடுகல் போன்றவற்றில் கடவுள் குடியிருப்பதாகவும் சூரியன், சந்திரன் போன்ற இயற்கையைச் சார்ந்தவற்றில் தெய்வம் நிலை கொண்டிருப்பதாகவும் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

கானவன் ஒருவன் காட்டு விலங்கு ஒன்றின்மீது தான் குறி வைத்து எய்த அம்பு தவறி விட்டமையால் அது தெய்வக் குற்றத்தால் நிகழ்ந்தது எனக் கருதினான். அதன்பிறகு கானவர்கள் மலையுச்சியில் குடியிருக்கும் தெய்வத்தின் கோபம் தணிய உயிர்ப் பலியிட்டு வழிபட்டனர் என்பதை,

***"கடவு ளோங்குவரை பெண்மார் வேட்டெழுந்து***

***கிளையொடு மகிழுங் குன்ற நாட"[79]***

எனும் அடியால் அறிய முடிகிறது.

குழந்தைப் பேறு வேண்டி வழிபாடுசெய்து குழந்தை பெற்றமையை ஐங்குறுநூறு,

***"குன்றக் குறவன் கடவுட் பேனி***

***இரந்தனன் பெற்ற வெள்வளைக் குறுமகள்"[80]***

என்று கூறுகிறது.

மனிதன் தன்நிலை மாறாதிருக்க சத்தியம் கடைபிடிக்கப்படுகிறது. சொன்ன சொல் மாறாத தன்மைக் கொண்டவர்கள் சான்றோர்கள்,

***"செய்யாக் கூறிக் கிளத்தல்***

***எய் யாதாகின் றெஞ்சிறு செந்நாவே"[81]***

என்ற பாடல் விளக்குகிறது.

***"திருமணி விளக்கின் அலை வாய்ச்***

***செருமுருகு சேனயொடுற்ற சூளே"[82]***

என்ற பாடல் தலைவன் தன்னிலை மாறேன் என்று திருச்செந்தூர் முருகன்மீது சத்தியம் செய்வதாகவும், அந்நிலையிலிருந்து தவறிய அத்தலைவனுக்கு அந்த இறைவனால் ஏதாவது துன்பம் ஏற்படுமோ எனத் தலைவி அஞ்சியதாகவும் உணர்த்துகின்றது.

இச்செயலிலிருந்து அவர்கள் இறைவன்மீது கொண்டுள்ள பற்றினையும், அச்செயல், இறைவன் தவறு செய்பவர்களையும் சத்தியம் மீறுபவர்களையும் தண்டிக்கும் தன்மையை உடையவன் என்ற நம்பிக்கையை உணர்த்துகிறது. ‘சத்தியம்’ என்ற சூளுரைத்தல் பல இலக்கியங்களிலும் செய்தி பாடல்கள் காணப்படுகிறது. மக்கள் வாழ்வியலில் அன்றாட நிகழும் நிகழ்வுகள் நன்மையைச் சார்ந்தும் தீமையைச் சார்ந்தும் அமையும். தோல்வி ஏற்பட்டால் அதற்கான காரணத்தைத் தேடி அதற்கு தகுந்த பலன்களை செய்வது மக்களிடம் இருந்துள்ளன. மேலும் சகுனம் பார்த்தாலும் மக்களிடம் இருந்துள்ளன. காட்டுப்பன்றி ஒன்று உணவு தேடும் பொழுது வேடன் வைத்த பொறியில் மாட்டிக்கொள்ளும் வேளையில் பல்லி ஒன்று சத்தம் போட, இது கேட்டவுடன் சகுனம் என்று எண்ணி காட்டுப் பன்றி தன் இருப்பிடம் திரும்பிவிட்டது. இதனை

***“பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென***
***மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து தன்***
***கல்லளைப் பள்ளி வதியும் ..........”[83]***

என்ற பாடலில் வெளிப்படுகிறது.

தலைவன் ஒருவன் பொருள் ஈட்டச் சென்று தன் இல்லத்திற்கு திரும்புகிறான். தலைவிக்கு குழந்தை பிறந்ததன் அறிகுறியாக அணிகலன்கள் அணிந்த பெண்கள் தன் இல்லத்தில் கூட்டமாகக் கூடியிருப்பதைக் காண்கிறான். இது நல்ல சகுனம் என்ற நம்பிக்கை பிறக்கிறது. இதனை

***“திருத்திழை மகளிர் விரிச்சி நிற்ப”[84]***

என்பதன் மூலம் உணர முடிகிறது.

நம் மனத்தில் நினைத்துக் கொண்டிருக்கும் காரியம், பற்றிய சிந்தனையில் மனம் இருக்கும் பொழுது, பல்லி நன்மை, தீமையை நமக்கு அறிவிக்கும் பண்பாட்டு மரபை மக்கள் நம்பினர். இதனை நற்றிணை,

***“உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி***

***நயவரு குரல பல்லி***

***நள்ளென் யாமத்து உள்தொறும் படுமே”***[85]

என்ற பாடலின் வாயிலாக நிமிர்த்தம் பார்த்தனர் என்பதை அறியமுடிகிறது.

சங்க கால மக்கள் கடவுள் இருக்கும் இடமாக மரத்தை கருதி வழிபட்டனர். இயற்கையை இறைவனின் சக்தி என்றும் நினைத்தனர். மலை, கடல், மரம் இவற்றில் இறைவன் உள்ளதாக நினைத்து அதனை வழிபட்டதாகச் சங்க இலக்கியங்களில் பல பாடல்கள் சுட்டப்படுகின்றன.

தன்னை உண்மையானவன் என்றும் நல்லவன் என்றும் தான் கூறுவது உண்மை என்றும் மெய்ப்பிக்கவும் சூளுரைத்தல் செய்யப்படுகிறது.

***“நீ உறும் பொய்ச் சூல் அணங்கு ஆகின் மற்று இனி***

***பார்மேல் விளியுமோ கூறு”***[86]

என்று தலைவன் பரத்தையர் சேரியினின்று வருவதால் அதனைக் கண்ட தலைவி ஊடல் கொள்கிறாள். மேலும் தலைவன் பொய்ச் சூள் கூறுகிறான். அதைக் கேட்ட தலைவி அவனுடையப் பொய்ச் சூளுரைக்கு அஞ்சுகிறாள். ஏனெனில் கற்புக் காலத்தில் சூளுரைத்தால் தொடர்புடைய அனைவரையும் பாதிக்கும். எனவே தலைவன் சூளுரைக்காமல் இருக்க ஊடல் தீர்த்தலே முறை என்று தலைவி எண்ணுவதாக இடம்பெறும் பகுதி குறிப்பிடத்தக்கது.

***“ஆயின் ஆயிழாய்! அன்னவை யான் ஆங்கு அறியாமை***

***போற்றிய நின் மெய் தொடுகு”***[87]

என்னும் அடிகளில் சூளுரைக்கும்போது எப்போதும் தெய்வத்தை முன்னிறுத்தியே சூளுரை கூறும் வழக்கம் காணப்படுகிறது.

தலையில் அடித்தும், கையில் அடித்தும் சூளுரை செய்வதைச் சங்கஅக இலக்கியத்தில் காண்கிறது.

***"மலையொடு மார்பு அமைந்தசெல்வன் அடியைத்***
***தலையினால் தொட்டு உற்றேன் சூள்"[88]***

எனும் பாடலிலும்,

***"கொண்டனை சென்மோ மகிழ் நின் சூளே"[89]***

என்றும்,

***வரி ஆர் சிறு மனை சிதைஇ வந்து***
***பிரிவுதரக் தொட்ட பணிமொழி நம்பி[90]***

என்னும் பாடலிலும் தலைவனது சூளுரை எண்ணித் தலைவி தோழியிடம் புலம்புவதாகக் கூறப்படுகிறது.

## கனவு குறித்த நம்பிக்கை

கனவுகள் மனித மனத்தின் ஆழ்மன வெளிப்பாடு என்பர் கனவு குறித்த ஆய்வாளர்கள் பகலில் நடக்கும் நிகழ்ச்சி இரவிலே வரும் என்றும், தூங்கச் செல்லுமுன் நாம் நினைக்கும் சம்பவங்களே கனவாகத் தோன்றும் என்பர். குறிப்பாக, பகல் கனவு பலிக்காது என்பதும் விடியற்காலையில் காணும் கனவு பலிக்கும் என்பதும் பொதுவான நம்பிக்கை,

***"நுண்முன் மடந்தையைக் தந்தோய்போல***
***இன்துயில் எடுப்புதி கனவே"[91]***

என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவன் தனது தலைவியைக் கனவிலேகாணுகின்றான். அவளுடைய அழகைப் போற்றுகின்றான். அதற்குள் கனவு கலைந்துபோகிறது. இருப்பினும், கனவில் கண்ட என்னுடைய தலைவியானவள் என் முன்னாள் வருவாள் எனத் தலைவன் மிகுந்த நம்பிக்கை கொள்கிறான். மேலும் பகலிலே செய்த காரியங்கள் தான் இரவிலே கனவாக வரும் (கலி 49), கனவிலே கண்ட சில நிகழ்வுகள் உண்மையாவதும் (கலி 128) பழம்பாடல்களில் காணமுடிகிறது.

## பேய் குறித்த நம்பிக்கை

மனித உயிரானது இறந்த பின்பும் இவ்வுலகில் உலவுகிறது. என்ற நம்பிக்கை காலங்காலமாக நிலவுதை அறியலாம். அதுவும் இரவு நேரத்தில் நள்ளிரவில் இறந்த உடலில் இருந்து வெளியேறிய ஆவிகள் உலவுவதாக நம்புவது மூடநம்பிக்கையே எனலாம். இதனைக் கலித்தொகை,

***"ஏனைப் பிசாசு அருள் என்னை நலிதறின்***
***இவ்ஊர்ப்பலி நீ பெறாஅமல் கொள்வேன்"***[92]

என்னும் அடி பேய் இருப்பதைக் கூறுகிறது.

பேய், பிசாசு பற்றிய நம்பிக்கை மக்களிடத்தில் நெடுங்காலமாகவே இருந்து வருகிறது. இயல்பான இறப்பின்றி இறந்தோர் ஆவி, பிசாசாக சுற்றும் என்பது இயற்கை பிசாசுகளில் ஆண், பெண் பாகுபாடு இருந்துள்ளது. பேய்போல நடுஇரவில் பெருமழை வந்தது எனத் தன் பிள்ளையைக் கூட்டிக்கொண்டு உறங்கிய தாயைக் (குறுந் 161) காணமுடிகிறது. நள்ளிரவில் பேய்கள் நடமாடும் என மக்கள் நம்பியுள்ளனர் (அகம் 311) குறிப்பிடுகிறது.

## சகுனங்கள்

மனிதன் மேற்கொள்ளும் ஒவ்வொரு செயலிலும் சகுனங்களைப் பார்த்தும், நல்ல நாள் பார்த்தும் அந்தச் செயலை மேற்கொள்கிறான். சகுனம் என்பது இக்காலத்தில் வழக்கப்படும் சொல்லாட்சியாகும். இச்சொல்லானது சங்ககாலத்தில் புள், நாள், ஓரை, நிமித்தம் என்ற சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது.

மேற்கண்டவற்றில் 'புள்' என்பது பிறர் தற்செயலாகப் பேசிக்கொள்ளும் வாய்ச்சொல்லாகும் பல்லியின் சத்தமும் 'புள்' என்றே அழைக்கப்பட்டுள்ளது.

*"மறைந்த ஒழுக்கத் தோரையம் நாளும்*

*ஆறந்த ஒழுக்கங் கிழவற்கு இல்லை"*[93]

என்ற அடிகளில் நாள் என்ற சொல் கையாளப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

## பல்லி சகுனங்கள்

நாட்களையும் நல்ல செய்திகளையும் சரியான முறையில் கணித்து சொல்லுகின்ற இடங்களில் பல்லி சொல்லும் பலனுக்கு மக்களிடத்தில் பெரும் வரவேற்பு உள்ளது. பல்லி சொல்லை எதிர்பார்த்து காத்திருக்கும் சில சூழல்களும் சமூகத்தில் பண்பாட்டு மரபோடு இடம்பெறுவதை அன்றாட வாழ்வில் காண இயலும்.

*"பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி*

*நல்ல கூறு என நடுங்கி*

*புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே"*[94]

என்னும் அகநானூற்றுப் பாடலில் தலைவி பிளந்த வாயினையுடைய பல்லி ஒலிக்கும் பொழுதெல்லாம் தெய்வத்தை தொழுது 'நற்சொல் கூறுக' என

அதனை வேண்டி மனம் நடுங்கி ஒளியிழந்த மாலைக் காலத்தே துன்புற்றாள் என்ற செய்தி இடம்பெறுவதை அறியமுடிகிறது.

> *“ ..................... மனைவயின்*
>
> *பல்லியும் பாங்கு ஒத்து இசைந்தன”*[95]

என்னும் கலித்தொகையில், பல்லியானது நிமித்தம் சொல்வதோடு மட்டுமின்றி நல்ல இடத்தில் சொல்ல வேண்டும் என்ற நம்பிக்கையும் மக்களிடத்தில் இருந்துள்ளதை அறியலாம்.

## நற்சொல் கேட்டல்

எந்தவொரு செயலையும் மேற்கொள்ளும் போது அதனை ஊக்கப்படுத்தும் வகையில் சொற்களைக் கேட்பது நன்மை பயக்கும் என்று பழங்கால மக்கள் பண்பாட்டு மரபாக நம்பியுள்ளனர். இதனை ‘விரிச்சி’ என்று குறிப்பிடுகிறார்.

> *“நலம் மிகு கூந்தல் தகை கொளப் புனைய”*[96]

என்னும் ஐங்குறுநூற்று அடியானது, புதர்களின் மேல் பூ நறுமனம் மிக்க மலர்களைப் பறித்துத் தலைவி தன் தலையிலே சூடிக்கொள்கிறாள் அதைக் கண்ட தலைவன் ‘நலம் மிகு கூந்தல்’ என நற்சொல்லைக் கூறித் தலைவி-யினுடைய அன்பைப் பெறுகிறாள் என்பதை நற்றிணையில்,

> *“என் கைக் கொண்டு தன் கண் ஒற்றியும்*
>
> *தன் கைக்கொண்டு என் நல்லுதல் நீவியும்*
>
> *அன்னை போல இனிய கூறியும்”*[97]

என்ற அடியில் தலைவியை அன்னை போன்று என்று நற்சொல் கூறினான்.

## தொழில்கள்

மனிதன் தனக்கு வேண்டிய உணவை எப்பொழுது அவனே சென்று தேடிப்பறித்து உண்ண ஆரம்பித்தானோ அன்றே தொழில் என்பது தொடக்கம் பெற்றுவிட்டது எனலாம். மனிதன் விலங்குகள் போல் சுற்றித்திரிந்த பிறகு ஓரிடத்தில் நிலையான வாழ்வை வாழ ஆரம்பித்த பிறகுத் தனக்குத் தெரிந்த தொழிலை மேற்கொண்டிருக்க வேண்டும். இதுவே பிற்காலத்தில் பெருந்தொழிலாக மாற்றம் பெற்றிருக்க வேண்டும்.

உணவு உண்ட மனிதன் வேட்டையாடுவதற்கும், தன்னை மேம்படுத்திக் கொள்வதற்கும் சில கருவிகளை அதாவது இரும்பு, செம்பு, தங்கம் போன்றவற்றில் இருந்து தனது தேவைக்கேற்ப உருவாக்கிக் கொண்டான். அறிவாளியாக வேலை செய்தவன் பல இடங்களுக்கு முதலாளியானான். சோம்பேறியாய் சுற்றித் திரிந்தவன் அடிமைகளானான் இப்படியாகக் கொல்லை, காடு, தோட்டம், வயல், நஞ்சை, புஞ்சை, தோப்பு, பாத்தி எல்லாம் தனக்கு சொந்தமாக்கிய மனிதன் கிராமம், பேரூர், நகரம் எனச் சொந்தமாக்கிக் கொண்டான். வேலைசெய்த மக்கள் ஊர் மக்களாய், நகர மக்களாய் வளர்ச்சிபெறத் தொடங்கினர். பின்னர் தனிமனிதன் மன்னன் ஆனான். தகுதிக்கு ஏற்றவாறும் தொழில்களுக்கு ஏற்றவாறும் தன்னை மேம்படுத்தி மக்களைத் தனித்தனியாகப் பிரித்து இருக்க வேண்டும்.

இதனால் பல தொழில்கள் அக்காலத்தில் தோன்றின. அவரவர்க்கென்று தனித்தனிக் குழுக்கள் இருந்திருக்க வேண்டும். ஒவ்வொரு குழுக்களுக்கும் ஒரு தலைவன் என்ற ஒருத்தன் இருந்திருப்பான். இப்படித் தொழில்ரீதியாகப் பிரிந்த மக்கள் பின்னாளில் சாதி என்ற பெயரில் பிரிந்தனர் என்பதையும் இலக்கியங்கள் கூறுகின்றது.

சங்ககாலப் பொதுமக்களின் மேம்பட்ட திறத்தை அவர்களது சமுதாய வாழ்க்கை முறையை வைத்துக்கொண்டுதான் ஆராய வேண்டும். ஒரு சமுதாயம் மேம்பட்ட வாழ்க்கை வாழ்ந்திருக்கிறதா இல்லையா என்பதை அந்தச் சமுதாயத்தில் மக்கள் மேற்கொண்டிருந்த தொழிலை வைத்துத்தான் ஆய்வாளர்கள் மதிப்பிடுகிறார்கள்.

தமிழ்ச் சமுதாயத்தின் தொன்மையான நாகரிகததின் முக்கியமான அடையாளங்களில் ஒன்று அச்சமுதாய மக்கள் மேற்கொண்டிருக்கும் தொழில்கள்தான். சங்ககாலச் சமுதாயத்தில் மக்கள் மேற்கொண்ட முக்கியத் தொழில்களில் நெசவுத் தொழிலும் ஒன்றாகும். இந்நெசவுத் தொழில் குறித்துக் கலைக்களஞ்சியம்,

***“இது வீட்டுத் தொழில்களில் முக்கியமானது பண்டைத் தொழில்களுள் ஒன்று விவசாயத்துக்கு அடுத்தது மக்கள் நாகரிகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதல் கைத்தொழில்”[98]***

என்று குறிப்பிடுகிறது. இவ்வாறு பாராட்டப்படுகிற நெசவுத்தொழிலைத் தமிழ்நாட்டில் வாழ்ந்த நெசவாளச் சமூகத்தினர் எப்படிச் செய்திருக்கிறார்கள் என்பதற்குச் சங்க இலக்கியச் சான்றுகளைக் கொண்டு அறியமுடிகிறது.

“ஹைரடோடஸ் எனும் யவன ஆசிரியர் நம் நாட்டுப் பஞ்சினைப் பற்றி, மரங்களில் வளரும் பஞ்சு என்றும், அந்தப் பஞ்சு ஆட்டு உரோமங்களால் உண்டாக்கப்படும் கம்பளியைக் காட்டிலும் மேலானது என்றும் அவர் தமிழகத்தில் நெய்யப்படும் ஆடைகளின் மூலப் பொருட்களுக்குச் சான்றிதழ் தருவதாக மு. இராகவையங்கார் தனது ஆராய்ச்சித் தொகுதியில் குறிப்பிடுகிறார்.”[99]

எனவே நெசவுத்தொழில் என்பது இந்த நாட்டு மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்த ஒன்றாக இருந்திருக்கிறது என்பதும் தமிழகத்து சமூகப்

பண்பாட்டு மரபு மேன்மைக்கு இத்தொழில் சாட்சியாக இருக்கிறது என்பதும் நோக்கத்தக்கதாகும்.

பண்டைக் காலங்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நிலங்களில் உள்ள தொழில்கள், பண்ட மாற்று என அந்தந்த நிலத்திற்கு ஏற்றவாறு தொழில்களைப் பிரித்துக் காணலாம். பழந்தமிழ் இலக்கியங்களைத் தொகுத்த ஆசிரியர்கள் எவ்வாறு திணைக்கு ஏற்றவாறு தொழிலைப் பிரித்தனர் என்பது ஆய்விற்குரியதாகும். ஒரு சில இடங்களில் திணை மயக்கம் ஏற்பட்டாலும் அது பெரியதாகப்படவில்லை.

“குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலத்தும் முறையே வேட்டையாடுதல், ஆடுமாடு மேய்த்தல், உழவு செய்தல், மீன் பிடித்தல் போன்ற தொழில்களைச் செய்தோர் முறையே குறவர், ஆயர், உழவர், மீனவர் என நான்கு பிரிவுகளாக அமைந்தனர். துணைத் தொழில் புரிந்தோர் தச்சர், குயவர், கம்மியர், கொல்லர், வண்ணார் எனப்பட்டனர்”[100] என பா. இறையரசன் கூறுவ-திலிருந்து அந்தந்த நிலத்திற்கு தொழிலானது வேறுப்பட்டதையும் மேலும் தொழில்கள்வழி அவர்களின் சமூகப் பண்பாட்டு மரபினை அறிய முடிகிறது.

## குறிஞ்சிநிலம்

மலையும் மலைசார்ந்த பகுதியும் குறிஞ்சி நிலமாகக் குறிக்கப்படுகிறது. இதனைத் தொல்காப்பியர்,

***“ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை***
***ஆனா வகைய திணைநிலைப் பெயரே”[101]***

என்று குறிப்பிடுகிறார். ஒவ்வொரு திணைக்கும் அவரவர் நிலத்திற்கு ஏற்ப பெயர்கள் வேறுபட்டு நிற்கும். குறிஞ்சி நிலத்தில் குறவன், குறத்தி என்று

தலைமக்களுடையப் பெயர் குறிப்பிடும் என்று தொல்காப்பியர் கூறுகிறார். இவர்களுடைய தொழில் தினை விதைத்து அவற்றைக் காவல் காப்பது, பரண் அமைத்து, காவல் காப்பது, தேன் எடுத்தல், மலை நெல், மூங்கில் நெல் போன்றவை விளைவித்தலும், அறுவடை செய்தலும், விற்றலும், உண்ணுதலும் இத்திணையில் தொழிலாக நடைபெற்றது. கலித்தொகையில் நடு இரவு நேரத்தில் மின்னல் உண்டாக்கிய ஒளியின் வெளிச்சத்தில் ஆண் யானையும், பெண் யானையும் தினை உண்ணுவதற்கு வரும் என்பதனை,

***"பிடியொரு மேயும் புன்செய் யானை***
***அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்"***[102]

என்று குறிப்பிடுகிறார்.

## வேட்டையாடுதல்

குறவர்கள் வேட்டையாடுதலை தொழிலாகக் கொண்டிருந்தனர். காவலுக்குப் போன இடத்தில் தன்னைக் காத்துக் கொள்வதற்காக ஆரம்பத்தில் வேட்டையாடிய மனிதன், பிறகு உணவுக்காகப் பொழுதுபோக்கிற்காகவும் வேட்டையாடினான் என்பது பற்றி அகநானூற்றிலே,

***"காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறாஅது"***[103]

என்று குறிப்பிடுகிறது.

## முல்லைநிலம்

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும். தலைவனுக்காகத் தலைவியும், தலைவிக்காகத் தலைவனும் காத்திருத்தலை உரிப்பொருளாகக் கொண்டது. ஆநிரை மேய்த்தல், ஆநிரைமூலம் பெறப்படும் பால், தயிர், வெண்ணெய், நெய் போன்றவற்றை விற்றல் ஆகியன அந்நிலத்தவரின் தொழில்களாகும் என்பதைத் தொல்காப்பியத்தில்,

***“ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்***

***ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே”[104]***

எனவும் குறிப்பிடும்.

## ஆநிரை மேய்த்தல்

ஆடு மாடுகளை மேய்த்தல் என்பது முல்லை நிலத்தவரின் முக்கியத் தொழிலாகும். வைணவர்களின் கடவுளான கண்ணன் மாடுகளை மேய்த்ததாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. இடையர்கள் ஆடு, மாடுகளை மேய்த்து அதிலிருந்து கிடைக்கும் பொருள்களையே வருமானமாகக் கொண்டனர் இதனைக் குறுந்தொகையில்,

***“பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய***

***பாலொடு வந்த கூழொடு பெயரும்”[105]***

என்னும் பாடல்மூலம் உணர்த்துகிறது.

## மருதநிலம்

வயலும் வயல் சார்ந்த பகுதியையும் உடையது மருதநிலமாகும். இங்கு உழவுத் தொழில் என்பது முதன்மையான தொழிலாகும். வாழ்க்கையின் ஆதாரமாய் உழவுத்தொழில் இருந்து வருகின்றது. உழவுத் தொழிலும் அதைச் சார்ந்த பிறத் தொழில்களும் இவர்களுக்கு வாழ்வாதாரங்களாகும். உழவுத் தொழில் பற்றி வள்ளுவர் தனி ஒரு அதிகாரம் படைத்துள்ளார். இதனை,

***“சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்***

***உழந்தும் உழவே தலை”[106]***

என்று, இவ்வுலகமானது சுழன்றுசுழன்று பல தொழில்களைச் செய்து வந்தாலும், உழவுத் தொழிலே அனைத்துத் தொழிலுக்கும் முதன்மையான தொழிலாகும் என்கிறார்

விளைந்த பயிரை அறுவடை செய்வதிலும், கதிர்களை அடித்து நெல்லைப் பெறுவதிலும் பழந்தமிழர் கைத்தேர்ந்தவர்களாக இருந்துள்ளனர். மருத நில உழவர்கள் ஐங்குறுநூற்றில் இதனை,

***"தண்நறு நெய்தல் தளை அவிழ் வான்பூ***

***வெண் நெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்"[107]***

எனவும் நெல் அறுவடைக்கு பின்பு அவற்றைக் கதிர்களில் இருந்தும் குப்பைகள் முதலியவற்றிலிருந்தும் தனியாகப் பிரித்து எடுக்கும் முறையினை உழவர்கள் செய்கிறார்கள். இதனை,

***"கள்ஆர் களமர் பகடுதலை மாற்றி,***

***கடுங்காற்று ஏறிய போகிய துரும்புஉடன்"[108]***

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

## நெய்தல்நிலம்

கடலும் கடல்சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகும். கடல்மேல் சென்றிருக்கும் ஆடவர்கள் உயிருடன் திரும்ப வர வேண்டும் என்பதற்காக வீட்டில் உள்ள விளக்கில் மீன் எண்ணெய்யை ஊற்றி அணையாமல் பாதுகாத்தும், அவர்களுக்காக இரங்கியும் காத்திருக்கும் மகளிரது செயல்களை நெய்தல் நிலத்தில் காணமுடிகிறது மீன் பிடித்தலும் அவற்றை விற்றலும், உப்பு விளைவித்து விற்றலும் இவர்களின் அன்றாடத் தொழிலாகும். இவர்களை நுளையர், நுளைச்சியர், பரதவர், மீனவர் என்றும் அழைத்தனர்.

## மீன் பிடித்தல்

கடலில் மீன்பிடிக்கச் செல்லும் பரதவர்கள் கடலின் சூழ்நிலையை முதலில் அறிந்துகொள்வார்கள். அதற்குப் பிறகுதான் கடலுக்கு மீன்பிடிக்கச் செல்வார்கள். இது பற்றிய குறிப்பு நற்றிணையில்,

***“கானல் அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்***

***நீல் நிறப் புன்னைக் கொழு நிழல் அசைஇ***

***தண் பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி”[109]***

என்னும் அடிகளில் காணப்படுகிறது. மேலும் நெய்தல் நிலத்தில் மீன்பிடித்து மீனை விற்றல் என்பது தினம்தினம் நடக்கக் கூடிய தொழிலாக இருந்துள்ளது. இதனை அகநானூற்றில்

***“இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி***

***பாடுபல அமைத்து கொள்ளை சாற்றி”[110]***

என்னும் அடிகளில், கடற்கரையிலே, பரதவர் பல மீன்களைக் கொண்டு வந்து இறக்குவார்கள் அதனைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியுடையவராய் இளையவரும், முதியவரும் தம் சுற்றத்தாருடன் சேர்ந்து கரையிடத்தே வந்த மீன்களை வலையில் இருந்து பிரிப்பதும், பின்பு தம்மிடம் உள்ள மீன்களை வகைவகையாகப் பிரித்து கூறு கட்டி வைத்து, மீன் வேண்டும் என கேட்போரிடம் விலை கூறி விற்கும் மீனவர்கள் கரையில் மிகுந்த மணலிடத்தே களைப்புக் குறைய தூங்குவார்கள் எனச் சுட்டுகின்றது.

## பாலைநிலம்

மணலும் மணல் சார்ந்த இடமாக அமைந்திருப்பது பாலை நிலமாகும். காண்போரை அச்சுறுத்தக் கூடியதாகவும், கொற்றவையைத் தலைமைத் தெய்வமாகவும் கொண்டு இந்நிலம் விளங்குகிறது. இங்கு தண்ணீர் கிடைப்பது அரிது. மக்கள் தங்களின் வாழ்வாதாரத்திற்காகப் பிற நிலங்களுக்குச் சென்று பொருளீட்ட வேண்டிய சூழ்நிலை இருந்துள்ளது. அது மட்டுமல்லாமல் இச்சுரத்தின்வழிச் செல்வோரை அச்சுறுத்தியும், துன்பப்படுத்தியும் கொன்றும் அவர்கள் கொண்டுவரும் பொருட்களைக் கவர்ந்தனர். இத்தகு ஆறலைத்தல்

தொழிலானது தலைமுறை தலைமுறையாக கற்பிக்கப்பட்டுத் தங்களின் வழித்தோன்றல்களினால் கடைபிடிக்கப்பட்டன.

## பழக்கவழக்கம்

'பழக்கம்' என்ற சொல் பழகுதல் அல்லது பயிற்சி பெறுதல் என்கிற இரண்டு பொருளில் வழங்கப்படுகிறது. வேறுவகையில் சொன்னால் பழக்கம் என்ற சொல் ஒரு வகைக் கல்வியாகும்.

தனி மனிதன் செய்யக்கூடியச் செயலைப் 'பழக்கம்' என்னும் சமூகத்தினுடைய செயலை 'வழக்கம்' என்றும் குறிப்பிடுவது பொருத்தமாக அமையும். சமூகத்தினுடைய வழக்கமே நாளடைவில் வளர்ச்சிபெற்று 'பண்பாடு' என்று வழங்கப்படுகிறது. இதையே இலக்குமிரதன் பாரதி 'நமது சமூகம்' என்ற நூலில்,

"பழக்கவழக்கம் பண்பாடுகளின் பொதுமையினுள் சமுதாயம் இயங்குகிறது"[111] என்று குறிப்பிடுகிறார்.

தமிழ் இலக்கியத்தில் 'பழக்கம்' என்ற சொல் 'பழகுதல்' என்ற பொருளில் குறிப்பிடுகிறார். 'வழக்கம்' பழக்கத்தின் தொடர்ந்த நிலை வழக்கம் எனப்படுகிறது. அடிக்கடி பழக்கமாகிவிட்ட செயல்களைச் சமூகத்தில் வழக்கம் என்கிறோம்.

"தனிமனிதன் ஒருவன் பழக்கத்தால் திரும்பத் திரும்ப செய்து வரும் ஒரு செயலை பல மனிதர்கள் ஒன்றாகக் கூடி செய்கின்றபொழுது அது வழக்கம் என குறிப்பிடப்படுகிறது"[112] என்கிறார் த. திருநாவுக்கரசு.

மரபு என்பது வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படுவதாகும். இதனை,

***“எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்***
***செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே”[113]***

என்ற நன்னூல் சூத்திரத்தால் அறியலாம்.

## பழக்கவழக்கங்கள்

ஒவ்வொரு தனி மனிதனும் சமுதாயத்தில் ஒரு அங்கத்தினர் ஆவான். சமுதாயம் என்ற அமைப்பும் தனிமனிதனும் கூடிப் பழக்கவழக்கங்களை உருவாக்குகின்றனர். இவை ஒரு சமுதாயத்தின் தேவை, குறிக்கோள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தோற்றம் பெறுகின்றன. இவ்வாறு தோன்றிய பழக்கங்கள் அன்றாடம் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படும்போது காலப்போக்கில் வழக்கங்களாக மாறுகின்றன.

## பழக்கம்-வழக்கம்-மரபு

வழக்கம் என்பது தனிமனிதனிடம் இயல்பாக அமைந்துள்ள நடத்தையைக் குறிப்பதாகும். ஒருவர் பால் மட்டும்தான் அருந்துவார். தேநீர் போன்றவற்றை அருந்துவதில்லை. இதனை அவருடைய பழக்கம் என்று கூறலாம். பழக்கம் வாழ்க்கைக்குத் தேவையானதாகக் கருதப்படுகிறது. அவரவர் விரும்பிய மன நிறைவும் கிடைக்கிறது. எனவே பழக்கம் என்பது தனி மனிதனைச் சார்ந்தது மற்றும் சமுதாயத்தால் பின்பற்றப்படுவது. மரபு என்பது முன்னோர் வழக்காற்றை மாற்றாமல் அப்படியே கடைப்பிடிப்பது இம் மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புடையவை. இவை எளிதில் மாற்ற முடியாதவை எனலாம்.

நம் முன்னோர்களிடம் தோன்றிய மரபும் பல்வேறு வகையான பழக்கவழக்க முறைகளும் காலத்துக்கு ஏற்ப சில மாறுதல்கள் அடைந்துள்ளன. தி.சு. இளவழகனார் பழக்கம் மற்றும் வாழ்க்கைமுறையை வேறுபடுத்திக் காட்டும் போக்கு ஆராயத்தக்கது என்கிறார்.

***"செயற்கைப் பயிற்சியைப் 'பழக்கம்' மென்றும்***
***இயற்கை நிகழ்ச்சியை 'வழக்கம்' மென்றும்***
***முன்னோர் வழங்கி வந்துள்ளனர்"*** [114]

என்று கூறுவதன் மூலம் இயற்கைத் தன்மைக்கும் செயற்கைத் தன்மைக்கும் உள்ள கருத்துப் புலப்பாட்டைத் தெளிவுபடுத்துகின்றது. தொல்காப்பியர் நாடக வழக்கு, உலகியல் வழக்கு எனக் குறிப்பிடுவது படைப்பில் பின்பற்றப்படும் வழக்கம், மக்கள் வாழ்வியலில் பின்பற்றப்படும் வழக்கம் எனப் பிரித்துப் பார்க்க வசதியாக இருக்கின்றது. முன்னது புனைவு பற்றியது, பின்னது மனித வாழ்வியல் பற்றியது. இதனை,

***நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்***
***பாடல் சான்ற புலனெறி வழக்கம்*** [115]

என்று குறிப்பிடுகிறது. இவ்வழக்கம் காலத்தால் மாறுதலும் உண்டு. சில வழக்கம் வழிவழியாக மரபு குன்றாது பாதுகாக்கப்பட்டு மக்களால் பின்பற்றப்பட்டு சமூகப் பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

## பொதுவான பழக்கவழக்கங்கள்

பழங்காலத்தில் பெண்களைப் போல ஆண்களும் குடுமி வளர்க்கும் பண்பாட்டு மரபோடு இருந்தார்கள். அவர்கள் தங்கள் வீட்டுச் சிறுவர்களுக்கு குடுமி வளர்ந்திருப்பதை ஐங்குறுநூறு பாடல் எடுத்துக் கூறுகிறது.

***“நம்மூர்ப்***

***பார்ப்பனக் குறுமகன் போலத் தாமும்***

***குடுமித்த லையமன்ற***

***நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே”[116]***

என்று குறிப்பிடுகிறது.

## பெண்கள் மது அருந்துதல்

சங்ககாலத்தில் நடனமாடும் பெண்களுக்கு மது அருந்தும் பழக்கம் இருந்ததைப் பரிபாடல் கூறுகிறது. செல்வர் வீட்டுப்பெண்கள் நீராடிப் பின் மது அருந்தி மகிழ்ந்தனர் என்பதை,

***“சுரும்பு ஆர்க்கும் சூர்நறா ஏந்தினாள் கண்நெய்தல்***

***பேர்மகிழ் செய்யும் பெருநறர்ப் பேணியவே***

***கூர் நறா ஆர்ந்தவள் கண்”[117]***

என்ற பாடலால் அறியமுடிகிறது.

## தாலி அணிதல்

பெண்கள் மங்கலமாக அணிகின்ற பொன்னாலான தாலியில் புலிப்பல்லைச் சேர்த்து கட்டும் பழக்கம் பண்பாடு மரபாக இருந்து வந்துள்ளது என்பதை,

***“பொன்னோடு***

***புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி”[118]***

என்ற பாடலால் காணமுடிகிறது என்கிறார் ந.சி. கந்தையா.

## தை மாத நோன்பு

தை மாதங்களில் பெண்கள் தாம் விரும்பும் ஆடவனைக் கணவனாக பெறுவதற்காக அதிகாலையில் குளிர்ந்த நீர் நிறைந்த குளங்களில் நீராடி நோன்பு நோற்பது சங்க காலப் பெண்களின் வழக்கமாக இருந்தது என்பதை,

> ***"தைஇத் திங்கள் கண்கயம் படியும்***
> ***பெருந்தோள் குறிமகள்"***[119]

என்ற நற்றிணைப் பாடல்வழி அறியமுடிகிறது.

## கழல் அணிதல்

தலைவனுடைய கால்களில் பகைவரை வென்றதற்கு அடையாளமாக இடக்காலில் ஒரு கழலினையும் வலக்காலில் குடிக்குரிய கழலினையும் அணிந்துவரும் மரபினையும் காணமுடிகிறது. மகளிர்க்குத் திருமணம் ஆவதற்கு முன்பு சிலம்பினை நீக்கும் பழக்கமானது பண்பாட்டு மரபாக இருந்துள்ளது. உடன்போக்கு சென்ற தலைவியின் காலில் சிலம்பு இருந்தால் அவளுக்கு இன்னும் திருமணம் ஆகவில்லை என்பதை,

> ***"வில்லோன் காலனகழலே, தொடியோன்***
> ***மெல்லடி மேலவும் சிலம்பே"***[120]

என்ற குறுந்தொகை பாடல்மூலம் அறியமுடிகின்றது.

## வழக்கங்கள்

## நிமித்தம் பார்க்கும் வழக்கம்

வீட்டை விட்டு வெளியே செல்லும் போது நிமித்தம் பார்க்கும் வழக்கம் பண்டைய தமிழர்களிடம் பண்பாட்டு மரபாக உள்ளது. எனவே பாலைநில வழியே

செல்லும் மக்கள் தம் பயணத்தை மேற்கொள்வதற்கு முன்பு நிமித்தம் பார்ப்பர். இதனை,

***"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து***
***ஆறுசெல் மாக்கள் புள்கொளப் பொருத்தும்"[121]***

என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது. அதாவது ஓணானைக் கண்டு மக்கள் நன்நிமித்தம், தீ நிமித்தம் பார்த்தமையை இதனால் அறியமுடிகின்றது.

## பூவை மலரச் செய்யும் வழக்கம்

மக்கள் மலர் அரும்பு பறித்து, அதை இரவுப்பொழுதில் பனை ஓலையால் செய்யப்பெற்ற கூடையில் போட்டு மூடி வைக்கும் வழக்கத்தினை மரபாக கொண்டனர். அது விடியற்காலையில் மலர்ந்து மணம் பரப்பும், இவ்வழக்கத்தினை,

***"இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து***
***பெரும்பெயல் விடியல் விரித்து விட்டன்ன"[122]***

என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது.

## சூரியனை வழிபடும் வழக்கம்

சூரிய வழிபாடு என்பது பண்டையத் தமிழர்களிடம் அன்று முதல் இன்று வரை சூரியனை வழிபடும் வழக்கம் பண்பாட்டு மரபாகவும் உள்ளது. பாலைநில மக்கள் சூரியனை வழிபடும் வழக்கமுடையவராய் இருந்தனர். இதனை,

***"கணைக்கதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ"[123]***

என்பதால் அறியமுடிகிறது.

## நெய்விளக்கு ஏற்றும் வழக்கம்

பாலைநில மக்கள் மாலை நேரங்களில் தம் இல்லத்தில் நெய்விளக்கினை ஏற்றி வைக்கும் வழக்கத்தினை பண்பாட்டு மரபாக கொண்டிருந்தனர். இதனை,

***"...................... நெய் பெய்து மாட்டிய***

***சுடர்துய ரெடுப்பும் புன்கண் மாலை"[124]***

என்று குறிப்பிடுகிறது. இதேபோன்று கார்த்திகை மாதத்தில் முழுநிலவு தோன்றும் இரவில் வரிசைவரிசையாக விளக்குகளை எடுத்துச்செல்லும் வழக்கமுறையை,

***"அறுமீன் கெழீஇய அறம்செய் திங்கட்***

***செல்சுடர் நெடுங்கொடி .............."[125]***

என்று நற்றிணை குறிப்பிடுகிறது.

## திலகம் இடும் வழக்கம்

பெண்கள் தம் பிறை போன்ற நெற்றியில் திலகம் இடும் வழக்கம் பற்றியும் தளிரை அரைத்துக் குளிர்ச்சியின் பொருட்டு மார்பில் பூசிக்கொள்ளும் வழக்கம் பற்றியும் நற்றிணை (நற்.62) பாடல் குறிப்பிடுகிறது.

## தாழியில் இட்டுப் புதைக்கும் வழக்கம்

பொதுவாக பழங்காலத்தில் இறந்தவர்களின் உடலைத் தாழியில் இட்டுப் புதைக்கும் வழக்கம் பண்பாட்டு மரபோடு இருந்தது. இதனை,

***"மாயிருந் தாழி கவிப்பத்***

***தாவின்று கழிகஎற் கொள்ளாக் கூற்றே"[126]***

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது.

## தொகுப்புரை

பண்டைய தமிழரின் வாழ்வியலை அறிவதற்குச் சங்க நூல்கள் பெரிதும் துணை செய்கின்றன. புலவர் அக்காலச் சமுதாய நிகழ்வுகளை தம் பாடல்வழி பதிவுசெய்ததின்மூலம் அன்றைய சமூக, அரசியல், பொருளாதார நிலைகளை நன்கு அறியமுடிகிறது. சமூகப் புலவர்கள் நமது பாரம்பரியத்தின் பெருமைகளையும், மொழியின் வளத்தையும், மக்களின் நாகரிகம், பண்பாட்டு மரபு, பழக்கவழக்கம் போன்றவற்றை நமக்கு எடுத்துக் கூறுகின்றனர். உணவு நுணுக்கம் பற்றியும், உணவு வகைகள், ஐவகை மக்களின் உணவு முறைகளை பற்றியும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆடை வகைகள் போன்றவற்றை சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. சங்க காலத்தில் பெண்களும், ஆண்களும் அணிகலன்களை அணிந்தனர். காதணி, வளையல்கள், சிறுவர் அணிகலன் போன்ற தரவுகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. குடியிருப்பு பகுதிகள் பற்றியும், அவற்றின் வகைளான குடிசை, மாடங்கள், மாளிகைகள் போன்றவைபற்றி எடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஆண்கள், பெண்கள் விளையாடிய விளையாட்டுக்கள் அவற்றின் வகைகளான புனலாட்டம், அலவன் ஓட்டுதல், ஊஞ்சல் ஆடுதல் போன்றவை விளக்கப்பட்டுள்ளன. அக்காலத்தில் மக்கள் கொண்ட நம்பிக்கைகள் போன்றவை எடுத்துக் கூறப்பட்டுள்ளன. மேலும் மக்கள் செய்த தொழில்கள், பழக்கவழக்கங்கள் இவற்றின் வழியாக சமூகப் பண்பாட்டு மரபுகளும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

## குறிப்புகள்

1. தொல். அகத்., நூ.30.
2. குறுந்தொகை, பா.167:2-6.
3. நற்றிணை, பா.67:4.
4. பட்டினப்பாலை., பா.43-45.
5. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, மணிமிடைப்பவளம், பா.121:12.
6. நற்றிணை, பா.168:1-3.
7. மேலது., பா.267:4.
8. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, நித்திலக்கோவை, பா.393:5-16.
9. ஐங்குறுநூறு, பா.285:3.
10. மேலது., பா.351:1-2.
11. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, மணிமிடைப்பவளம், பா.216:1-4.
12. பெரும்பாணாற்றுப்படை, அடி.99-100.
13. நற்றிணை, பா.83:0-5.
14. குறுந்தொகை, பா:293.
15. மேலது., பா.214
16. மேலது., பா.159.
17. மேலது., பா.331.
18. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, களிற்றுயானைநிரை, பா.21:22.
19. ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு, பா.340:1:2.
20. கலித்தொகை, பா.102:5-6.
21. ஐங்குறுநூறு, பா.147:2-3.
22. ரா.பி சேதுப்பிள்ளை, தமிழகம் அலையும் கலையும், பக்.169-170.

23. ந. சுப்ரமணியன், சங்க கால வாழ்வியல், ப.405.

24. அ. காமாட்சி குமாரசாமி, இலக்கிய இன்பம், ப.9.

25. ரா.பி சேதுப்பிள்ளை, தமிழகம் அலையும் கலையும், ப.171.

26. குறுந்தொகை, பா.159:5-6.

27. மேலது., பா.11:1.

28. ஐங்குறுநூறு, பா.194:1.

29. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, களிற்றுயானைநிரை, பா.27:9.

30. கலித்தொகை, பா.80:3-5.

31. ந. சுப்ரமணியன், சங்க கால வாழ்வியல், ப.406.

32. குறுந்தொகை, பா.23:2.

33. மேலது., பா.229:1-2.

34. பா. இறையரசன், தமிழர் நாகரிக வரலாறு, ப.268.

35. குறுந்தொகை, பா.245:3.

36. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, மணிமிடைப்பவளம், பா.203:9.

37. மேலது., பா.253:3.

38. மேலது., பா.254:3.

39. கலித்தொகை, பா.85:2.

40. குறுந்தொகை, பா.21:2-3.

41. மேலது., பா.7:1-2.

42. மேலது., பா.364:5.

43. நற்றிணை, பா.207:1-2.

44. ஐங்குறுநூறு, பா.252:1.

45. குறுந்தொகை, பா.145:1.

46. அகநானூறு, பா.250:11.

47. மேலது., பா.200:2.

48. பொ.வே. சோமசுந்தரனார், அகநானூறு, மணிமிடைப்பவளம், பா.195:3-4.

49. மேலது., பா.329:4.

50. நற்றிணை, பா.143:2.

51. அ. காமாட்சி குமாரசாமி, இலக்கிய இன்பம், ப.10.

52. ஞா. தேவநேயப்பாவாணர், பழந்தமிழாட்சி, பக்.11-12.

53. குறுந்தொகை, பா.223:1.

54. ஐங்குறுநூறு, பா.252:1-2.

55. குறுந்தொகை, பா.394:4.

56. அகநானூறு, பா.162:9.

57. சு. சதாசிவம், பழந்தமிழர் வாழ்வும் வரலாறும், ப.85.

58. நற்றிணை, பா.140:7

59. மேலது., பா.305:1.

60. மேலது., பா.12:5-6.

61. மேலது., பா.24:3.

62. மேலது., பா.179:2.

63. மேலது., பா.324:7.

64. மேலது., பா.308:6-7.

65. மேலது., பா.162:10

66. கலித்தொகை, பா.101:16-17.

67. நற்றிணை, பா.324:6.

68. ஐங்குறுநூறு, பா.377.4.

69. நற்றிணை, பா.307:3.

70. குறுந்தொகை, பா.316:5-6.

71. ஐங்குறுநூறு, பா.124:2-3.

72. கே.கே பிள்ளை, தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், ப.100.

73. குறுந்தொகை, பா.401:3-4.

74. அகநானூறு, பா.368:4-5.

75. கலித்தொகை, பா.80:6-8.

76. நற்றிணை, பா.3:4-5.

77. கலித்தொகை, பா.83:3-4.

78. நற்றிணை, பா.47:8-10.

79. மேலது., பா.165:4-5.

80. ஐங்குறுநூறு, பா.256:1-2.

81. புறநானூறு, பா.148:6-7.

82. அகநானூறு, பா.266:20-21.

83. நற்றிணை, பா.98:5-7.

84. மேலது., பா.40:4.

85. மேலது., பா.333:10-12.

86. கலித்தொகை, பா.88:20-21.

87. மேலது., பா.95:23-24.

88. மேலது., பா.108:56-57.

89. குறுந்தொகை, பா.238:5.

90. நற்றிணை, பா.378:9-10.

91. குறுந்தொகை, பா.147:3-4.

92. கலித்தொகை, பா.65:17-18.

93. தொல். பொருள்., நூ.45.

94. அகநானூறு, பா.289:15-17.

95. கலித்தொகை, பா.11:20-21.

96. ஐங்குறுநூறு, பா.463:2.

97. நற்றிணை, பா.28:1-3.

98. கலைக்களஞ்சியம், தொகுதி 4, ப.215.

99. மு. ராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.152.

100. பா. இறையரசன், தமிழர் நாகரிக வரலாறு, ப.192.

101. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம்,பொருளதிகாரம், அகத்திணையில், நூ.24.

102. கலித்தொகை, பா.41:7-8.

103. அகநானூறு, பா.58:3.

104. இளம்பூரணர் (உ.ஆ), தொல்காப்பியம்,பொருளதிகாரம்,அகத்திணையில், நூ.23.

105. பொ.வே. சோமசுந்தரனார் (உ.ஆ), குறுந்தொகை, பா.221:2-3.

106. மு. வரதாராசன் (உ.ஆ) திருக்குறள். 104:1.

107. மு. கோவிந்தசாமி, தமிழக வரலாறு, ப.49.

108. ஐங்குறுநூறு, பா.19:20.

109. நற்றிணை, பா.264:4-6

110. அகநானூறு, பா.62.

111. இலக்குமிரதன் பாரதி, நமது சமூகம், ப.71.

112. க.த. திருநாவுக்கரசு, வள்ளுவன் கண்ட மனிதன், ப.60.

113. நன்னூல், சொல்., நூ.388.

114. தி.சு இளவழகனார், தமிழர் வாழ்வியல், ப.108.

115. தொல்., பொருள், நூ.56.

116. ஐங்குறுநூறு, பா.202.

117. பரிபாடல், பா.7.

118. ந.சி. கந்தையன், தமிழகம், ப.215.

119. நற்றிணை, பா.80.

120. குறுந்தொகை, பா.7.

121. மேலது., பா.140:1-2.

122. மேலது., பா.168:2-3.

123. கலித்தொகை, பா.16:12.

124. குறுந்தொகை, பா.398:4-5.

125. நற்றிணை, பா.202:9-10.

126. மேலது., பா.271:9-10.

Vol. 6 No. 4

புரட்டாசி-மார்கழி 2049
October - December 2018

ISSN : 2321-0737



பல்கலைக் கழக மானியக் குழு அங்கீகாரம் பெற்றத் தமிழ்ப் பன்னாட்டு ஆய்விதழ்

UGC APPROVED INTERNATIONAL THAMIZH JOURNAL

UGC Journal No.40719

# செம்மொழித் தமிழ்

(பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ்)
(கலை & மனிதவியல்)

# Journal of Classical Thamizh

(A Quarterly International Multilateral Thamizh Journal)
(Arts & Humanities)



*Published by*

**RAJA PUBLICATIONS**

**No. 10 (Upstair), Ibrahim Nagar, Khajamalai,**
**Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India.**
**Mobile : 9600535241**
**Website : www.rajapublications.com**

18 பகுதி-2 Part -2

Re Print

# சங்க அக இலக்கியங்களில் காணலாகும் உணவுப் பண்பாட்டு மரபுகள்

**மா. சத்யா**
பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி (தன்), தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.

**முனைவர் இரா. திராவிடராணி**
இணைப் பேராசிரியர், தமிழ்த்துறைத்தலைவர்
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி (தன்), தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.

### முன்னுரை

சங்க கால அக இலக்கியங்கள் பண்பாட்டு மரபினை அறிந்து கொள்ள உதவும் இலக்கியச் சான்றுகளாகத் திகழ்கின்றன இப்பண்பாடுகளுள் சிறப்பானது, உலக மக்கள் அனைவரிடம் வழக்கமாக தலைமுறை தலைமுறையாகக் கணப்படுவது உணவுப் பண்பாட்டு மரபு ஆகும். மக்களின் உடலை, உயிரை, உணர்வை வளர்க்கும் உணவின் வாயிலாக வெளிப்படும் மக்களின் பண்பாடு, உணவுப் பண்பாடு எனப்படுகிறது. பண்டைத் தமிழர்கள் உணவைச் சுவையாகச் சமைத்து உண்ணுதலையும் கற்று வைத்திருந்தார்கள். இவற்றைப் பற்றி சங்க அக இலக்கியங்களில் காணலாகும் உணவுப் பண்பாட்டினை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

### உணவுப் பண்பாட்டு மரபு விளக்கம்:

இடம் விட்டு இடம் சென்று வேட்டையாடியும், உணவு சேகரித்தும் வாழ்ந்த காலத்தில் மக்கள் உணவைக் கிடைத்த இடத்திலேயே உண்டு தீர்த்தனர். நேருக்கு நேரானவரிடமும் பரிமாறிக் கொண்டனர். இவை வழி வழியாக வந்த பண்பாட்டு மரபாகக் கருதப்படுகிறது.

உணவு என்ற சொல் சங்க அக இலக்கியங்களில் பல்வேறு இடங்கலில் பயின்று வருகின்றது. உணவு என்பது பொதுவாக உண்ணக்கூடிய பொருள்களைக் குறிக்கும். உணா, உண்டி, உண்டிகை, அடிசில், அயனி, அவிழ், கூழ், சொன்றி, நிமிரல், புழுக்கல், புன்கம், பொம்மல், மிதவை, மூரல் என்ற சொற்கள் உணவைக் குறிப்பதற்காகவே பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஓரறிவுயிராகிய நுண்ணுயிர் முதல் ஆறறிவு படைத்த மனிதன் வரை எல்லா உயிர்க்கும் உணவு தேவைப்படுகிறது. ஓய்வில்லாத உடலுக்கு சக்தி தேவையான ஒன்றாக உள்ளது மனிதனுக்கு சக்தியைத் தருவது உணவேயாகும். இவை காலப்போக்கில் பண்பாடாகவே கருதப்படுகிறது. இவ்வுணவு பல்வேறு வழிமுறைகளில் தயார் செய்யப்பெற்று உணவாக உட்கொள்ளப்பட்டுள்ளன .

### பலவகை உணவுகள்:

உணவுப் பொருள்களைப் பொதுவாக திட உணவுகள், திரவ உணவுகள் என்று இருவகையில் பிரிக்கலாம். திட உணவுகளை தாவர உணவுகள், புலால் உணவுகள் என்ற வகையில் அடக்கலாம்.

தானியங்கள், பயறுகள், பருப்புகள், காய்கனிகள், கொட்டைகள், எண்ணெய் வித்துக்கள், கீரைவகைகள் முதலியவை திட உணவு வகையில் அடங்கும். மேலும் இவை சைவ உணவாகவும் உள்ளது அசைவ உணவாகிய புலால் உணவுகளும் இவ்வகையில் அடங்கலாம்.

திரவ உணவாகிய பால், தயிர், நெய் போன்றவை திரவ உணவுகளில் அடங்கும்.

திட மற்றும் திரவ உணவு வகைகளை உண்டு மகிழ்ந்துள்ள செய்திகளைச் சங்க அக

இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன. இவை உணவுப் பண்பாட்டு மரபைத் தெரிவிப்பவனவாக உள்ளன.

உணவு என்பது ஈட்டல், சமைத்தல், பகிர்ந்துண்ணல் என்ற மூன்று நிலைகளில் ஒரு சமூகத்தின் பண்பாட்டுச் செயல்பாடாக விளங்குகிறது. உணவு என்பது பொருள்சார் பண்பாட்டின் ஒரு கூறு எனலாம். இது பொருள் என்பதோடு உடலியல் தேவைகளான உடல்நலம், ஆற்றல், உயிர் தரும் பொருள் ஆகியவற்றையும் சார்ந்தது ஆகும். இதற்குச் சமூகப் பொருண்மைகள் உண்டு சமூகச் செயல்பாடுகளும் உண்டு. எனவே உணவு என்பது பண்பாட்டில் ஒரு முக்கியத்துவம் வாய்ந்தவைகளாகவே செயல்படுகிறது.

உயிர்வாழ இன்றியமையாத பொருள் உணவு ஆகும். அனைத்து உயிரினங்களும் உயிர் வாழ இன்றியமையான பொருள் உணவு ஆகும். அனைத்து உயிரினங்களும் உயிர் வாழ உணவையே சார்ந்திருக்கின்றன. ஆகவே அவற்றின் இயக்கமும், செயல்பாடுகளும் உணவு முறைகளையே அடிப்படைகளாகக் கொண்டுள்ளன. இத்தகு உனவு முறைகள் உயிர்களின் பண்பாட்டு மரபினை வளர்ப்பதற்குப் பேரளவில் துணை நிற்கின்றன எனலாம்.

**சமையல் தொழில்நுட்பம்:**

சங்க கால தமிழ்மக்கள் கையாண்ட சமையல் முறைகளையும், சமையல் தொழில் நுட்பத்தினையும் சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகிறது. பண்டைய சமையல் முறைகளின் முக்கியமானவையாகக் கருதப்படுவது சுடுதல், அவித்தல், வேகவைத்தல், புழுக்குதல் என்பன போன்ற முறைகளாகும். இம்முறைகளில் சமையல் முறையை மேற்கொண்டுள்ளனர்.

**சுடுதல்**

நாகரிகம் வளராத அக்காலத்தில் உணவினை நெருப்பிலிட்டு (சுட்டு) வாட்டி உண்ணுதல் பெருவழக்காக இருந்துள்ளது.

**அவித்தல், வேகவைத்தல், புழுக்குதல்**

நீராவியால் உணவை அவித்தல் அல்லது புழுக்குதல் அல்லது வேகவைத்து உண்ணுவதை அரிய சமையல் கலையாக மேற்கொண்டனர். இம்முறையினைப் பெரும்பாலும் உழவர்களும் மருதநில மக்களும் மேற்கொண்டிருந்தனர். கடின வேலையில் ஈடுபட்டிருந்த மருதநில மக்களுக்கு தேவையான சக்தியை கொடுத்து உணவைப் பக்குவப்படுத்த உதவியது.

**சமையல் திறன்**

உணவுக்குத் தேவையான அளவு வெப்பத்தைச் செலுத்தி பக்குவப்படுத்தும் முறைதான் இன்றைய சமையல் முறையாக உள்ளது.

புற உலகில் செயலாற்றித் திரும்பும் தலைமகனுக்கு அறுசுவை உணவை வழங்கி மகிழ்விப்பது மனைவியின் தலையாய கடமைகளுள் ஒன்றாகும். இதனைச் சங்ககால மகளிர் தலையாய சிறப்பாகவே உணர்ந்திருந்தனர். தலைவி கெட்டித் தயிரைப் பிசைந்து அதனுடன் புளியும் சேர்த்து உணவு சமைக்கிறாள், அவ்வுணவு மணமாக இருப்பதற்கு தாளிக்கவும் செய்கிறாள். அவ்வுணவு மேலும் சுவையோடும் மணமுடனும் மணம் பரப்புகிறது. அதனைத் தலைமகன் உண்டு, அச்சமையல் முறையையும் உணவையும் வாயாறப் பாராட்டுகிறான் இதனை,

> **"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்,**
> **கழுவுறு கலிங்கம், கழாஅது உடீஇ,**
> **குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்**
> **தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்**
> **'இனிது' எனக் கணவன் உண்டலின்**
> **நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல்**
> **முகனே"** (குறுந்தொகை, பா.167)

என்ற அக இலக்கியங்களான குறுந்தொகைப் பாடல் சமையல் கலைக்குத் தனிச் சான்றாகவே விளங்குகிறது. இப்பாடலில் தலைவன், தலைவியையும், அவள் மேற்கொண்ட சமையல்

முறையினையும் உணவுப் பண்பாட்டு மரபையும் மகிழ்ந்து பாராட்டுவதைக் காணமுடிகிறது.

**தாவர உணவு சமைத்தல்:**

மருத நிலத்தில் வாழ்ந்த இல்லங்களில் பார்பன மகளிர் இராசன்னம் என்னும் நெல்லரிசிச் சோற்றை சமைத்து, அதற்குத் துணை உணவாகவும் இணை உணவாகவும் மாதுளங்காய்களைச் சிறு துண்டுகளாக்கி அரிந்து அதில் மிளகுத்தூளைத் தூவி, கருவேப்பிலையிட்டு வெண்ணெயில் வேகவைத்துப் பொரியல் செய்ததை இலக்கியங்களில் காணமுடிகிறது.

காய்கறிகள் உணவில் இன்றியமையாத இடம் வகிக்கின்றன. இன்றைய மருத்துவர்கள் கூட உணவில் அதிக காய்கறிகளைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்கிறார்கள். அவர்கள் அவ்வாறு கூறுவதற்குக் காரணம் காய்கறிகளில் நீர்ச்சத்து, உயிர்ச்சத்து, இரும்புச்சத்து போன்ற சத்துக்கள் அடங்கியுள்ளதே அதனுடைய இரகசியமாகும். இச்சத்துக்களை அறியாமலேயே சத்தான உணவுகளை உட்கொண்டு உயிர் வாழ்ந்துள்ள செய்திகளை சங்க அகப் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

சைவ உணவுகளில் நெல் சோற்றோடு காய்கறிகளின் குழம்பு ஊற்றி கீரை மற்றும் கிழங்கு வகைகளைச் சேர்த்து இலையில் இட்டு உண்பது இன்றும் நம்மிடையே வழக்கத்தில் உள்ளது. இவ்வடிக்கும் பழங்காலத்தில் இருந்ததைப் பின்வரும் அகநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கிறது.

**"கனவக்கதிர் வரகின் பாடல் ஒன்றில்"**
**(அகநானூறு, பா 393)**

என்னும் பாடலடிகளில், நீண்டு வளர்ந்த காதுகளுடைய இடையர் குலப் பெண்கள், கொல்லையில் உள்ள வரகினை எடுத்து வந்து, அதனைத் திரிகையில் இட்டு அரிசியாக்கினர். இந்த வரகரிசியை முறத்தால் புடைத்துத் தண்ணீர் ஊற்றி ஊற வைத்து, மண்ணால் செய்த பானையில் அருவியில் இருந்து விழும் சுனை நீரை ஊற்றி, பின்பு சோறாக்கி தாம் உண்டதுடன் வழிப் போவர்க்கும் கொடுத்துள்ளதைக் காட்டுகின்றது எனவே சங்க காலத்திலேயே உணவினை நெருப்பு மூட்டிச் சமைக்கும் வழக்கம் இருந்துள்ளதை அறியலாம்.

**நெல் உணவு:**

நெல்லைக் குற்றிச் சோறாக்கி உண்பது என்பது சங்க காலத்தில் அரிதாகவே காணப்படுகிறது. செல்வந்தர்கள் மட்டும் நெல் உணவை உண்டுள்ளனர். சாதாரண குடிமக்கள் தினை மற்றும் கூழ் உணவையே உண்டனர். வயலில் இருந்து கொண்டு வரப்பட்ட நெல் முதலிய கூலங்கள் களத்திலே குவித்து வைக்கப்பட்டிருந்த செய்தியினை ஐங்குறுநூறு.

**"ஐவனச் சிறுகிளி கடியும் நாட"**
**(ஐங்குறுநூறு, பா.285)**

என்று எடுத்துரைக்கிறது. இதன்வழிப் பழங்காலத்தில் ஐவன நெல் உணவிற்காகப் பயிரிடப்பட்டதை இப்பண்பாட்டின் வழி அறியமுடிகிறது. மேலும் மூங்கிலின் நெல் உணவிற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை நற்றிணைப் பாடல்கள் (7, 26, 60) காட்டுகின்றன.

**கீரை உணவு சமைத்தல்**

சங்க காலத்தில் வள்ளல்களும், புலவர்களும், கொடையாளிகளும் நிறைந்திருந்தாலும் உண்ணுவதற்கு உணவின்றி பட்டினியால் வாடிய பலர் இருந்துள்ளனர். அவ்வாறான மக்கள் கீரைகளைப் பறித்து வந்து அதனை வேக வைத்து உண்டும் தங்கள் பசி வேதனையைத் தணித்துக் கொண்டனர். நீண்ட நெடுநாள் பசியில் உழன்ற குடும்பத்தை, உயிர் வாடி வைத்த அரு மருந்தாக கீரையை எண்ணி உண்டனர்.

**பழ உணவுகள்:**

மனித சமூகம் நாகரிகம் அடைவதற்கு முன்பாக நாடோடி வாழ்க்கையைக் வாழ்ந்துக் கொண்டிருந்த காலகட்டத்தில் பழ உணவுகள் மட்டுமே மனிதனின் உணவுத் தேவையைப்

பெரிதும் நிறைவு செய்தன. மா, பலா, வாழை என்பவை முக்கனிகளாகச் சுட்டப்படுவதன் மூலம் மனிதன் பழ உணவிற்கு அளித்த முக்கியத்துவத்தை உணரலாம். இவை பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் அதிகம் காணப்படுகின்றன. ஐங்குறுநூற்றில்,

**"அத்தப் பலவின் வெயில் தின்சிறு காய்,**
**அருஞ் சுரம் செல்வோர், அருந்தினர் கழியும்"**
**(ஐங்குறுநூறு, பா-351)**

என்ற அடிகள், வறட்சி மிகுந்த பாலை நிலத்தில் செல்லக் கூடியவர்கள் பசியைப் போக்க பலாப்பழத்தை உணவாகக் கொண்டதைக் காட்டும் பண்பாட்டு மரபாக உள்ளன.

**அசைவ உணவுகள்:**

வயிற்றுப் பசிக்காக உண்ணுகின்ற மனிதன் முதலில் பழங்களையும், பின்னர் கிழங்கு மற்றும் தானிய வகைகளையும் உண்டிருக்க வேண்டும். நெருப்பைக் கண்டறிந்த பின்னர் கிழங்குகளை நெருப்பில் போட்டு வேக வைத்து அதன் சுவையை அறிந்திருக்க வேண்டும். காட்டில் மூங்கில்கள் ஒன்றோடு ஒன்று உரசித் தீப்பற்றி எரிந்தபோது, அங்கு வாழும் விலங்குகள் சில நெருப்பில் சிக்கி இறந்தன. அவற்றைப் பார்த்த மனிதன் கிழங்கு என்றெண்ணி இறைச்சியை உண்டிருக்கலாம். கிழங்கு இல்லை இறைச்சி தான் என்று அறிந்த பழங்கால மனிதன் அதன் சுவையின் காரணமாக அதனை விரும்பித் தின்றிருக்க வேண்டும். இவ்வாறு படிப்படியாக மனிதன் சைவ உணவில் இருந்து அசைவ உணவுக்கு வந்திருக்கலாம். சைவ உணவை விட அசைவ உணவில் சக்தியும், வலிமையும் அதிகம் இருப்பதாக இன்றளவும் மக்களிடையே ஒருவித மனபோக்கு காணப்படுவதையும் அறியலாம்.

ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்கள் புலால் உணவையே அதாவது மாமிச உணவையே பெரும்பாலும் உட்கொண்டனர். அவர்கள் உண்டதோடு மட்டுமல்லாமல் வந்துள்ள விருந்தினர்க்கும் அவ்வகையான உணவை வழங்கி வந்துள்ள செய்தியையும் பழந்தமிழ் இலக்கிய வழி அறியலாகிறது. உழவன் ஒருவன் விடியற்காலையில் எழுந்து வரால் மீனைப் பிடித்துத் துண்டு துண்டாக வெட்டி மணக்கும் குழம்பு வைப்பதையும், அந்தக் குழம்புக்கு ஏற்றபடி அரிசியால் செய்த சோற்றினைச் சேர்த்து உண்டு மகிழ்ந்ததையும்,

**"கருங்கண் வராஅல் பெருந்தடி மளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்**
**சோறு" (நற்றினை, பா 60)**

என்ற அடிகள் உரைக்கின்றன. இரவில் மீனை உண்ணுதல் (நற்-127) பரதவர்கள் விடியற்காலையிலே உப்பங்கழியில் சென்று மீனைத் தேடிப் பிடித்தல் (நற்-372) போன்ற செய்திகள் மீன் உணவை உண்ணும் பண்பாட்டு மரபினைப் பெற்றிருந்ததை அறியலாம். இவை மட்டுமல்லாது புலால் உணவில் பன்றி இறைச்சி, பசுவை உண்ணல், ஆட்டிறைச்சி, மானிறைச்சி, இவைப் போன்றவையும் புலால் உணவில் அடங்கும்.

**திரவ உணவுகள்:**

திரவ உணவாகிய பால், தயிர், நெய் போன்றவை திரவ உணவுகளில் அடங்கும். பசுவில் இருந்து பெறப்பட்ட பாலுணவு பெரிதும் உண்ணப்பட்டது. குழந்தை முதல் பெரியவர்கள் வரை இவ்வுணவை உண்டு வந்தனர். நெய்தல் நிலத்தில் இடையர்கள் பாலைப் பீய்ச்சிக் கடைத் தெருக்களில் சென்று விற்று வந்தவர்களாம் என்ற செய்தி அக இலக்கியங்களில் காணப்படுகிறது. மேலும் பாலில் இருந்து தயிர், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றை எடுத்துப் பல்வேறு வகைகளில் பயன்படுத்தப்படுகிறது. இவை பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கிறது எனலாம்.

**தாய்ப்பால்:**

தாய்ப்பாலே குழந்தையின் முதல் உணவாகும். தாய்ப்பாலில் நோய் எதிர்ப்பு சக்தி

உள்ளது. தாய்ப்பால் கொடுக்கும் பொழுது தாய்க்கும் குழந்தைக்கும் நெருங்கிய பிணைப்பு ஏற்படுகிறது. சங்ககால மகளிர் தம் குழந்தைக்களுக்கு தம் பாலை புகட்டினர். அதனைப் புகட்டுவதைத் தங்கள் கடமையாகவும், பண்பாட்டு மரபாகவும் கொண்டனர்.

### நீருணவு

உணவினை உற்பத்தி செய்யக் காரணமாக இருப்பதுடன் தானே உணவாகவும் அமைவது நீர் என்பார் வள்ளுவர். மேலும்

> "நீர் இன்று அமையா உலகம் போலத்"
> (நற்றிணை, பா-1 )

என்கிறார் கபிலர். இவ்வுலகம் முக்கால் பங்கு தண்ணீரால் சூழப்பட்டுள்ளது. மனிதனின் தாகத்தைத் தீர்க்கும் தண்ணீரே முதல் உணவு. நாம் சமைக்கும் ஒவ்வொரு சமையலுக்கும் அடிப்படை இந்த நீரே. அப்படிப்பட்ட நீருணவு மனிதர்களுக்கு இன்றியமையாதது ஆகும்.

### கள் உணவு

சங்க காலத்தில் மக்கள் கள் குடித்தல் தவறாகக் கருதப்படவில்லை. விருந்தோம்பல் நிகழ்ச்சிகளில் கள் உணவு முதலிடம் வகிக்கிறது. மனிதன் நல் துன்பக் காலங்களில் அருந்தவும், தன்னிலை மறந்து இருக்கவும் கள் என்ற மதுபானத்தைப் பயன்படுத்தினான் எனலாம். இந்தக் கள்ளானது பனைமரம், தென்னைமரங்களில் இருந்து இறக்கப்பட்டு வழங்கப்படுகிறது. இவற்றைப் பருகும் உணவாகவும் பயன்படுத்தினர். இவை சங்க அக இலக்கியங்களில் உணவுப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கின்றது எனலாம்.

### முடிவுரை

அன்று மனிதன் இயற்கையில் கிடைத்த உணவினை பச்சையாகவும் அதனைப் பக்குவப்படுத்தியும் உண்டான். முக்கியமாகக் கீரைகள், காய்கறிகள், பழங்கள் போன்ற உணவுகள் மனிதனின் உடலை ஆரோக்கியத்தோடு வைத்திருந்தது. சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் அவரவர் வசதிக்கு ஏற்பவும் தகுதிக்கு ஏற்பவும் உணவுகளை உட்கொண்டனர். பிறரிடத்துச் சென்று உணவை இழிந்து கேட்கின்ற நிலை சங்கச் சமுதாயத்தில் காணப்படவில்லை. பல்வேறு சமையல் பொருள்களையும் சமையல் முறைகளையும் கையாண்டு சமைத்து உள்ளனர். கண்டதைத் தின்னாமல் உடலுக்கும், உயிர்க்கும் நலம்பயப்பது எதுவோ அதனையே கண்டு உண்டுள்ளனர். இதன் வழி உணவுப் பண்பாட்டு மரபினை அறியமுடிகிறது.

### பார்வை நூல்கள்


1) தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்- கே.கே.பிள்ளை
2) குறுந்தொகை - முனைவர் வி.நாகராசன்.
3) அகநானூறு - நித்திலக் கோவை பொ.வே.சோமசுந்தரனார்.
4) தமிழர் நாகரிக வரலாறு இறையரசன்.
5) ஐங்குறு நூறு - முனைவர் வி.நாகராசன்
6) நற்றிணை - முனைவர் வி.நாகராசன்
7) சங்க கால வாழ்வியல் - ந.சுப்ரமணியன்.


௸

தொகுதி-6 எண் 4
Vol. 6 No. 4



புரட்டாசி-மார்கழி 2049
October - December 2018

ISSN : 2321 - 984X

பல்கலைக் கழக மானியக் குழு அங்கீகாரம் பெற்றத் தமிழ்ப் பன்னாட்டு ஆய்விதழ்

UGC APPROVED INTERNATIONAL THAMIZH JOURNAL

UGC Journal No.40720

# நவீனத் தமிழாய்வு

(பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ்)
(கலை & மனிதவியல்)

*Journal of*

# Modern Thamizh Research

*(A Quarterly International Multilateral Thamizh Journal)*
*(Arts & Humanities)*



*Published by*

**RAJA PUBLICATIONS**

10, (Upstair), Ibrahim Nagar, Khajamalai,
Tiruchirappalli - 620 023, Thamizh Nadu, India.
Mobile : +91-9600535241
website : rajapublications.com

18 பகுதி-2
Part -2

மறு அச்சு

# அகநானூற்றில் காணலாகும் சமூகப் பண்பாட்டு மரபுகள்

**மா. சத்யா**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை,
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி (தன்), தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.

**முனைவர் இரா. திராவிடராணி**
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறைத்தலைவர்
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி (தன்), தஞ்சாவூர், தமிழ்நாடு, இந்தியா.

## முன்னுரை

தமிழர்களின் பண்பாட்டு மரபினைப் பறைசாற்றும் விதமாகவும் அகநானூற்றுப் பாடல்கள் உள்ளது. அகநானூறு என்பது சங்க அக இலக்கியங்களில் ஒன்றாகவும் கருதப்படுகிறது. இவற்றுள் திருமணம், மகளிரின் நிலை, பண்புகள், இல்லறம், கல்வி, இசையில் மகளிர், உணவு, ஆடை, அணிகலன், விருந்தோம்பல், நட்பு, தொழில், உழவு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், இவை அனைத்தும் அகநானூற்று பாடல் வழியாக சமூகப் பண்பாட்டு மரபினை எடுத்துக் கூறுவனவாகவும் உள்ளது. இவற்றைப் பற்றி இக்கட்டுரையில் காணலாம்.

## சமூகப் பண்பாட்டு மரபு

"பல்வேறு மதங்கள், மொழிகள், இனங்களைச் சேர்ந்த மக்கள் தங்களுக்குள் வேற்றுமை கொள்ளாது சேர்ந்து வாழும் போது ஒவ்வொரு மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான சமூக உறவு முறைத் தொடர்புகளைத்தான் "சமூகம்" என்பர். பண்பாட்டு மரபு என்பது சமூகத்தோடு ஒன்றிப் பிணைந்து வழிவழியாக அக்கால மக்களின் வாழ்க்கை வரலாற்றினை புலப்படுத்துகிறது.

## திருமணம்

திருமணம் என்ற சொல்லை நாம் திரு + மணம் எனப் பிரிக்கலாம். மணம் என்பதே தமிழரின் பழைய மரபுதான் இரு மனங்கள் சேர்வது திருமணம் ஆகும். இத்திருமணம் காதல் திருமணம் என்றும் பெற்றோர்களால் நிச்சயித்த திருமணம் எனவும் இலக்கியங்கள் குறிக்கின்றன. திருமணம் பற்றிய செய்தியை அகநானூறு,

**"வதுவை நன் மணம்" (அகம்,பா.136)**

என்று குறிப்பிடுகிறது. இத்திருமணம் அனைத்து சமூக மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு அச்சமூக மக்களின் பண்பாட்டு மரபினைக் குறிக்கிறது.

## மகளிர் நிலை

சங்க காலத்தில் மகளிர் சிறப்பு பெற்று திகழ்ந்தனர். பெண்கள் கல்வி கற்கும் உரிமையும், கவி பாடும் திறமையும் பெற்றிருந்தனர். இல்லறத்தின் தலைமைப் பொறுப்பு பெண்களிடம் இருந்தது. பெண்ணை " இல்லாள்" என்று அழைத்தனர்.

## பண்புகள்

பழந்தமிழ்ப் பண்பாட்டின் முதன்மையாய் அமைந்தவை சங்க காலப் பெண்களின் பண்புகள். ஆடவரும், மகளிரும் இணைந்து மேற்கொள்கின்ற இல்லற வாழ்வே முழுமையான வாழ்வு என்றும் முதன்மையான வாழ்வு என்றும் கூறப்படுகிறது. ஒரு நாட்டின் பண்பாட்டின் உயர்வு, தாழ்வு நிலைக்குக் காரணமாய் இருப்பதே பெண்களின் பண்புகள் என்பர்.

**"அச்சமும் நாணும் மடனும்முந் துறத்த**
**நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"**
**(தொல்.நூ.8)**

என்று அச்சம், நாணம், மடம் முதலிய பண்புகள் பெண்களுக்கு உரிய பண்புகளாகப் போற்றப்பட்டன.

### இல்லறம்

ஆணும், பெண்ணும் இணைந்து வாழும் வாழ்க்கை இல்லற வாழ்வு என்றும் தமிழர் குறித்தனர். இல்லறத்தை இன்பமாக வழிநடத்திச் செல்லக் கூடியவள், பெண்ணானவள் அக்குடும்பத்தின் குலவிளக்காகத் திகழ்பவள். அவளிடம் காணப்படும் சிறந்த குணங்கள் வாழ்க்கையின் உயர்வுக்கு காரணமாய் அமைகின்றன.

பெண் தன் குணங்களை வெளிப்படுத்தி குடும்பத்தை நடத்துகிறாள் என்பது மட்டுமல்ல, தன்னோடு இணைந்து இல்லறத்தை நடத்துகின்ற கணவனை வாழ்வின் உயர்விற்கு அழைத்துச் செல்கிறாள் அவனிடம் காணப்படும் உயர்ந்த நற்குணங்களை இவள் வெளிப்படுத்தி போற்றுகிறாள் என்பதை.

"குடிநன்கு உடையன்னூ கூடுநர்ப் பிரிபலன்
கொடுநா மொழியலன்னூ அன்பினன்"
(அகம்,பா.352)

என்ற அடிகளில் என்னுடைய கணவன் நற்குடியைச் சார்ந்தவன் என்னை விட்டுப் பிரிவதை விரும்பாதவன் கொடிய மொழிகளைக் கூறாதவன், எப்போதும் இனிய மொழிகளைப் பேசும் நீங்காத அன்புடையவன் என்று மனைவி போற்றுவதாகவும் இவை சமூகப் பண்பாட்டு மரபினைக் குறிப்பிடுவதாகவும் அமைகிறது.

### கல்வி

சங்க கால மகளிர் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழில் தேர்ந்து திகழ்ந்தனர். இல்லறப் பணி என்று கருதாமல் பாடற் கலையிலும், இசைக் கலையிலும் சிறந்து விளங்கினர். சங்க கால பெண்பாற் புலவர்களும் பாடல்களை இயற்றியுள்ளனர். இந்நிலை பெண்கள் கல்வியின் மீது கொண்டிருந்த ஆர்வத்தைப் புலப்படுத்துகிறது எனலாம். எடுத்துக்காட்டாக, அகநானூற்றில் பெண்பாற் புலவர்களும் பாடல்களை இயற்றியுள்ளனர்.

பெண்பாற் புலவர்கள் பாடியுள்ள அகநானூற்றுப் பாடல்கள் ஆடவரின் பாடலுக்கு இணையாகவும், சிறப்புடனும் காணப்படுகிறது கவிதைக் கூறுகளான சொல் நயம், பொருள் நயம், இயற்கை வருணனை, உவமை சித்தரிப்பு போன்றவற்றை உள்ளடக்கிய பெட்டகமாகத் திகழ்ந்துள்ளனர். ஆகவே இதன் வழி பெண்களும் கல்வியில் சிறந்து சமூகத்தில் சிறப்புடன் விளங்கிய பண்பாட்டு மரபினைக் காட்டுகிறது.

### இசையில் மகளிர்

சங்க கால மகளிர் கல்வி, வீரம், இல்லறம் போன்ற பணிகளில் மட்டுமல்ல இசையிலும் சிறந்து விளங்கினர். மென்மை நன்மை உடைய பெண்களின் குரல் இனிமை நிறைந்த குரலாக ஒலிக்கும் தாலாட்டு என்ற ஒரு இசையை தன்னுள் கொண்டவர்கள் பெண்கள் ஆவார்கள்.

### உணவு

சங்க கால மக்கள் தங்கள் வாழும் நிலத்திற்கேற்ப உணவு முறைகளை அமைத்துக் கொண்டிருந்தனர். சோறு, கஞ்சி, கூழ், பால், மோர் முதலியவை அவர்களுக்கு முக்கியமான உணவாக இருந்தன மா, பலா, வாழை போன்ற கனிகளையும் கறி, மீன், இறைச்சி போன்ற புலால் உணவு வகையினையும் உணவாகக் கொண்ட மக்கள், பதநீர், இளநீர், கரும்புச்சாறு போன்றவற்றோடு கள்ளினையும் உணவாகக் கொண்டிருந்தனர். தேன், தினைமாவு, கிழங்கு போன்றவையும் உணவாக விளங்கின இதனை,

"உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை" (அகம்,பா.86)

என்றும்,

"தேம் கலந்து அளைகிய தீம்பால்"
(அகம்.பா.207)

என்றும், அக்கால மக்கள் உணவு முறைகளில் பருகுவனவற்றை அகநானூறு பதிவு செய்கிறது. இவை அம்மக்களின் சமூகப் பண்பாட்டு மரபினைத் தெரிவிக்கிறது.

### ஆடை

ஆடையில்லா மனிதன் அரை மனிதன் என்னும் தமிழ்ப் பழமொழி ஆடையின் சிறப்பை உணர்த்துகிறது. நாகரிகமும், பண்பாட்டு மரபும் மனித சமூகத்தின் அடிப்படை சொத்துக்களாக வளர்ந்தபோது ஆடைகளும் ஆடை தொடர்பான பண்பாட்டு உணர்வுகளும் வளர்ச்சி பெற்றது.

### அணிகலன்

தமிழர்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்தனர் இயற்கையில் கலந்துள்ள அழகுணர்ச்சியைக் கண்டு மகிழ்ந்தனர். சங்க காலத்தில் பலவகையான மலர்களையும், செடி, கொடிகளையும் காதுகளில் செருகியும், கழுத்தில் அணிந்து கொண்டும், தம்மை அலங்கரித்துக் கொண்டனர்.

### விருந்தோம்பல்

சமூகப் பண்பாட்டு மரபில் விருந்தோம்பல் என்பது முக்கியமான இடத்தைப் பெற்று இருக்கிறது எனலாம். பண்டைய சமுதாய மக்களிடம் விருந்தினர்களை வரவேற்று உபசரிக்கும் பழக்கம் இருந்தது. விருந்தோம்பல் என்னும் பண்பு இல்லற வாழ்வில் முக்கிய இடம் பெற்று இருந்தது. தமிழர் தம் வாழ்க்கையோடு இணைந்த பண்பாட்டு மரபையும், நாகரிகத்தையும் எடுத்து கூறுவதாக விருந்தோம்பல் இருந்தது.

### நட்பு

மனித பண்பாட்டுடன் கலந்தது நட்பு. இந்நட்பு மனித நேயம் தோன்றுவதற்கும் காரணமாக அமைகிறது தனி மனிதனை இச்சமுதாயத்துடன் இணைப்பது நட்பாகும். மனிதனின் வாழ்வியலில் ஒன்றான நட்பு சமுதாயத்தின் உயர்வுக்கும், ஒற்றுமைக்கும் பாலமாகவும் பண்பாட்டு மரபினை கூறுவதாகவும் அமைந்துள்ளது. மனித பண்பாட்டு வளர்ச்சியில் "நட்பு" இன்றியமையாதக் கூறாக அமைந்துள்ளது. நட்பு பற்றி அகநானூற்றில்,

> "நன்றல் காலையும் நட்பிற் கோடார்
> சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியின்
> (அகம்,பா.133)

என்று குறிப்பிடுகிறது. தலைவனைப் பிரிந்து வருந்திய தலைவி, நட்பில் மாறுபடாத தன்மை கொண்டவர்கள் தன் நண்பனுக்குத் துன்பம் வரும் காலத்தும் அவரைப் பின்பற்றிச் செல்லுவர். அதுபோல தலைவன் சென்ற வழி யானும் செல்ல வேண்டும் என தோழியிடம் வருந்தி கூறுகிறாள். சங்க காலத் தமிழர்களிடம் நட்பு பெற்றிருந்த இடத்தையும், உண்மையான நட்பின் தன்மையினையும் இப்பாடல்

> உடுக்கை இழந்தவன் கைப்போல ஆங்கன்
> இடுக்கண் களைவதாம் நட்பு" (குறள்-796)

என்று நட்பினால் உண்டாகாகக் கூடிய பயனைக் கருதாது நட்பு கொள்ள வேண்டும். நட்பினால் ஏற்படும் பலனை எதிர்பார்த்து நட்பு கொள்ளுதல் சிறந்த நட்பாகாது என்று திருக்குறளில் குறிப்பிடுகிறார். எனவே நட்பு என்பது தமிழர்களின் பண்பாட்டு மரபினைக் குறிக்கிறது எனலாம்.

### தொழில்

ஒரு நாட்டின் உயர்வுக்குக் காரணமாய் அமைவது அந்நாட்டின் தொழில் வளம் எனலாம். தொழில் வளம் அந்நாட்டின் புகழினை மட்டும் வெளிப்படுத்தவில்லை. ஒரு நாட்டின் பண்பாட்டினையும் வெளிப்படுத்தும். சங்க கால மக்கள் தன்னுடைய நிலத்தில் விளைந்த பொருட்களை மற்ற நிலத்து மக்களிடம் கொடுத்து தனக்கு வேண்டியப் பொருளைப் பெற்று இச்சமூகத்தில் பண்பாட்டு மரபினை வளர்த்து வந்தனர். இவற்றை பண்டமாற்று முறை எனப்பட்டது. இதனை,

> "வடவர் தந்த வான்கேழ் வட்டம்"
> (அகம்,பா.340)

என்ற அகநானூற்று அடிகளின் மூலம், வடநாட்டவர்கள் சந்தனம் அரைக்கக் கூடிய வெண்ணிறமான வட்டக் கல்லினைத் தமிழகத்திற்கு தந்தனர் என்பது தமிழகத்திற்கும், வடநாட்டவருக்கும் வாணிகத் தொடர்பு முன்பே நிலைபெற்றிருந்தது என்பதையும் நாம் அறிய முடிகின்றது.

### உழவு

ஒரு நாட்டின் வளர்ச்சிக்கு அடிப்படையான, அவசியமான ஒன்று தான் உழவுத் தொழில். மனிதன் உயிர் வாழத் தேவையானது உணவு. அவ்வுணவை வழங்குவது உழவுத் தொழிலே ஆகும். இவற்றில் அகநானூற்றுப் பாடல் இடம்பெற்றுள்ளன.

### பழக்க வழக்கங்கள்

உலகில் தோன்றிய செயல்களை முன்னோர்கள் காரண காரியத்தோடு வகுத்துள்ளனர். கடவுள்களைப் பிற்கால மக்கள் உணர்வுகளாலும், செயல்களாலும் பின்பற்றியுள்ளனர். அதனை தொன்று தொட்டு பழக்க வழக்கமாகப் பின்பற்றியதே சங்க கால சமூகப் பண்பாட்டு மரபாக அமைகிறது.

சங்க காலத் தமிழ் மக்களிடையிலேயிருந்த பல பழக்க வழக்கங்களையும் அகநானூற்று பாடல்களிலே காணலாம்.

"யாழை இசைக்கத் தொடங்கும்போது, முதலிலே கடவுளை வாழ்த்துவர். பிறகுதான் முறையாக யாழிசைப்பர். **(அகம்,பா.14)**

பார்ப்பனர்களிலே யாகஞ் செய்யாத பார்ப்பனர்கள் என்று ஒரு வகுப்பினர் இருந்தனர். சங்குகளை அறுத்து வளையல்கள் செய்வது அவர்கள் தொழில் **(அகம்,பா.24)**

வழி நடப்போர் கட்டுச் சோறு கட்டி எடுத்துச் செல்வர். அந்தக் கட்டுச்சோற்று மூட்டையைக் கழியிலே கோத்துத் தோளிலே வைத்துக் கொண்டு நடப்பார்கள் இதனால் அதற்குத் "தோட்பதன்" என்று பெயர். பதன்-உணவு. **(அகம்,பா.79)**

இம்மையிலே நன்மை செய்வதனால் தீமையில்லை நன்மைதான் கிடைக்கும் என்பது ஒரு பழமொழி **(அகம்,பா.101)**

உறந்தையிலே, காவிரிக் கரையிலே பங்குனி மாதத்திலே விழா நடைபெறும் **(அகம்,பா.137)**

கார்த்திகையிலே உரோகிணியும், சந்திரனும் சேரும் நடு இரவிலே வீதிகள் தோறும் விளக்கேற்றி வைப்பார்கள். மலர் மாலைகளைக் கட்டித் தொங்கவிடுவார்கள். பலரும் கூடித் திருவிழாக் கொண்டாடுவார்கள். (இது கார்த்திகை விழா) (அகம், பா.141)

பெண்கள் மாலைக் காலத்திலே பிறையை வணங்குவார்கள். **(அகம்,பா.239)**

வேப்பமரத்திலே தெய்வம் குடிகொண்டிருப்பதாக நம்பினர். **(அகம்,பா.309)**

நள்ளிரவே பேய்கள் நடமாடும் நேரம் என்று நம்பினர். **(அகம்,பா.311)**

போர்க்களத்திலே மாண்ட வீரர்களுக்கு நடுகல் நாட்டுவார்கள். அக்கல்லிலே அவர்களுடைய பெயரையும் பெருமையையும் எழுதி வைப்பார்கள் **(அகம்,பா.67)**

பல்லி சொல்லுக்கும் பலன் உண்டு என்று நம்பினர். தெய்வங்களுக்குப் பலியிட்டு வணங்கினர் ஊழ்வினையிலே நம்பிக்கை வைத்திருந்தனர். இவைபோன்ற இன்னும் பல பழக்கவக்கங்களை இந்நூலிலே காணலாம் இப்பழக்க வழக்கங்கள் அனைத்தும் சமூகப் பண்பாட்டு மரபினைத் தெரிவிப்பனவாக உள்ளன.

### நம்பிக்கை

மனிதனானவன் முதலில் இயற்கைக்கு பயந்தும்,தன்னைவிட உயர்ந்த ஒன்று இருப்பதாக உணர்ந்தும், அதனை நம்பி சில செயல்களை தொடர்ந்து செய்து வந்துள்ளான் எனவே, தான் வாழும் சூழ்நிலைக்கு ஏற்ப பழக்க வழக்கங்களை மேற்கொண்டான். இதன் முதிர்வுநிலையே நம்பிக்கையாகும் என அறிய முடிகிறது.

### முடிவுரை

அகநானூற்றில் காணலாகும் பாடல்கள் வெறும் அகப்பொருள் ஒழுக்கத்தை மட்டும் சொல்லவில்லை..அகப்பொருளோடு புறப்பொருட் செய்திகளையும் இணைத்துக் கூறப்படுகின்றன. தமிழ் நாட்டின் பண்டைய சமூக நாகரிகப் பண்பாட்டு மரபினை காண்பதற்கும், தமிழக வரலாற்றை அறிவதற்கும் இந்நூல் சிறந்ததொரு கருவியாகும்.

மேலும் தமிழர்களின் சிறந்த சமூகப் பண்பாட்டு மரபாக போற்றப்படும் திருமணம் முதல் நம்பிக்கைகள் ஈறாக இக்கட்டுரையில் கூறப்பட்டுள்ளது. இதன் வழி சமூகப் பண்பாட்டு மரபினையும் அறியமுடிகிறது.

**பார்வை நூல்கள்**


1. தமிழர் திருமணம் - முனைவர் வி.சி. சசிவல்லி
2. சங்க கால வாழ்வியல் - ந. சுப்ரமணியன்
3. தொல்காப்பியம் - இளம்பூரணார் உரை
4. அகநானூறு - முனைவர் வி.நாகராசன்
5. தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும் - கே.கே. பிள்ளை
6. திருக்குறள் - பரிமேலழகர் உரை
7. தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் - முனைவர் க. காந்தி

URKUND

# Urkund Analysis Result

**Analysed Document:** PHD Thesis - Sathya.S.pdf (D60604919)
**Submitted:** 09/12/2019 12:46:00
**Submitted By:** bdulib@gmail.com
**Significance:** 0 %

## Sources included in the report:

5b1775ee-1052-4090-93f3-b2cd70f882e9
6db7e62f-1eea-4c3b-afea-64f910b601c7
134bb6b2-d569-4f61-9d37-04e393b7c28c
02de1c3d-4851-4e41-aaac-b4c6fede26fb
60ac6410-cf73-4b57-a46d-4cc679377252

## Instances where selected sources appear:

8

# முடிவுரை

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் இவ்வாய்வேட்டில் அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபோடு தொடர்புடையச் செய்திகளை புதிய பார்வையில் இணைத்துப் பார்க்கும் முயற்சியே சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டதின் முடிவுகளைப் பின்வருமாறு தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

இயல் ஒன்றில் சங்க அக இலக்கியம் என்று பார்த்தால் உலக இலக்கியங்களில் எவற்றிலும் இல்லாத உயர்ந்த நிலையைக் கொண்டது என்று குறிப்பிடலாம். அகப்பாடல்கள் அனைத்தும் முதல், கரு, உரி என்ற முப்பொருள்களை இணைத்துத் திணை என்று அழைக்கப்படும். அகத்திணை ஐந்து நிலத்தையும், இருவகைப் பொழுதையும் கொண்டதாகும். இந்த அடிப்படையில் அமைந்தவை அக இலக்கியங்கள் ஆகும்.

சங்கம் என்ற ஓர் அமைப்பு இருந்தனவற்றை பண்டைய இலக்கியங்கள், காப்பியங்களில் இடம் பெற்றுள்ள பழமையான கருத்துக்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், இலக்கணம் மற்றும் இலக்கிய உரையாசிரியர்களால் கூறப்பட்டுள்ள மிக முக்கியமான

கருத்துக்கள் போன்றவைகளை சங்கம் என்ற அமைப்பு இருந்தமைக்கான ஓர் ஆதாரமாக கொண்டுள்ளது.

சங்க அக இலக்கியங்கள் வரிசையும் பட்டியலிடப்பட்டுள்ளது. மேலும் பண்பாடு, மரபு போன்றவற்றின் தெளிவான விளக்கங்களும் இவ்வியலில் கூறப்பட்டுள்ளன.

சங்க அக இலக்கியங்களில் பண்பாட்டு மரபுகள் என்னும் ஆய்விற்கு மூலச் சான்றாக எடுத்துக் கொள்ளப்பட்ட சங்க அக இலக்கியங்கள் பற்றிய செய்திகளைச் சங்க அக இலக்கியமும் பண்பாட்டு மரபும் என்னும் இவ்வியலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளதோடு சங்க அக இலக்கியத்தில் உள்ள பாடல்கள் அனைத்தும் பண்பாட்டு மரபோடு இணைத்துக் காணும் போக்கு காணப்படுகிறது என்பதை இவ்வியலின் மூலமாக அறியமுடிகிறது.

‘இல்லறப் பண்பாட்டு மரபு’ என்ற இரண்டாம் இயலில், இல்லறம் என்ற சொல்லிற்கு கணவனும் மனைவியும் இல்லத்தில் கூடி வாழும் வாழ்க்கை இல்வாழ்க்கை ஆகும். அவ்வாழ்க்கை சிறப்பாக அமைய அறத்தோடு வாழ வேண்டும் இல்லறத்தில் அதிக கடமைகள், பெண்களுக்கே இருந்தது. தன்னுடைய கணவனைப் பாதுகாப்பது, வீட்டு வேலைகள் செய்வது, குழந்தைகளைப் பாதுகாப்பது போன்ற பல

கடமைகள் பெண்ணிற்கே அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது என்பனவற்றை அறியமுடிகிறது.

பெண்களின் இயல்பு, இல்லற வாழ்வின் தனித்தன்மைகள், ஒப்புமை, இறைவழிபாடு ஆகியவை இவ்வியலில் சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. இருமனம் இணைந்து திருமணமாகிறது. ஒரு கன்னிப் பெண்ணின் கூந்தலிலே மலர்சூடி இவள் எனக்கு உரிமையாகிறாள் என்று ஒருவன் ஏற்றுக்கொண்டு இருவரும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேர்வதே திருமணமாகும். இவற்றில் களவு, கற்பு வாழ்க்கைப் பற்றி பேசப்பட்டுள்ளது. திருமணம் நடப்பதற்கான நல்ல நேரம் பார்த்தல், திருமணச் சடங்கு கழித்தல், நிச்சயம் செய்தல், மணமுறை, பண்டைக் காலத்தில் நிகழ்ந்த திருமண வகைகள் போன்றவை சங்க அக இலக்கியங்கள் வழியாக பண்பாட்டு மரபோடு எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

இல்லறப் பண்பாட்டு மரபில் விருந்தோம்பல் இன்றியமையானதாக கருதப்படுகிறது. வீட்டிற்கு வரும் விருந்தினருக்கு நல்ல முறையில் உணவு சமைத்து முகமலர்ச்சியோடு அவற்றினைப் பரிமாறி பெருமை சேர்க்கின்றனர். விருந்தோம்பல் கணவன், மனைவி இவர்களுக்கு மட்டுமல்ல எல்லோருக்கும் உரியதாகும். இவ்வாறாக அக்காலத்தில் விருந்தோம்பல் முறைகளானது கடைபிடிக்கப்படுகிறது.

விருந்தோம்பலுக்கு அடுத்தப்படியாக மக்கட்பேறு குறிப்பிடப்படுகிறது. பெறுதற்கு அரிய சிறப்பான செல்வம் மக்கட் செல்வமாகும். ஒருவனுக்கு எவ்வளவு பணம், நகை, ஆடம்பர வாழ்க்கை இருந்தால் மட்டும் போதாது அது அவனுக்கு மகிழ்ச்சி தராது. அவனுடைய குலம் காக்க மக்கட்பேறு முக்கியத்துவம் வாய்ந்ததாக மதிப்பிடப்படுகிறது. மேலும் ஈதல் பற்றியும் இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஈதலுக்கென்றே இல்லறத்தான் தன்னை நாடி வருபவருக்கு இல்லை என்று கூறாத நெஞ்சம் கொண்ட தலைவன் பொருள் மீது கொண்ட பற்றினால் மட்டுமல்ல ஈதலே ஒருவனின் இல்லறக் கடமையாகும் என்பதை நினைவில் கொண்டுதான் பிரிந்துள்ளான் என்பனவற்றையும், ஒருவன் செய்யும் அறங்களில் முக்கியமானது ஈகையறம் இவற்றை சங்க அகப் பாடலின் மூலமாக இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் இயலில், 'கலைப் பண்பாட்டு மரபு' என்னும் தலைப்பில் கலைகள் என்பது மனிதனின் அறிவினாலும் கற்பனையினாலும் உருவானவை, உழைப்பில் உருவாகி உள்ளத்தை மகிழ்விப்பது, ஒரு நிலை இன்றி அலையும் மனத்தைக் கலையாமல் நிலைப்பெறச் செய்வதும் கலையாகும். மேலும், கலை, கலைத்தோற்றம், கலை பற்றி அறிஞர்களின் விளக்கம், கலையின் வகைகள் அவற்றில் கட்டடக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, சிற்பக்கலை, ஆடற்கலை, கூத்துக்கலை போன்றவற்றின் மூலம் தெளிவான விளக்கங்களை இவ்வியலில் குறிப்பிடுகின்றன.

கலைகளின் வகைகளாக அறுபத்து நான்கு வகைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் சிறப்பான வகைகளாக கட்டடக்கலையானது மக்கள் கண்ட கவின்கலைகளில் ஒன்று. ஆரம்பக் காலத்தில் மனிதன் மலைக் குகைகளில் தங்கி தன்னுடைய வாழ்க்கையை நடத்தினான். பிறகு நாகரிக வளர்ச்சியின் காரணமாக படிப்படியாக மண், சுடுமண், கற்கள், மரங்கள் முதலியவற்றைப் பயன்படுத்திக் கட்டடங்கள் கட்டினான். பிற்காலத்தில் அக்கட்டடங்கள் பெரிய மாளிகை, அரண்மனை, கோயில் போன்ற பலவகையில் வளர்ச்சிப் பெற்ற நிலையை இவ்வியல் குறிக்கிறது. அடுத்தப்படியாக ஓவியக்கலைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. மனிதன் நாடோடியாக வாழ்ந்துத் திரிந்தக் காலத்தில் பல்வேறு விலங்குகள், பறவைகள் போன்றவற்றை வேட்டையாடியும் உண்டான். அவ்விலங்குகளை மனதில்கொண்டும், தான் கண்ட மனிதர்கள், மரங்கள் மற்றும் தான் பார்த்த அனைத்தையும் ஓவியமாக பாறைகளில் வரைய ஆரம்பித்தான். இதன் வளர்ச்சி நிலையே இன்று ஓவியமாக வளர ஆரம்பித்தது. மேலும் ஓவியக்கலைப் பற்றிய பிற செய்திகளும் இங்கு இடம்பெற்றுள்ளது.

இசை என்றால் உள்ளத்தோடு பொருந்துதல் எனப் பொருள்படும் இசை என்பது இனிமையான ஒலிகளின் சேர்க்கையாகும். ஆதிக்காலத்து மனிதன் உணவிற்காக விலங்குகளை கொல்லவும், பறவைகளை வீழ்த்தவும், காய்கனிகளை உயர்ந்த மரத்திலிருந்து

வீழ்த்தவும் கவண் கல்லைப் பயன்படுத்தினான். இவற்றிலிருந்து எழுந்த ஓசையே இசை மற்றும் அதன் கருவிகள் தோன்றக் காரணம். இவ்வாறாக இசைக்கலை வளர்ந்தது. இசைக்கலைப் பற்றிய பண்கள், கருவிகள், சங்க காலத்து இசைக்கலை போன்றவைப் பற்றியும் இவ்வியலில் குறிக்கிறது.

பண்டையத் தமிழர்கள் சிற்பக் கலையிலும் திறமைமிக்கவராக விளங்கினர். சிற்பங்களை மரத்திலும், மண்ணிலும், கல்லிலும் வெளிப்படுத்தினர். போர்களத்தில் சிறப்பாக ஈடுபட்டமைக்காக நடுகல் நடும் வழக்கம் பண்பாட்டு மரபாக இருந்து வருகிறது. அந்தக் கல்லில் வீரனது உருவத்தைச் செதுக்கி அதற்கு பெயரும், புகழையும் பதிப்பது சிற்பக்கலையின் வேலைப்பாடாகும். பல்வேறு அரசர்களின் சிற்பக்கலை, அகநூல்களின் சிற்பக்கலை போன்றவை இவ்வியலில் கூறுகிறது.

ஆடற்கலையில் இசையும், கூத்தும் தொடர்புடையதாக கருதப்படுகிறது. அக்கால மக்களின் பொழுதுபோக்கிற்காக இக்கலைகள் நடத்தப்பெற்றன. மேலும், கூத்து அதன் வகைகள் போன்ற பல்வேறு செய்திகள் சங்க அக இலக்கியங்களின் வழியாக பண்பாட்டு மரபினை எடுத்துக்கூறும் விதமாக இவ்வியலில் அமைக்கப்பட்டுள்ளது.

இயல் நான்கில், 'சமயப் பண்பாட்டு மரபு' என்னும் இயலில் சமயம் என்பது வாழ்க்கை முறை, வழிபாடு என்பது மனிதனை

நெறிபடுத்தும் செயல், நெறிபடுத்தி அவனது உள்ளத்தைப் பக்குவப்படுத்தும் கருவியாகத் திகழ்கின்றது. குறை நீக்கத்திற்கும், நிறை நலம் பெறுவதற்கும் சமயம் இன்றியமையதாகும். சமயம் தோற்றம், அறிஞர்களின் விளக்கம், மதம், பரம்பொருள் போன்றவை பற்றியும் இவ்வியலில் கூறுகிறது.

வழிபாடு எனும் சொல் வழிபடு என்ற சொல்லிலிருந்து தோன்றுகிறது. எந்த ஒரு செயலையும் தொடங்கும்முன் இறைவனை வழிபடுவது தொன்றுதொட்டு வழங்கி வரும் ஒரு செயலாக இன்றுவரை நடந்து வருகிறது. வழிபாட்டின் முதன்மையாக இறைவழிபாட்டினைக் குறிக்கிறது. ஐந்து நிலத்தில் வாழும் மக்களின் வழிபாட்டு முறைகள் பற்றியும் தெளிவாக கூறுகிறது. மேலும் வழிபாட்டின் வளர்ச்சிக்கான மூலங்கள் என்று பார்க்கும் போது இயற்கை வழிபாட்டிற்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது.

இறுதியாக சமயப் பண்பாட்டு மரபில் திருவிழாக்கள் பற்றியும் கூறப்பட்டுள்ளது. திருவிழா என்றாலே அனைவரும் ஒன்றுசேரும் இடமாகக் கருதப்படுகிறது. மனதிற்கு மகிழ்ச்சியைத் தரக்கூடியது. சங்க அகப் பாடல்களின் வழியாக எவ்வகையான திருவிழாக்கள் இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன என்பனவற்றை இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இயல் ஐந்தில், ‘சமூகப் பண்பாட்டு மரபு’ என்னும் இயலில் சமூகம் என்பது அனைவரையும் இணைக்கும் பாலமாகக் கருதப்படுகிறது. சங்கப் புலவர்கள் நமது பாரம்பரியத்தின் பெருமைகளையும், மொழியின் வளத்தையும், மக்களின் நாகரிகம், பண்பாட்டு மரபு, பழக்கவழக்கம் போன்றவற்றையும் இவ்வியலில் எடுத்துக் கூறுகின்றனர். உணவு பற்றிய செய்திகள் சமூகப் பண்பாடாகக் குறிக்கப்படுகிறது. அகப் பாடல்களில் உணவு இன்றியமையானது ஆகும். உணவு இல்லையெனில் உயிர்கள் இல்லை என்ற அடிப்படையில் உணவிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

மனிதனின் அடிப்படையான தேவைகளில் அடுத்த நிலையாக ஆடையைக் குறிக்கின்றனர் எவ்வகையான ஆடைகள் சமூக மக்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன. என்பனவற்றையும் ஆடை வகைகள் போன்றவை சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. அடுத்தப்படியாக அணிகலன்கள் பற்றி அதிகமாகப் பேசப்பட்டிருக்கிறது. எவ்வகையான அணிகலன்கள் சங்க காலத்தில் அணியப்பட்டுள்ளன போன்றவற்றையும், குடியிருப்பு பகுதிகள் பண்டையக் காலத்தில் இருந்த முறையினையும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன.

விளையாட்டுக்கள் பற்றியும் அதிலும் சிறப்பாக ஆண்கள் விளையாடும் விளையாட்டு, பெண்கள் விளையாடும் விளையாட்டு, அதன் பல வகைகளையும் குறிக்கப்படுகிறது. மேலும் சங்க கால மக்கள்

கொண்ட நம்பிக்கையான சூளுரைத்தல் போன்றவையும் மக்களின் தொழில்கள், பழக்கவழக்கங்கள் போன்ற பல தரவுகள் இவ்வியலில் எடுத்துக்கூறப்பட்டுள்ளது.